தொகுதி 4

# தமிழாய்வு

கல்விநெறிக் காவலர்

## தாமரைத்திரு. நே.து. சுந்தரவடிவேலு அவர்கள் பாராட்டு மலர்



'திட்பமும் நுட்பமும்'

பொதுப் பதிப்பாசிரியர்:
பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி,
எம்.ஏ., எம்.லிட்., பிஎச்.டி.,
டிப். மானிடவியல், அரசியல் & ஆட்சியியல்,
தமிழ்த்துறைத் தலைவர்,
சென்னைப் பல்கலைக் கழகம்.

உதவி:
தமிழ்த்துறை ஆசிரியர்களும் மாணவர்களும்




சென்னைப் பல்கலைக் கழக வெளியீடு
1976

# TAMIḺĀYVU

(Annals of Tamil Research)

## Padmasri N. D. Sundaravadivelu Felicitation Volume

**"CLARITY AND PRECISION"**

*General Editor :*
DR. N. SANJEEVI, M.A., M.Litt., Ph.D.,
Dip. in Anthro, Pol. & Pub. Admn.,
Professor and Head of the Department of Tamil,
University of Madras.

*Assistance :*
STAFF & STUDENTS OF THE DEPARTMENT OF TAMIL

**DEPARTMENT OF TAMIL**
UNIVERSITY OF MADRAS
**1976**

# பதிப்புரை

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை 1962ஆம் ஆண்டு தொடங்கி ஒவ்வோராண்டும் வெளியிட்டுவரும் 'தமிழாய்வு' இதழின் பண்பும் பயனும் நிறைந்த பாங்கை ஆய்வுச்சுவை அறிந்தார் அனைவரும் அறிந்து போற்றி வருவது பூரிப்புக்குரியதாய் உள்ளது. தமிழாய்வின் முதல் தொகுதி வெளிவந்த சில திங்களுக்குள்ளேயே தீர்ந்துவிட்டது. தமிழறிஞர்களின் விருப்பத்திற்கிசைய அது மறு பதிப்பும் பெற்றது.

தமிழாய்வின் முதல் தொகுதி தமிழ்த் தாய்க்குப் படைத்த படையல் ஆகும். 2ஆம் தொகுதி முன்னோடித் தமிழாராய்ச்சியாளருக்கும் சிறப்பாகப் பேராசிரியர் டாக்டர் ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கட்கும் உவந்தளித்த உரிமைப் பொருளாய்க் கொள்ளலாம். 3ஆம் தொகுதி சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்—மதுரைப் பல்கலைக் கழகத்தின் முன்னாள் துணைவேந்தர்—பேராசிரியர் டாக்டர் மு. வரதராசனார் அவர்களுக்கு வழங்கிய படையல் ஆகும். இந்த 4ஆம் தொகுதியோ ஆரம்பப் பள்ளிக் கல்வி முதல் ஆராய்ச்சி உயர் கல்வி வரை அனைத்து நிலைகளிலும் கல்விப் புரட்சி நடத்திய கல்வி நெறிக் காவலர்—தமிழுக்கென்று முதன்முதலாக ஒரு பல்கலைக் கழகத்தின் சார்பில் ஆய்விதழ் ஒன்று புகழுடன் சிறக்கத் தண்ணருள் புரிந்தவர் — தாமரைத்திரு. நெ.து. சுந்தரவடிவேலு அவர்களின் தன்னலமற்ற தமிழ் வாழ்வுக்கு நல்கும் நன்றிக் காணிக்கை ஆகும்.

இந்த 4ஆம் தமிழாய்வு இதழில் வழக்கம்போல் தமிழ்த்துறை ஆசிரியர்களின் ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெற்று வலம் வருகின்றன. கல்வி நெறிக் காவலர் தாமரைத்திரு. நெ. து. சு. அவர்களின் தொண்டைப் போற்றிப் பல்கலைக்கழகப் பேரவை, கல்விக்குழு ஆகியவற்றில் நிறைவேற்றப்பட்ட பாராட்டுத் தீர்மானங்கள் இவ்விதழில் பதிவுசெய்யப்பட்டுள்ளன. சென்னைப் பல்கலைக் கழகத்தின் சிறப்பு வாய்ந்த நூலகர் திரு. பு. அ. மோகனராசு அவர்கள் கல்வி நெறிக் காவலர்பற்றி இவ்விதழில் உருவாக்கியுள்ள நூற்றொகை அப்பெரியார் நூறாண்டு வாழ வாழ்த்தும் நேரிய-சீரிய வாழ்த்தாகும்.

கண்ணுக்கும் கருத்துக்கும் இனிய தமிழ்க் காவலராய் விளங்கி இன்னும் பல்லாண்டுக் காலம் வாழ்ந்து தமிழ்நாட்டை வாழ்விக்கும் வாய்ப்புப் பெற்றிருந்தும் எதிர்பாரா வகையில் மாய்ந்துவிட்ட உயர்

தமிழர் டாக்டர் அ. சிதம்பரநாதன் (செட்டியார்) அவர்களின் ஆங்கிலக் கட்டுரை ஒன்று இவ்விதழில் முதன்முதலாக அச்சு வாழ்வு பெறுகிறது. இக்கட்டுரை சென்னைப் பல்கலைக் கழகத்தின் சார்பில் நடைபெற்ற கருத்தரங்கொன்றில் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடாகிய ஆங்கிலம்—தமிழ்ச் சொற்களஞ்சியத்தின் ஆசிரியராக இருந்தபோது டாக்டர் சிதம்பரநாதன் அவர்கள் படித்த கட்டுரை ஆகும். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தால் உருவாக்கப்பட்டு அனைத்துலகப் புகழ்பெற்று வரும் மொழியியல் அறிஞர் டாக்டர் இ. அண்ணாமலை அவர்களின் கட்டுரை ஒன்றும் இத்தொகுயில் சிறப்பிடம் பெறுகிறது. இக் கட்டுரை, மைசூர்—இந்திய மொழிகளின் மைய நிறுவனத்தின் துணை இயக்குநராக விளங்கும் டாக்டர் அண்ணாமலை அவர்களால் அந் நிறுவனத்தின் பெருந்துணையால் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறை வரலாற்றிலேயே முதன்முறையாக மிகச் சிறப்பாக நடத்தப் பட்ட கோடை மொழியியல் பள்ளியில் நிகழ்த்தப்பெற்ற உரையாகும்.

சென்ற இதழின் தொடர்ச்சியாக, கலைக்களஞ்சியத்தில் இடம் பெற்றுள்ள இடப்பெயர்கள் பற்றிய வகை தொகைப் பட்டியல் திரு. கு. மோகனராசு அவர்களால் உருவாக்கப்பட்டுள்ளது. இத்தகைய பட்டியல்கள் தமிழாராய்ச்சி தழைப்பதற்குத் தக்க துணையாகும். இளம் ஆராய்ச்சியாளர்களுள் ஓர் இளஞாயிறாய் இலங்கும் திரு. சு. சண்முகசுந்தரம் அவர்கள் தமிழ்நாட்டுப்புற இயல் பற்றிய நூல்—கட்டுரை அடைவு ஒன்றையும் உருவாக்கியுள்ளார்கள். என் பரிவுரை காரணமாகச் சில ஆண்டுகளுக்கு முன்பு சென்னைப் பல்கலைக் கழகத்து முதுகலைத் தமிழ்ப்பாடப் பகுதிக்கு நாட்டுப்புறவியலும் பண்பாடும் ஒரு விருப்பப் பாடமாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. அதற்குச் செயல் வாழ்வு தந்த பெருமை முன்னோடிக் கல்லூரியாகிய சென்னைப் பச்சையப்பர் கல்லூரியின் தனியுரிமை ஆகும். அக் கல்லூரியில் அவ் விருப்பப் பாடத்தை எடுத்துப் படித்து இந்நாள் அப் பொருள் பற்றிய ஆராய்ச்சி நூலாசிரியராகவும் உயர்ந்துள்ள திரு. சண்முகசுந்தரத்தின் பணியால் நாட்டுப்புறவியலும் பண்பாடும் நல் வாழ்வு பெறுதல் நனி உறுதி.

தமிழ்நாட்டின் மூத்த பெருமகனார்—பல்லாண்டுக்காலம் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்ப் பாடநூற் குழுவின் தலைவராய் விளங்கிய தந்தையார்—சென்னை அறநிலையப் பாதுகாவலர் கழகம், பொதுப் பணித் தேர்வாளர் குழு ஆகியவற்றின் புகழ் வாய்ந்த முன்னாள் தலைவர்—அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் மேலைநாள் துணை வேந்தர்—திவான்பகதூர் தி. மூ. நாராயணசாமிப்பிள்ளை அவர்கள் அன்னை சொர்ணம்மாள் அறக்கட்டளைச் சொற்பொழிவாக நிகழ்த்திய திருவானைக்காக்கோவில் பற்றிய ஆய்வுரை இவ்விதழுக்குத் தெய்வ மணம் சேர்க்கிறது. ஆம்! இந்த நான்காம் தொகுதி நாவலடியில் கோவில் கொண்ட எம்பெருமான் புகழ்போற்றும் திருப்பணிச் செல்வர் ஆராய்ச்சிப் புலவராகவும் இருக்கும் அருமை பெருமையை

எடுத்துக்காட்டுகிறது. இதனினும் திருப்பணிச் செல்வருக்கு நாம் செய்யத்தக்க திருப்பணி வேறு எதுவாக இருத்தல் இயலும்?

'அச்சில் வாரா அருந்தமிழ்'ப் பகுதியில், அடிமதிக்குடி அய்யனூர் பிள்ளைத்தமிழ் புலவர் மு. சண்முகம் பிள்ளை அவர்களின் புலமைத் திறத்திற்கும் பதிப்பாண்மைக்கும் சான்றாக விளங்குகிறது. சென்ற இதழின் தொடர்ச்சியாக, சென்னைப் பல்கலைக் கழகத்துள் நிலவும் கிழக்கியல் ஏடகத்தில் இருந்த 'சொற்றொகை & உரையாடல்' (Vocabulary and Dialogue) ஆராய்ச்சிக் குறிப்புகளுடன் இவ்விதழில் நிறைவு பெறுகிறது. இவ்வேட்டை நாட்டுக்குக் காட்டுதற்கு எப்போதும்போல் எனக்குக் கைகொடுத்த திரு. வ. செயதேவன் அவர்களுக்கு என் நன்றி உரியது. முன்னிதழிலேயே தெரிவித்தது போல் மேற்குறிப்பிட்ட ஏடகத்திற்கும் நம் நன்றி உரியது.

முன்னிதழ்களைப் போலவே மதிப்புரை மாலையும், தமிழ்த்துறைச் செய்திகளும் இவ்விதழிலும் இடம்பெற்றுள்ளன. மிகச் சிறப்பாக இம்மலர்பற்றிக் குறிப்பிடத்தக்கது இந்திய அரசின் இன்னுதவியால் இமயப் புகழுடன் உலகப் புகழ்பெற்றுவரும் சிம்லா இந்திய உயர் ஆராய்ச்சி நிலையத்தின் பத்தாமாண்டு நினைவாக அந்நிலையத்தைப் பற்றிய குறிப்புகளும் கருத்தரங்கக் குறிப்புகளும் இதில் இடம் பெற்றுள்ளமையாகும்.

மனித வாழ்வின் மாட்சியே ஆய்வில்தான் தோய்ந்துள்ளது. அந்த ஆய்வும் தோய்வும் தமிழாய்வாய்த் தழைப்பதற்குச் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை தனிச்சிறப்பு வாய்ந்த இவ் ஆய்விதழ் வாயிலாக ஆற்றிவரும் பணிகளைப் போற்றிப் பயன்படுத்திக் கொள்ளுதல் தமிழ்கூறு நல்லுலகத்தின் தனிப்பெரும் கடமை ஆகும். மழையில்லாப் பயிர்போல் மக்கள் ஆதரவில்லா எந்த ஆராய்ச்சியும் தலைதூக்க முடியாது. தமிழை ஆதரிப்பார் இல்லை என்ற பழியே எஞ்சும்; மிஞ்சும். எனவே, தமிழ்நாட்டு மக்கள் தங்கள்—தாய்மொழி யின்—நல்வாழ்வு கருதியேனும் தமிழாய்வு தொடரவும் படரவும் துணைபுரிவார்களாக.

சென்னை-5,
3—6—'76.

ந. சஞ்சீவி.

# பொருளடக்கம்



கல்விநெறிக் காவலர்
தாமரைத்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்கள்
துணைவேந்தர், சென்னைப் பல்கலைக் கழகம்
*(1969 — 1975)*

# TRIBUTES TO PADMASRI N. D. SUNDARAVADIVELU BY THE UNIVERSITY OF MADRAS

Dr. Malcolm S. Adiseshiah moved the following resolution :

" *The Senate of the University of Madras,* meeting on 7th November 1975,

*Wishing* to pay homage to Thiru N. D. Sundaravadivelu who served as Vice-Chancellor for six years 1969-1975,

*Recalling* his inestimable services to the University in consolidating its finances and attempting to relate its research and teaching functions to the employment opportunities available in the country,

*Thanking* him for the wisdom and sagacity that he brought to the working of the Senate,

*Conveys* to him its profound appreciation of his services as Vice-Chancellor of the University."

The resolution was unanimously carried.

* * *

Dr. Malcolm S. Adiseshiah moved the following resolution :

" *The Academic Council of the University of Madras,* meeting on 6th October 1975,

*Recalling* the valuable services rendered by Thiru N.D. Sundaravadivelu to the University as Vice-Chancellor for six years (1969-1975),

*Appreciating* in particular the two revisions of the syllabi and a number of job-oriented courses that he helped to develop in the University,

*Expressing* its admiration for the wisdom, sagacity, tact and maturity of judgment that he brought to his work as Vice-Chancellor,

*Places* on record its sense of deep appreciation and grateful thanks for his inestimable service to the University."

The resolution was unanimously carried.

* * *



பழைய ராஷ்டிரபதி நிவாஸ் — புதிய இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம், சிம்லா.

# இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம்

## ராஷ்டிரபதி நிவாஸ்

## சிம்லா - 5.

* இமயத்தின் மடியில் இருப்பது.

* இந்தியக் குடியரசின் முன்னாள் தலைவர் டாக்டர் இராதா கிருஷ்ணன் நன்கொடை—நல்லறிவுக் கொடை.

* நீண்ட/குறுகிய கால ஆராய்ச்சித் திட்டங்களை நிறைவேற்றும் ஆய்வுக் களம்.

* இந்திய/ஆசியப் பண்பாடு பற்றியும் பழங்குடி மக்கள் மரபு பற்றியும் சிறப்பாய்வு நடைபெறும் சிந்தனைப் பட்டறை.

* பாரதத்தின் பல்வேறு அறிஞர்களுக்கும் அறிவுத் தாகம் தீர்க்கும் ஆராய்ச்சித் தாயகம்.

* 50,000 நூல்கள், 1,000 ஆய்விதழ்கள், எலக்ட்ரானிக் கருவிகள் கொண்ட நூலகம்—தேர்ந்த நூல்களின் வெளியீட்டகம்.

* அவ்வப்போது பல்பொருள் பற்றியும் கருத்தரங்குகளை நடத்தி அறிவுக் கதிர் பரப்பும் ஆய்வுக் கதிரவன்.

* பன்மைக்கும் ஒருமைக்கும் — பழமைக்கும் புதுமைக்கும் பாலம்.

* இயக்குநர் டுபேயின் இதயம் போல் பெரியது; பெருமையுடையது.

* கருத்துரிமை வழிபாடு நடைபெறும் கலைக்கோயில்.

குறிப்புத் தொகுப்பு: டாக்டர் ந. சஞ்சீவி
20-10-1975.

இந்திய உயர் ஆராய்ச்சி நிலையப் பத்தாண்டு
நிறைவின் நினைவு

சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறை வெளியீடு
தமிழாய்வு-4.



இந்திய உயர் ஆராய்ச்சி நிலைய இயக்குநர்
பேராசிரியர் டாக்டர் எஸ். சி. டுபே அவர்கள்



இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம் 1—8, செப்டம்பர், 1975இல் நடத்திய
'இந்தியப் பண்பாட்டில் எதிர்ப்பு / மறுப்பு / சீர்திருத்த இயக்கங்களின் மரபு'
பற்றிய அனைத்திந்தியக் கருத்தரங்கில் இமாசலப் பிரதேச முதல்வரும்
சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவரும்



இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம் 1—8, செப்டம்பர், 1975இல் நடத்திய
'இந்தியப் பண்பாட்டில் எதிர்ப்பு | மறுப்பு | சீர்திருத்த இயக்கங்களின் மரபு'
பற்றிய அனைத்திந்தியக் கருத்தரங்கில் இமாசலப் பிரதேச முதல்வர், ஆளுநர்
ஆகியோருடன் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர்



இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம் 1—8, செப்டம்பர், 1975இல் நடத்திய
'இந்தியப் பண்பாட்டில் எதிர்ப்பு|மறுப்பு|சீர்திருத்த இயக்கங்களின் மரபு'
பற்றிய அனைத்திந்தியக் கருத்தரங்கில்
சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவர்

## THE TRADITION OF DISSENT/PROTEST/REFORM IN TAMIL LITERATURE

* The words of northern language (*Vaḍacol*) become fit to be used in Tamil when they adopt the Tamil sounds *discarding* their northern ones.

—Tolkāppiyam, II : 9 : 402 (C. 400 B.C.)

* Āy *is not a trader* in the business of *Aṟam* (Dharma) who calculates the profit in next-birth by actions done in this birth.

—Puṟanāṉūṟu, 134 (C. 100 B.C.)

* To kill not e'en a single life and not to eat its meat
Is far better than thousand *fire-fed sacrifices* neat.

—Tirukkuṟaḷ, 259 (C. 21 B.C.)

* I avenged the *Royal-city* (of the king who committed the injustice) and hence I am not at fault.

—Silappatikāram, 21 : 42 (C. 200 A.D.)

* To know what is Dharma, without forgetting, hear: It is just to give food, cloth and shelter to *all* human beings. There is nothing else but for this.

—Maṇimēkalai, 25 : 228 - 231 (C. 200 A.D.)

* We are *slaves* to none.

—St. Tirunāvukkarasar: Tēvāram (800 A.D.)

* I will burn out *with my words,* all the worlds that have no boundaries.

—Kamparāmāyaṇam, 5 : 5 : 18 (1200 A.D.)

* Are you the only king? Is your country alone fertile? *Did I learn Tamil because of you*? Is there a place that will not take me with patronage? Is there really a king who will not take me quickly?

—A Stray Stanza attributed to Kampaṉ (1200 A.D.)

* The time has gone when we called the Brahmin as Iyer; Also has gone the time when we called the white *Parańgi* as *Durai*.

—Subrahmaṇiya Bhārathi (1882 to 1921)

* If the poor people of the empty clay bowels turn to be the people of blows, in a minute all differences of high and low will be demolished and all will become equal.

—Bhārathidāsaṉ (1891 to 1964)

*Compiled by* Dr. N. SANJEEVI
20-10-1975.



இந்திய உயர் ஆராய்ச்சி நிலையம் 20—28, அக்டோபர், 1975இல் நடத்திய
'இந்திய இலக்கியங்களில் மனிதக் கோட்பாடு' பற்றிய
கருத்தரங்கில் இமாசலப் பிரதேச ஆளுநருடன் சென்னைப் பல்கலைக் கழகத்
தமிழ்த்துறைத் தலைவர்



மேற்கண்ட அனைத்திந்தியக் கருத்தரங்கில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்,
வடமொழி, ஆங்கிலத்துறைகளின் தலைவர்களும், பேராசிரியர் பெ. திருஞான
சம்பந்தம் அவர்களும், தமிழ் எழுத்தாளர் திரு. கு. இராசவேலு அவர்களும்

தாமரைத்திரு நெ. து. சுந்தரவடிவேலு
அவர்கள்

# நூற்றேகை

பு. அ. மோகனராசு, எம்.ஏ., பி.லிப். எஸ்சி.,
(நூலகர், சென்னைப் பல்கலைக் கழகம்)
ஆய்வாளர் தமிழ்த்துறை

## பகுதி - 1 தமிழ் நூல்கள்

*வாழ்க்கை வரலாறு (பொது)

தம்பி நில். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1949. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 1).*

*இராமானுசம் வாழ்க்கை வரலாறு

தோற்றும் வென்றவர். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1960. ப 16. காசு 25. வள்ளுவன் வரிசை, 7).*

*மேடம் கியூரி வாழ்க்கை வரலாறு

ரேடியம் கண்டவர். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1964. ப 20. (வள்ளுவன் வரிசை, 13).*

*மின்சாரம்

மின் விளக்கு. சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1960. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 5).*

நெம்பு மையம்

பாக்கு வெட்டி. சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1960. ப 16. காசு 25. வள்ளுவன் வரிசை, 9)*

*மார்கோனி வாழ்க்கை வரலாறு

வானொலி வழங்கியவர். சென்னை. முருகன் அண்டு கம்பெனி, 1960. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 8).*

*ஆல்பர்ட் சுவைட்சர்

தங்கத் தாத்தா. சென்னை. முருகன் அண்டு கம்பெனி, 1960. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 6)*

*பிளாரன்ஸ் நைட்டிங்கேல்

விளக்குப் பாவை. சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1965. ப. 18. காசு 24. (வள்ளுவன் வரிசை, 11).*

## உலகத் தமிழ் மாநாடு (1970)

உலகத் தமிழ். சென்னை, தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம், 1972. ப 112. ரூ. 2.

## சொற்பொழிவு

சுதந்திரம் காப்போம். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1965. ப 103. ரூ. 1.

பூவும் கனியும். கோவை, 'கலைக்கதிர்' பீளமேடு, 1969. ப 125. ரூ. 0-70.

## கட்டுரை

உதிரிப் பூ. கோவை, 'கலைக்கதிர்' பீளமேடு, 1960. ப 125. ரூ. 1-50.

எண்ண அலைகள். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1964. ப viii, 2-0. ரூ. 2-40.

எல்லோரும் வாழ்வோம். சென்னை, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், 1970. ப iv, 151. ரூ. 2-50.

சிந்தனை மலர்கள். கோவை, கலைக்கதிர் 1968. ப viii, 125. ரூ. 2-70.

வையம் வாழ்க. சென்னை, ஆசிரியர் இலவச வெளியீடு, 1962. ப 21.

## சமயம்

சிலுவையில் மாண்டவர். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1959. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 3).*

## தத்துவம்

நஞ்சுண்டவர். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1959. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 2).*

## வரலாறு

குண்டுக்கு இரையானவர். சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1959. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 4)*

தலைவருள் மாணிக்கம். சென்னை, மீனாட்சி புத்தக நிலையம், 1976. ப 136. ரூ. 5.

## கல்வி

அடித்தா? அணைத்தா? (காந்தம்மா சுந்தரவடிவேலு, துணை ஆசிரியர்) சென்னை, ஆசிரியர் இலவச வெளியீடு, 1958. ப 30. காசு 25.

## நில நூல்

ஆறு. சென்னை, முருகன் அண்டு கம்பெனி, 1961. ப 16. காசு 25. (வள்ளுவன் வரிசை, 10).*

---

* குழந்தை இலக்கியம்.

### பயணம்

அங்கும் இங்கும். சென்னை, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், 1968. ப iv, 102. ரூ. 1-50.

நான் கண்ட சோவியத் ஒன்றியம். சென்னை, நியு செஞ்சுரி புக் ஹவுஸ், 1971.

சோவியத் மக்களோடு. சென்னை, வானதி பதிப்பகம், 1973. ப 196. ரூ. 3-50.

புதிய ஜெர்மனியில். சென்னை, வானதி பதிப்பகம், 1974. ப 132. ரூ. 3.

### சமூக இயல்

செஞ்சிலுவை தந்தவர். சென்னை, முருகன் அண்டு கம்பெனி 1963. ப 20. காசு 25. (வள்ளுவன் வரிசை, 12).*

### இலக்கியம்

வள்ளுவர் வாய்மொழி. சென்னை, வானதி பதிப்பகம், 1973. ப. 92. ரூ. 2.

## பகுதி - 2 கட்டுரைகள்

ஓர் அரிய படிப்பினை. கலைக்கதிர் 4, 6 : 30-35, மே 1952.

கலைப்பெருக்கும் கவிப்பெருக்கும், மேவ......கோவை மாவட்ட நூலக வார விழா மலர், ஆக. 1955.

ஈ எறும்பு தேனீ! எது நீ? கலைக்கதிர் 11, 1 : 115-118, சன. 1959.

வறுமையிலே செம்மை. கலைக்கதிர் 11, 4 : 40-43, ஏப். 1959.

அறிவுக் குட்டையா? அறிவுத் தேக்கமா? கலைக்கதிர் 11, 5 : 8-10, மே 1959.

இனத்து இயல்பு. கலைக்கதிர் 11, 6 : 39-44, ஜுன் 1959.

எண்ணிலும் எழுத்திலும் பழக. கலைக்கதிர் 11, 7 : 47-50, ஜுலை 1959.

துலா முழுக்கு. கலைக்கதிர் 11, 8 : 17-20, ஆக. 1959.

ஏழுமலையான் வெற்றி. கலைக்கதிர் 11, 9 : 17-21, செப். 1959.

வருங்கால ஒழுக்கம். கலைக்கதிர் 11, 10 : 7-8, அக். 1959.

மின்னல் ஒளி. குருகுலம் (வள்ளுவன் நினைவு மலர்) 12, 11 : 65–75, 17—11—59.

முள்ளில் மலர். கலைக்கதிர் 11, 11 : 49-51, நவ. 1959.

வளர்த்தலா நிறுத்தலா? கலைக்கதிர் 11, 12 : 22-26, டிச. 1959.

உலகம் அழைக்கிறது. கலைக்கதிர் 12, 1 : 72-73, சன. 1960.

கை—தட்டவா, ஒட்டவா? கலைக்கதிர் 12, 2 : 54-56, பிப். 1960.

கராச்சி அழைக்கிறது. கலைமகள், 28 (347), நவ. 1960. ப 516-519.

எது சரி? கலைக்கதிர் 13, 1 : 9-11, சன. 1961.

பண்டறியாதன கண்டோம். கலைமகள் 30 (355) : 77-80, சூலை 1961.

ஒரே வழி. கலைமகள் 30, (357) : 331, செப். 1961.

தமிழ் நாட்டில் நூலகங்கள். புத்தக நண்பன் 1 (1) : 24-25, டிச. 1961.

காமன்வெல்த் கல்வி மாநாடுகள். கலைமகள் 31 (364) : 398, ஏப். 1962.

எண்ண அலைகள்.

சிப்பி முத்து. தமிழ்நாடு, 11 : 268, 8—7—62.

ஞாயிறு கை விளக்கா? தமிழ்நாடு, 11 : 275, 15—7—62.

காற்றுடியா விமானமா? தமிழ்நாடு, 11, 282, 22—7—63.

கல்விக் கூடமா கணக்குக் கூடமா? தமிழ்நாடு, 11 : 289, 29—7—62.

சீராக்கவா சிட்டுத் தரவா? தமிழ்நாடு, 11 : 296, 5—8—62.

சீடை முறுக்கைத் தள்ளலாமா? தமிழ்நாடு, 11 : 303, 12—8—62.

காட்டவா ஊட்டவா? தமிழ்நாடு, 11 : 301, 12—8—62.

படமா பாடமா? தமிழ்நாடு, 11 : 316, 26—8—62.

தரம் குறைந்துவிட்டது தமிழ்நாடு, 11 : 323, 2—9—62.

தரமான கல்வி எது? தமிழ்நாடு, 11 : 329, 9—9—62.

அறிமுகக் கூடமா, முடிவுக் கூடமா? தமிழ்நாடு, 11:336, 16—9—62.

எது தேவை? தமிழ்நாடு, 11 : 343, 23—9—62.

தேட வேண்டாவா, திரட்ட வேண்டாவா? தமிழ்நாடு, 30—9—62.

இதுவே குறிக்கோள். தமிழ்நாடு, 7—10—62.

எதில் குற்றம்? தமிழ்நாடு, 14—10—62.

எப்படி சீராக்குவது? தமிழ்நாடு, 21—10—62.

அ சா அ செய்தியில் இவர். குடி அரசு, 5, 6 : 1, 22—10—62.

உருசியாவில் கண்டதென்ன? கலைமகள் தீபாவளி மலர், 1962.

முன்னேற ஊக்குங்கள். தமிழ்நாடு, 28—10—62.

மன நிலையைத் தூண்டுவோம். தமிழ்நாடு, 4—11—62.

அறிவிலே தேங்க விடாதீர்கள். தமிழ்நாடு, 11—11—62.

யார் பெற்றோர். தமிழ்நாடு, 18—11—62.

அடக்கம் அமைவது எப்படி. தமிழ்நாடு, 25—11—62.

விரைந்து அனுப்ப வேண்டாவா? தமிழ்நாடு, 2—12—62.

வாய்ப்புகள் வேண்டாவா? தமிழ்நாடு, 9—12—62.

சூளுரை எது? தமிழ்நாடு, 16—12—62.

மாணவர்களுக்கு உரை—நாடு காக்க வாரீர். வானொலி 25 (16) : 43, 22—1—63.

நாட்டுப் பாதுகாப்பில் ஆசிரியர்களின் பங்கு. வானொலி 25 (17) : 6, 7—2—63. ஆரம்பக் கல்வி 25 (3) : 17—21, மார்ச்சு, 1963.

நல்வழி காட்டும் ஞானத்தந்தைத் திட்டம். கிராம நலம் 9, 4 : 11—13, சன. 1964.

சென்று வந்தேன். மாலை முரசு, 2—11—64.

அறிவாளிகள் தொடர்பு. குத்தூசி, 3, 7 : 17—24, ஏப், 1965.

அறிவிலே தேங்கி விடாதிர்கள். சென்னை நூலக ஆணைக்குழு மலர் 10—11—1965.

வெல்க நூலக இயக்கம். செங்கற்பட்டு மாவட்ட நூலக ஆணைக் குழு, திறப்பு விழா மலர், தமிழ்ப் புத்தாண்டு நாள், ஏப். 1966.

காலமெலாம் கற்க. நூலகம், நவ. 1966, 3—5. டிச. 1966, 13, 16.

சமுதாயத்தின் கலங்கரை விளக்கம். விடுதலை, தந்தைப் பெரியார் 89வது பிறந்த நாள் விழா மலர், 1967. ப 97—102.

காணிக்கை. தமிழ் உறவு ஆண்டு மலர், 1968, ப 30—31.

வையம் வாழ். நெல்லை மாவட்ட நூலக ஆணைக்குழு, நெல்லை நகர் நூலகப் பொன் விழா மலர், 1968.

குறள் வழிவந்த மகாத்மா. சத்ய கங்கை, 15—1—1969.

அண்ணா அளித்த ஒரு அருங்கனி. சத்ய கங்கை, 1—3—1969.

எழுத்தறிவு இயக்கம். சத்ய கங்கை, 1—4—1969.

புரட்சித் தலைவர் பெரியார். விடுதலை, தந்தை பெரியார் 91வது பிறந்த நாள் விழா மலர் 1969. ப 43, 44.

ஆக்கமும் அழிவும்—பணத்தால். சத்ய கங்கை, 15—5—1970.

போர் முழக்கம். சத்ய கங்கை, 1—6—1970.

அறைகூவலை ஏற்போம். காஞ்சி, 6, 49. 21—6—1970.

புதியதோர் அறிவுலகைச் சமைப்போம். சத்ய கங்கை, 1—7—1970.

காந்திய சமதர்மம். சத்ய கங்கை, 1—9—70.

பள்ளிகள் பாட்டாளிகளை உருவாக்கவேண்டும். சத்ய கங்கை, 15—9—1970.

வாழ்க்கைக்கு வழிகாட்டி. சத்ய கங்கை, 1—11—1970.

பயண உரை. சத்ய கங்கை, 1—12—1970.

மனிதருள் மாணிக்கம். சத்ய கங்கை, 15—12—1970.

மனிதன் மாறிவிட்டான். தமிழ் உறவு, இதழ் 1, மணம் 1, 15—11—1970.

கல்விச் சிந்தனை. தமிழரசு, 16—11—1970 ப. 20—2, 1.

கல்விச் சிந்தனை. தமிழரசு, 1—12—1970, ப 11—12.

உரத்துச் சிந்தித்தல்... தமிழ் உறவு, இதழ் 1, மணம் 2, 15—12—1970.

கல்விச் சிந்தனை. தமிழரசு, 16—12—1970, ப 35—37.

வள்ளுவரும் பாரதியும் வாழ்க்கைக்கு வழிகாட்டிகள். பாரதி விழா மலர் 1970. ப 17—19.

குறள்வழி காந்தி—அண்ணல் காந்தி மலர் அஞ்சலி, 1970. வானதி பதிப்பகம், ப 25—28.

வாழும் நெறி. சத்ய கங்கை, 15—2—1971.

சிறியன சிந்திப்போம். சத்ய கங்கை, 15—3—1971.

நாடெல்லாம் வாழ உழைப்போம். சத்ய கங்கை, 1—4—1971.

கல்விச் சிந்தனை. தமிழரசு, 1—1—1971, ப 72—74.

இமயம் எழுக. தினத்தந்தி, 14—4—1971.

திரு. வி. க. வின் தமிழ்நடை. சத்ய கங்கை, 15—4—1971.

உதகைப் பயணம். சத்ய கங்கை, 1—5—1971.

இமயம் இன்னும் இருக்கிறது. சத்ய கங்கை, 15—5—1970.

நல்ல போக்குகள். சத்ய கங்கை, 1—6—1971.

பார்புகழ் ஞாயிறு. அஞ்சுகம், 3—6—1971.

வழித் துணை நாரதர்கள். சத்ய கங்கை, 15—7—1971.

திடீர் மாற்றம். சத்ய கங்கை, 1—7—1971.

பாவம் இல்லாதபோது பழி. சத்ய கங்கை, 15—7—1971.

அக்கப் போர் உலகம். சத்ய கங்கை, 1—8—1971.

பெரியவர்களால் முடியாதா? சத்ய கங்கை, 15—8—1971.

இனியவை கூறல். சத்ய கங்கை, 1—9—1971.

புதியதோர் உலகம் செய்வோம். சத்ய கங்கை, 15—9—1971.

நடுவு நிலைமை. சத்ய கங்கை, 1—10—1971.

ஒன்றே காலணாவில் மதிய உணவு. சத்ய கங்கை, 15—10—1971.

நாச்சியப்பரும் நானும். சத்ய கங்கை. 1—11—1971.

யதார்த்தவாதி வெகு ஜன விரோதி. சத்ய கங்கை, 15—11—1971.

காபூலில் ஓர் இரவு. சத்ய கங்கை, 1—12—1971.

உழைப்பால் உயர்ந்த உத்தமர் பஞ்ச். சத்ய கங்கை, 15—12—1971.

சிறியன சிந்திப்போம். தமிழ் உறவு, இதழ் 1, மணம் 3, 15—1—1971.

எப்போது? தமிழ் உறவு, இதழ் 1, மணம் 4, 15—2—1971.

தெளிவுக்குத் துணை. தமிழ் உறவு, இதழ் 1, மணம் 5, 15—3—1971.

பித்தனா? புத்தனா? தமிழ் உறவு, இதழ் 1, மணம் 5, 15—4—1971.

நிழல் தரவாவது... தமிழ் உறவு, இதழ் 1, மணம் 7, 15—5—1971.

உயர்வை நாடினர்... தமிழ் உறவு, இதழ் 1, மணம் 8, 15—6—1971.

தேற்றிக் கொண்டேன். தமிழ் உறவு, இதழ் 1, மணம் 9, 15—7—1971.

தவத்திற்கு உறுதுணை. தமிழ் உறவு, இதழ் 1, மணம் 10, 15—8—1971.

வழிபடுவோம். தமிழ் உறவு, இதழ் 1, மணம் 12, 15—10—1971.

தமிழ் வெல்லும் எப்போது? தமிழ் உறவு, இதழ் 2, மணம் 1, 15—11—1971.

நெஞ்சத்து நட்பு. தமிழ் உறவு, இதழ் 2, மணம் 2, 15—12—1971.

மாறுவோம் மாற்றுவோம். கலைக்கதிர், பொங்கல் மலர், 1971. ப 19—22.

வரும் பத்தாண்டுகள். தினமணி, 14—4—1971.

கல்விச் சிந்தனைகள். கலைக்கதிர், கல்வி மலர்,செப். 1971. ப. 8—1

நல்ல நண்பர்கள். கலைக்கதிர், பொங்கல் மலர், 1972.

டாஷ்கண்டில் ஒரு நாள். சத்ய கங்கை, 1—1—1972.

மன்னித்தருளிய மகா சந்நிதானம் (கொள்கை வாழ்க்கை). சத்ய கங்கை, 15—1—1972.

ஆளுநர் சொன்ன ரகசியம். சத்ய கங்கை, 1—2—1972,

கோடியில் ஒருவர். சத்ய கங்கை, 15—2—1972.

புதிய சமுதாயம் அமைப்போம். சத்ய கங்கை, 1—4—1972.

புதிய நோன்பு. தமிழ் உறவு. இதழ் 2, மணம் 3, 15—1—1972.

விழாக்கள் எப்போது? தமிழ் உறவு, இதழ் 2, மணம் 4, 15—2—1972

கற்புடைய நூல்கள்! தமிழ் உறவு, இதழ் 2, மணம் 5, 15—3—1972.

கல்வி வளர்ச்சிக்கு சில வழிகள். தினத்தந்தி, 13—4—1972. ப 9-10.

உலகுக்கு வழிகாட்டும் தமிகழத்தின் தகைமை. தென்னகம், 16—4—1972. ப 8.

சோவியத் மக்களோடு பதினைந்து நாட்கள். தினமணி கதிர், 21—1—1972 (தொடர்ந்து வெளிவரும் கட்டுரைத் தொடர்).

புதிய சமுதாயம் அமைப்போம். சத்ய கங்கை, 1—5—1972.

கல்வி வெள்ளம். தமிழரசு, வெள்ளி விழா மலர், 1971, ப. 75-80.

வளர்க்கவேண்டும். தமிழ் உறவு, 15—5—72. ப 15.

பெர்ட்ரண்ட் இரஸ்ஸல். சத்ய கங்கை, 1—6—72. ப 15—17.

உயர் கல்விப் புரட்சியில். கல்லூரி முதல்வர்கள் பங்கு, தென்னகம், 4—6—72.

கல்வி அமைச்சரின் வருகை. சத்ய கங்கை, 15—6—72. ப 19—21.

சச்சிதானந்தர் வாழ்க. சத்ய கங்கை, 15—7—72. ப 12—14.

வெள்ளிவிழா நினைவுகள். சத்ய கங்கை, 15—8—72. ப 23-24.

கல்வியும் அறிவும். தமிழ் உறவு, 15-8—72. ப 9—11.

ஊருக்கு நல்லது சொல்வேன். சத்ய கங்கை, 15—10—72. ப 11-12; 1—11—72. ப 25-26; 15—11—72. ப 15-18.

அக்டோபர் புரட்சியின் 55ஆம் ஆண்டு விழா. சொற்பொழிவு— சோவியத் நாடு, நவ. 72. ப 32.

கற்பனை இசை. தமிழ் உறவு, 15—11—72 & 15—12—72.

ஊருக்கு நல்லது சொல்வேன். சத்ய கங்கை, 1—12—72. ப 9—12; 15—12—72. ப 14—16.

அடிக்கல் நாட்டு விழா உரை. வாசவி கல்லூரி ஆண்டு மலர் 72, 15—12—72. ப 1—3.

சோவியத் நாட்டில் கல்வி வளர்ச்சி. நாத்திகம், 25—12—72.

நல்லவர் இராஜாஜி. சத்ய கங்கை, 1—1—73. ப. 11—15.

காந்தியை நினைப்போம். சத்ய கங்கை, 15—1—73. ப 11—13.

படிக்கும் கலை வளர்ப்போம், சத்ய கங்கை, 1—2—73. ப 9—11.

சோவியத் ஒன்றியத்தில் கலை வளர்ச்சி, சத்ய கங்கை, 15—2—73. ப 25—28.

எப்போது விமோசனம். சத்ய கங்கை, 1—4—73. ப 7—9.

ஊருக்கு நல்லது செல்வேன். சத்ய கங்கை, 15—4—73, ப 7—9.

யாரோ மதிப்பார்? தமிழ் உறவு, 15—4—73. ப 5—6.

மக்கள் நலனில் கல்வி விஞ்ஞானிகள். தமிழ் உறவு, 1—5—73. ப 9—12.

புதிய பணிப் பாசறைகள். சத்ய கங்கை, 15—5—73. ப 21—24.

புதிய ஜெர்மனியில்—தொடர் கட்டுரை. 1—14, தினமணி கதிர், 23—6—73 முதல் 21—9—73 வரை.

எல்லோரும் இந்நாட்டு மன்னர். சத்ய கங்கை, 1—7—73. ப 18—27.

புறப்படுங்கள் இளைஞர்களே. சத்ய கங்கை, 15—8—73. ப 17—19.

மானுட ரசவாதி, சத்ய கங்கை, 1—10—73. ப. 13—14.

பிரிட்டனில் 1, 2 & 3, தினமணி கதிர், 5—10—73. ப 46—48; 12—10—73. ப 14—16; 19—10—73. ப 41—43.

வாசிப்பவர்களுக்கு வழிவிடுங்கள். மாலை முரசு தீபாவளி மலர், 24—10—73. ப 11.

ஞாயிறு போற்றுதும். கல்கி தீபாவளி மலர், 1975. ப. 85.

பிரிட்டனில் 4—9. தினமணி கதிர், 26—10—73. ப 40—42; 2—11—73. ப 47—48; 9—11—73. ப 14—16; 16—11—73. ப 41—43; 23—11—73. ப 14—16; 30—11—73. ப 40—42.

வள்ளுவர் வாய்மொழி. சத்ய கங்கை, 1—12—73. ப 19—20.

பிரிட்டனில் 10—11. தினமணி கதிர், 7—12—73. ப 54—55; 14—12—73. ப 52-53.

வள்ளுவர் வாய்மொழி. சத்ய கங்கை, 15—12—73. ப 21—22.

பிரிட்டனில் 12. தினமணி கதிர், 21—12—73. ப 53—54.

மெய்யா? மெய்யா? முரசொலி, 27—12—73. ப 2.

மெய்யா? மக்கள் குரல், 27—12—73. ப 2.

பிரிட்டனில் 13. தினமணி கதிர், 28—12—73. ப 53-55.

தமிழர்தம் தனித்தலைவர். சத்ய கங்கை, 1—1—74. ப 10—14.

பிரிட்டனில் 14—15. தினமணி கதிர், 4—1—74. ப 45—46; 11—1—74. ப 47—48.

விந்தை மனிதர் ஜி. டி. நாயுடு. சத்ய கங்கை, 15—1—74. ப 13-16.

பிரிட்டனில் 16—17. தினமணி கதிர், 18—1—74, ப 75—76; 25—1—74. ப 9—10.

தொடர்க பொற்காலம். தினமணி கதிர், 25—1—74.

பிரிட்டனில் 18. தினமணி கதிர், 1—2—74. ப 46—48.

சன்மார்க்க நெறி தழைத்து ஓங்குக. சத்ய கங்கை, 1—2—74.

வள்ளுவர் வாய்மொழி. சத்ய கங்கை, 15—2—74. ப 11—12.

வாழத் தெரிந்தவர்கள். சத்ய கங்கை, 1—3—74. ப 22—23.

வள்ளுவர் வாய்மொழி. சத்ய கங்கை, 15—3—74. ப 9—10.

நல்லோர் பணி தேவை. சத்ய கங்கை, 15—4—74. ப 9—10.

அன்புநெறி. ஆரம்பக் கல்வி, ஏப்ரல் 74. ப 25—28.

நொந்தோர் துணைவர் வாழ்க. அஞ்சுகம், மே 74.

உலகத் தலைமை பெற்ற ஒரே தமிழர் டாக்டர். சத்ய கங்கை, 1—5—74. ப 1—3.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னேற்ற திட்டங்கள். சத்ய கங்கை, 15—5—74. ப 26—30.

தமிழ்நாட்டுக்காக வாழும் கலைஞர். சத்ய கங்கை, 1—6—74. ப 21—22.

வைரத்தை மறைக்காதிர். சத்ய கங்கை, 15—6—74. ப 9—11.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னேற்ற திட்டங்கள். வானொலி, 1—15/6—74. ப 5-6.

ஆசிரியர் மணி. சத்ய கங்கை, 1—7—74. ப 15—17.

மக்கட் பேறு. அஞ்சுகம், 5—7—74. ப 7—8.

வேப்பமர நிழலிலே. சத்ய கங்கை, 15—7—74. ப 19—20.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னேற்ற திட்டங்கள். ஆரம்பக் கல்வி, ஜுலை 74. ப 19—20.

என்றும் வெல்வோம். சத்ய கங்கை, 1—8—74. ப 23—24.

துணிவே துணை. சத்ய கங்கை, 15—8—74. ப 17—18.

துன்பத்தைக் கண்டு தளராதே. சத்ய கங்கை, 1—9—74. ப 21—22.

ஆசிரியர் மணி. தமிழ்ப்பொழில், செப்டம்பர், 74. ப 176—179.

வன்முறைக்கு வழிவிடாத பெரியார். சத்ய கங்கை, 15-9-74. ப 17—18.

தென்றலைத் தேடினேன், புயலில் சிக்கினேன். விடுதலை (தந்தை பெரியார் 96வது பிறந்த நாள் மலர்), 17—9—74. ப 33—39.

# பகுதி - 3 சொற்பொழிவுகள்*

## வானொலி உரைகள்

செய்ந்நன்றி அறிதல்.

இனியவை கூறல்.

பள்ளிச் சீரமைப்பு மாநாடுகள். திருச்சி 26—3—60.

சுதந்திரம் காப்போம். திருச்சி 14—8—60.

---

* இப்பட்டியல் முழுமையானதன்று - குறிப்பாக வானொலிப் பேச்சுகள் இதில் முழுமையாக இடம் பெறவில்லை.

தேசிய விளையாட்டு வாரம். சென்னை 19—1—62.

நாடு காக்க வாரீர். சென்னை 10—1—63.

நாட்டுப் பாதுகாப்பில் பள்ளிகளின் பங்கு. சென்னை 17—1—63.

நாட்டுப் பாதுகாப்பில் ஆசிரியர்களின் பங்கு. சென்னை 24—1—63.

செலவைக் குறைப்போம். சென்னை 31—1—63.

ஞானத் தந்தை திட்டம். திருச்சி 4—10—63.

பயணக் கதை. சென்னை 5—3—64.

அமெரிக்காவில் கண்டதும் கேட்டதும். சென்னை 19—11—64.

ஆசிரியர் நாள். சென்னை 1971.

திரு. வி. க.-வின் தமிழ் நடை. 14—4—1971.

நடுவு நிலைமை. சென்னை 17—8—1971.

படிக்கும் கலை. சென்னை 30—10—72.

மக்கள் நலனில் விஞ்ஞானிகள்—கல்வித் துறையில். சென்னை 23—4—73.

குறளமுதம். சென்னை 4, 5, 6—2—74.

சென்னைப் பல்கலைக் கழகத்தின் முன்னேற்ற திட்டங்கள். சென்னை 21—4—74.

குறளமுதம். சென்னை 14, 15, 16—7—74.

## ENGLISH ARTICLES

*Midday Meals in Corporation Schools.* New Education 2, 127-28, Dec. 1950.

*Education in the United Kingdom.* South Indian Teacher, 25, 8 : 255-257, Sept. 1952.

*On the Role of Teachers (New.)* Educational India, 22 : 349, Apr. 1956.

*Problems in Administrations.* Proceedings of the Educational Conference for the Southern Region held in Coimbatore in Aug. 1956. *Thiruvalluvar's View of Education.* The Mail.

*On Educational Standard.* Educational India, 23 : 374, May—June 1957.

*Human factor in Basic Education.* Journal of the Mysore State Education Federation, 11 : 146-149, Oct. 1957.

*Origin and Development of the People Movement for Free Supply of School Meals in the Madras State.* South Indian Teacher, 30: 3353-39, Dec. 1957.

*Free Supply of School Meals in Madras State - Origin and Development of the People's Movement.* Journal of the Mysore Education Federations, 11. 246-249, Feb 1959.

*18th All India Library Conference Inaugural Address.* I C A Bulletin V. 5, 4, Oct.—Nov. 1969.

*Flowering in Literature.* Times weekly, 2, 29 : 167—, 27—2—1972. (Special Tamilnadu issue).

*USSR - A Lasting Union of Nationalities - Unity in Diversity.* New Delhi, Indo - Soviet Cultural Society, 1973. pp. 76-78.

*Educational Development.* Social Welfare, 20 : 11-12, Feb. & March 74, pp. 74-75 & 110.

*Higher Education in India.* Swarajya, 18 : 52, 29—6—74. pp. 3-5.

*Widening Frontiers of Knowledge.* The Mail, 29—6—74. p. 4.

*Towards a Dynamic Edncational Systam.* Swarajya, July 1974. pp. 9-11.

*Under the Neem Tree.* Kalaignar, International, Aug. 1974. pp. 62–63.

*Awake and Arise.* Kalaignar International, Sep. 1974. pp. 50-51.

*He was a Movement.* Periyar Memorial Souvenir, 1974. Article 5.

## ADDRESSES

*Birth Centenary Celebrations of Dr. Eleanor Mc Dougall - Founder Principal Women's Christian College: Main Address.* W.C.C. Magazine, 1974. pp. 17-18.

*Youth's Club Inaugural Address.* Rising Sun, 28—6—74.

*October 2 has come and gone! Where do we go?* Swarajya, 12—10—74. pp. 13-14.

# பகுதி - 4

## தாமரைத்திரு நெ. து. சு. அவர்களைப்பற்றி

### I. தமிழ்

### 1. நூல்

கல்வித் தந்தை. ந. வேலுசாமி, எம்.ஏ., வள்ளலார் நிலையம், 'தமிழகம்,' சென்னை-81, 1976. ப 92. ரூ. 6.

### 2. கட்டுரைகள்

துணைவேந்தர் மணிவிழா. ரா. பாலகிருஷ்ணன், கலைமகள், ஜூன் 1972. ப 666—667.

கல்வித்தரம்—நெ. து. சு. காட்டும் வழிகள். ப. சண்முகம், தமிழ் உறவு—வாசகர் அரங்கம், 15—6—72. ப 17—18.

கல்விநெறிக் காவலர் நெ. து. சு. வாழ்க. மு. நமசிவாயம், சத்ய கங்கை, 15—7—72. ப 16—20.

அவர் வாழ்க. நம்பி, சத்ய கங்கை, 1—7—72. ப 19—20.

கல்விநெறிக் காவலர் மணிவிழா. தமிழ் உறவு, 10—10—72. ப 3.

கல்விநெறிக் காவலர். கலைக்கதிர், அக்டோபர் 72. ப 6—8.

கல்விப் பேரறிஞர் நெ. து. சு. அவர்களது அறுபது கருத்து மணிகள். அ. தி. முத்துசாமி, தமிழ்ப்பணி, நவ. 72. மாலை 2, மலர் 7, ப 10—17.

மணிவிழாச் செல்வர் திரு. நெ. து. சு. மணவை முஸ்தபா தமிழ்ப்பணி, நவ. 72. மாலை 2, மலர் 7, ப 23.

தமிழர் உயர்வே வருக. எஸ். நடராசன், சத்ய கங்கை, 15-8-72. ப 9—10.

துணைவேந்தர் திலகமே வருக. சி. பாலசுப்பிரமணியன், சத்ய கங்கை, 1—9—73. ப 16—18.

இன்னும் நூறாண்டு வாழ்க. பகீரதன், சத்ய கங்கை, 10—10—73. ப 1.

வயது நூறுக்குமேல் வளர்வதோ இளமை. சத்ய கங்கை—தலையங்கம், 15—5—74. ப 1—4.

தமிழர் உயர்வே வருக! என். நடராசன், சத்ய கங்கை, 15-8-74. ப 9—10.

பல்லாண்டு வாழ்க—தலையங்கம். சத்ய கங்கை, 1—10—74, ப 13.

ஏட்டுச் சுரைக்காய் கறிக்கு உதவும். கல்கி, 30—6—74. ப 31-33.

மணிவிழா கண்ட துணைவேந்தர். நா. ஜகந்நாதன், சத்ய கங்கை, 1—10—74. ப 13—15.

### 3. துணுக்குகள்

| | |
|---|---|
| தினமணி கதிர் | 21—6—74. |
| ,, | 5—7—74. |
| ,, | 12—7—74. |
| கல்கண்டு | 22—8—74. |
| ,, | 26—9—74. |

### 4. பேட்டி

என் கணவர் திரு. நெ. து. சுந்தரவடிவேலு. காந்தம்மா சுந்தர வடிவேலு, கலைமகள், அக். 74. ப 292—294.

## II. ENGLISH

*N. D. Sundaravadivelu - A Practising Socialist. Kalaignar International,* Jan. 73. pp. 4-5.

*P. S. G. Educational Institutions, Coimbatore: Aspects of Higer Education,* Padmasri N. D. Sundaravadivelu, sixty - first birth day Commemoration Volume 1974. p. 212.

*Services of Madras V. C. Praised.* The Mail 18—10—73. p. 3.

*Gemini :* Mr. N. D. Sundaravadivelu, A Great Vice-Chancellor. Kalaignar International, July 1974. p. 14.

# 1. தமிழ் நூல்களில் காலக் கணிப்பு

மு. சண்முகம் பிள்ளை
(தமிழ் விரிவுரையாளர், திருக்குறள் ஆராய்ச்சிப் பகுதி)

முப்பெருங்காலம் 1 - 2—மாத்திரை 3—மாத்திரையின் பொது இயல்பு 3—மாத்திரை என்பது எழுத்துக்களின் ஒலி அளவு 4—செய்யுள் உறுப்பு—மாத்திரை 5—மாத்திரை—சொற்பொருள் 6 - 7—நொடியும் கணமும் 8—கால நுட்பம் 9—கடிகை, நாழிகை, கன்னல் 10 - 14—கடிகை நாளின் மூலக் கூறு 10 - 11—நாழிகைக் கணக்கர் 12—கடிகை ஆரம் 13—இடைக்கால நூல்களில் நாழிகை வழக்கு 14—முழுத்தம் (முகூர்த்தம்) 15 - 16—ஓரை என்பது இராசியைச் சுட்டல் 17 - 18—யாமம் 19 - 27—யாமம்—இரவின் காற்கூறு 19—அரைநாள் 20—மூன்றும் யாமம் 21—இரவின் கடையாமம் 22—வைகறை 23 - 24 — சிலப்பதிகாரம் முதலியவற்றில் இரவு யாமங்கள் 25 - 27—சிறுபொழுது 28 - 30—அறுவகைச் சிறு பொழுது 28-தொல்காப்பியத்தில் சிறுபொழுது 29—ஐவகைச் சிறுபொழுது 30—பகல், இரவு 31-39—எல்லி 35—அல் 36-37—அந்தி 38 - 39 —நாள் 40 - 46—பகலும் இரவும் 40—வைகல், பகல் 41—நாள் திங்கள் ஆகும் 42—நாளின் தொடக்கம் 43-44—நாட்கணக்கு 46—வாரம், கிழமை 47-54—நாளும் கோளும் 48 - 50—ஏழு கிழமைப் பெயர் 51 - 52—நாள், கிழமை, பக்கம் 53 - 54—திதி, பக்கம் 55 - 65—பிறைக் கணக்கு 55—முதற்பிறை 56—மூன்றும் பிறை 57—எட்டாம் பிறை 58—வளர்பிறை 59—நிறை மதி 60—உவாப் பதினன்கு 61—வளர் பிறை, தேய்பிறை 62—அலர் தரு பக்கம்,வழியது பக்கம் 63—தேவாரம் முதலியவற்றில் திதிக் குறிப்பு 64—நிகண்டுகளில் திதி - பக்க விளக்கம் 65—திங்கள் (மாதம்) 66 - 83—திங்கள் என்னும் பெயர் 66—பிறை நோக்கிக் காலங்கணித்தல்67-68—முற்பக்கமும் பிற்பக்கமும் 69—மாதத் தொடக்கம் 70—மாதப் பெயர்கள் 71—சித்திரை 72—வைகாசி 73—கார்த்திகை 74—மார்கழி 75—தைந்நீராடல் 76—மாசியில் காமநோன்பு 77—பங்குனி உத்தரம் 78—நிறைமதியில் விழாக்கள் 79 - 80—மயிலையில் மாதத் திருவிழாக்கள் 81—பன்னிரு மாதப்

## முப்பெருங்காலம்

1. காலம் என்பதைப் பொதுவகையாக நோக்கின், முன்சென்ற காலமும், இப்பொழுது நிகழும் காலமும், இனி வருங்காலமும் ஆக மூன்று கூறப்பட்டுள்ளமை தெளிவு.

'காலம் தாமே மூன்றுஎன மொழிப.'

'இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்று
அம்முக் காலமும்.........' (தொல். சொல். வினை. 2, 3)

எனத் தொல்காப்பியர் தமக்கு முன்பும் நீண்ட நெடுங்காலமாக இப் பாகுபாடு உள்ளமையை எடுத்துக்காட்டுகின்றார். இவ்வாறு இறந்தும் பிறந்தும் எதிர்நோக்கியும் வேகமாக ஓடிக்கொண்டிருக்கும் கால வெள்ளத்தையும் அணையிட்டு அளந்து பார்க்கத் தமிழ்நாட்டு அறிஞர் பெருமக்கள் முயன்றுள்ளனர்.

2. மிக மிகச் சிறிய காலக்கூறாகிய நொடிப்பொழுது முதற் கொண்டு அளவுபடாது மிகப் பெருகிய ஊழிக்காலம் வரையில் நம் மூதாதையரின் மதிப்பீடு சென்றிருக்கிறது. இவற்றிற்கு இடையில் தான் எத்தனை எத்தனை காலக் கணிப்புகள்! தமிழகத்து வழங்கிய — தமிழ் நூல்களில் இடம்பெற்ற — காலக் கணிப்புகள் எல்லாவற்றையும் ஒன்றன்பின் ஒன்றாக ஆழ்ந்து நோக்குவோம்.

## மாத்திரை

### மாத்திரையின் பொது இயல்பு

3. கால அளவில் மிகச் சிறிய பொழுது; கண் இமைக்கும் காலம், கையால் நொடிக்கும் காலம் ஒரு மாத்திரையாம்.

'கண் இமை, நொடி என அவ்வே மாத்திரை
நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட ஆறே' (தொல். நூல். 7)

என்பது தொல்காப்பியம். தொல்காப்பியர் குற்றெழுத்து முதலிய எழுத்துக்களின் மாத்திரை வகுக்குமிடத்து, மாத்திரையின் பொது இயல்பை மேற்குறித்த சூத்திரத்தால் விளக்கியுரைத்தார்.

### மாத்திரை என்பது எழுத்துக்களின் ஒலி அளவு

4. எழுத்துக்களுக்குரிய மாத்திரை அளவைக் குறிக்குமிடத்து, மாத்திரை என்பதற்கு 'அளபு', 'அளவு' என்னும் பெயர்களை அவர் ஆண்டுள்ளார். 'ஓரளவு இசைக்கும் குற்றெழுத்து' (தொல். நூல். 3) 'ஈரளவு இசைக்கும் நெட்டெழுத்து' (தொல். நூல். 4) 'மெய் தெரிவளி இசை அளவு நுவன்றிசினே' (தொல். பிறப். 20) என்று இவ்வாறு பல இடங்களில் சுட்டியுள்ளமை காணலாம்.

### செய்யுள் உறுப்பு - மாத்திரை

5. செய்யுளுக்குரிய ஓர் உறுப்பாகவும் 'மாத்திரை' என்பதனைப் பொருளதிகாரத்தில் செய்யுளியலிலே குறிப்பிட்டுள்ளார், தொல்காப்பியர்.

'மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ'

(தொல். பொரு. செய். 11)

'மாத்திரை அளவும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந்தன்ன என்மனார் புலவர்'

(தொல். பொரு. செய். 2)

என்பன செய்யுளியல் முதற்கண் உள்ள சூத்திரங்கள். இங்கே 'மேற்கிளந்தன்ன' என்பது தொல்காப்பிய எழுத்ததிகாரத்தின் முதல் இயலாகிய நூன்மரபில் கூறிய எழுத்துக்களின் மாத்திரை அளவினை யும் எழுத்துக்களின் வகைகளையும் குறிப்பிட்டவாறும்.

*மாத்திரை - சொற்பொருள்*

6. 'மாத்திரை' என்பதனை அளவு என்னும் பொருளில் சங்க இலக்கியம் முதலியனவும் குறித்துள்ளன.

'முலைக்கோள் விடா மாத்திரை' (பொருநா. 14)

'கேட்டல் மாத்திரை அல்லது, யாவதும்
காண்டல் செல்லாது யாண்டு பல கழிய' (புற. 216 : 1-2)

என வருவன இதற்குச் சான்றும்.

7. மிக விரைவில் நிகழும் செயலை மாத்திரை அளவில் நிகழ்ந்த தாக உரைத்தல் மரபு.

'மாத்திரைக்குள் அருளு மாற்பேறரே' (தேவா. 5 : 60 : 3)

என்றும்,

'நொடிப்பது மாத்திரை நீறு எழக் கணை நூறினர்'
(தேவா. 7 : 44 : 1)

என்றும் பல இடங்களில் மாத்திரை என்னும் சொல்லைத் தேவார ஆசிரியர்கள் ஆண்டுள்ளனர்.

*நொடியும் கணமும்*

8. மாத்திரை என்பதனை, 'நொடி', 'கணம்' எனவும் வழங்குவர்.

'நொடிதரு பாணிய பதலையும்' (மலைபடு. 11)

'மாத்திரையைச் சொல்லும் தாளத்தையுடைய
ஒரு கண்மாக்கிணை' (மலைபடு. 11, நச். உரை)

'நொடி வரையின் மூலளரி செய்து' (தேவா. 3 : 69 : 2)

'நொடியாம் அளவும் எய்தான்' (பெரிய திரு. 5 : 10 : 5)

'மனமே வாக்கே, கருமமே,
ஒருமா நொடியும் பிரியான்' (திருவாய். 10 : 7 : 8)

முதலியனவாக ‘நொடி’ என்பது இங்கு மாத்திரை என்னும் பொருளில் வருகிறது.

‘குணம்என்னும் குன்றுஏறி நின்றார் வெகுளி
கணமேயும், காத்தல் அரிது’ (திருக்குறள் : 3 : 9)

‘கணம் படிந்துஏத்தி, கங்குலும் பகலும்
கருத்தினால் கைதொழுது எழுவேன்’ (தேவார. 7 . 14 : 8)

இவ்விடங்களில் ‘கணம்’ என்பது மாத்திரை என்னும் சிறிய கால அளவையைச் சுட்டுதல் காணலாம்.

## கால நுட்பம்

9. மாத்திரை போன்றே நுட்பமான சிறுகால அளவைத் ‘துடி,’ ‘கலை’ என்றும் கூறுவர்.

‘துடியும் கலையும் தொடர்கால நுட்பம்’ (தெய்வப் பெயர்த் தொகுதி) என்பது திவாகரம்.

## கடிகை, நாழிகை, கன்னல்

### கடிகை நாழிகையின் மூலக் கூறு

10. கடிகை, நாழிகை என்பன மாத்திரையை அடுத்து வரும் சற்றுப் பெரிய கால அளவை. இதுவே பொழுதை அளவிடும் சிறிய மூல அளவை. ‘அல்லும் பகலும் அறுபது நாழிகையும்’ என்பது உலக வழக்கு.

‘யாண்டும், மதியும், நாளும், கடிகையும்’ (சிலப். 27 : 1)

என்பதனால் கடிகைகள் சேர்ந்து ‘நாள்’ என்னும் காலவரையறை உளவாதல் பெறப்படும்.

‘நாழிகையும் பல ஞாயிறு ஆகி’ (8 : 107 : 7)

என்பது தேவாரம்.

11. நாழிகைகள் சேர்ந்து ஆகும் கால அளவை யாமம்.

‘ஊழியும் யாண்டு எண்ணி யாத்தன ; யாமமும்
நாழிகையானே நடந்தன’

என்பது நான்மணிக்கடிகை (71).

### நாழிகைக் கணக்கர்

12 நாழிகையை அளவிட்டு உரைப்போர் ‘நாழிகைக் கணக்கர்’ எனப்படுவர். இவர்கள் நீர்க் கன்னலின் உதவியால் நாழிகையைக்

கணக்கிடுவர். இவருக்குக் 'கடிகையார்' என்னும் பெயருமுண்டு. நாழிகை அளவிடும் கருவியாகிய கன்னல் என்பது 'நாழிகை வட்டில்' என்று கூறப்படும். இதனல் இவரை 'நாழிகை வட்டிலிடுவார்' என்ப. நாழிகைக் கணக்கராகிய கடிகையார் பொழுது அறிந்து உரைக்கும் மரபினைப் பின்வரும் நூற்பகுதிகள் புலப்படுத்துகின்றன :

'பொழுது அளந்து அறியும் பொய்யா மாக்கள்
தொழுது காண் கையர், தோன்ற வாழ்த்தி,
எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்! நின்
குறுநீர்க் கன்னல் இனைத்து என்று இசைப்ப' (முல்லை. 55-58)

'கோமகன் கோயில் குறுநீர்க் கன்னலின்
யாமம் கொள்பவர் ஏத்தொலி அரவமும்.' (மணி. 7 : 64-65)

### கடிகை ஆரம்

13. பெருங்கதையில் கழுத்தில் அணியும் ஓர் அணியைக் 'கடிகை ஆரம்' என்று குறிப்பிடுகிறர்.

'கடிகை ஆரம் கழுத்தில் மின்ன' (பெருங். 38 : 123)

என்பது பெருங்கதை. இதற்கு, 'நாழிகையைப் புலப்படுத்தும் கருவியை யுடைய ஆரம். 'கடிகைவாள் ஆரம் மின்ன' (சிவக. 2808) கடியாரம் என இக் காலத்து இப் பெயர் வழங்குகின்றது' என்று டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் குறிப்பு வரைந்துள்ளார்.

### இடைக்கால நூல்களில் நாழிகை வழக்கு

14. தேவாரம், திவ்யப் பிரபந்தம் முதலிய நூல்களும் நாழிகைப் பொழுதினைக் குறிப்பிடுகின்றன. இந் நாழிகையாவது 'மணி' என்றாற் போல, ஒருநாளின் சிறுகாலக் கூறு என்பது தெளிவாம்.

'காலமும் நாழிகையும்
நனிபள்ளி மனத்தின் உள்கி' (தேவார. 7 : 97 : 10)

'ஊழியின் பெரிதால் நாழிகை என்னும்' (திருவாய். 2: 7: 4)

'தொண்டைமன்னவன் திண்திறல் ஒருவற்கு
உளம்கொள் அன்பினெடு இன்அருள் சுரந்து,
ஒடுநாழிகை ஏழுடன் இருப்ப' (பெரியதிரு. 5 : 8 : 9)

'கரிய நாழிகை ஊழியின் பெரியன' (பெரியதிரு. 8 : 5 : 6)

'முத்துஆர் கொங்கை புணர்ந்து இராநாழிகை
மூவேழு சென்றபின் வந்தாய்' (பெரியாழ்வார். 3:1:10)

'நாழிகை கூறுஇட்டுக் காத்து நின்ற
அரசர்கள்தம் முகப்பே
நாழிகை போகப் படை பொருதவன்' (பெரியாழ்வார். 4:1:8)

'பலபல ஊழிகள் ஆயிடும்; அன்றி ஓர் நாழிகையைப்
பலபல கூறிட்ட கூறு ஆயிடும்.' (திருவிருத்தம். 16)

## முழுத்தம் (முகூர்த்தம்)

15. குறித்த ஒரு பொழுதை முகூர்த்தம் என்பர். இதுவே 'முழுத்தம்' என இலக்கிய ஆட்சி பெற்றுள்ளது. இது $3\frac{3}{4}$ நாழிகை அல்லது $1\frac{1}{2}$ மணி அளவு கொண்டது என்பர். ஆனல் சைனர்கள் 2 நாழிகை கொண்ட காலப்பகுதியை முகூர்த்தம் என்பர். இந்தக் கால அளவு தமிழ்ப் பேரகராதியில் மேலே சுட்டியவாறு குறிப்பிடப்பட்டிருக்கிறது.

'இருநில மருங்கின் மன்னர் எல்லாம், நின்
திருமலர்த் தாமரைச் சேவடி பணியும்
முழுத்தம் ஈங்குஇது' (சிலப். கால்கோள். 28-30)

என்பது செங்குட்டுவனுக்குக் கணி வடநாடு செல்வதற்குக் குறித்த காலமாகும்.

'ஊழ்வினை துரப்ப ஒடி ஒன்றும்மூழ்த் தத்தினுள்ளே'
(சீவக. சிந். 13 : 165)

என 'முழுத்தம்' என்பது 'மூழ்த்தம்' என்றும் வழங்கப்படுதல் காணலாம்.

16. இது 'ஓரை' எனவும் வழங்கும்.

'மங்கலப் பெருங்கணி வகுத்த ஓரையான்' (சீவக. சிந். 2411)

'ஊழி னன்றியும் உறுவினை ஓரையின் முடிப்பான்
வேழ வேந்தற்கு விழுப்பெருங்கணி எடுத்து உரைப்பான்'
(சீவக. சிந். 12 : 9)

எனவரும் இடங்களில் 'ஓரை' என்பது குறிப்பிட்ட ஒரு காலப்பொழுதினைச் சுட்டுகின்றன.

ஓரை என்பது இராசியைச் சுட்டல்

17. 'மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்
துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை' (தொல். களவு. 44)

எனத் தொல்காப்பியர் கூறுகிறர். இங்கே குறித்த 'ஓரை' என்பது நட்சத்திரம் பொருந்தி வரும் முகூர்த்த காலத்தைக் குறித்ததாதல்

வேண்டும். 'இரேவதி வியாழ ஒரை' (சிவக. சிங். 3 : 14) எனவரும் சிந்தாமணித் தொடரும் ஈண்டு ஒப்பு நோக்கத்தகும்.

18. தொல்காப்பியர் சுட்டும் ஓரை என்பது கோள் எனப்படும் இராசியைக் குறித்ததாம் எனக் கொள்வர் பேராசிரியர். 'தீய இராசியின் கண்ணும் தீயநாளின் கண்ணும் கூட்டத்தைத் துறந்த ஒழுக்கம் தலைவற்குக் களவொழுக்கத்தின்கண் இல்லை. எனவே கற்பின் உள என்றவாறு' எனப் பேராசிரியர் 'மறைந்த ஒழுக்கத்து' எனத் தொடங்கும் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு விளக்கம் எழுதியுள்ளார்.

## யாமம்

*யாமம்—இரவின் காற்கூறு*

19. 'யாமம்' என்பதனை ஓர் இரவின் காற்கூறாக மதுரைக்காஞ்சி கூறும். மதுரை மாநகரில் இரவின் ஒவ்வொரு யாமத்தும் நிகழ்ந்த செயல்களை விரிவாக இப் பாடல் தருகிறது (615-686).

முதல் யாமத்தை 'முந்தை யாமம்' (620) என்கிறார். முந்தை யாமம் சென்ற பின், மக்கள் தம் தொழில் முடித்துப் படுக்கைக்குச் செல்லுதலை உணர்த்துகின்றார். இந்த யாமம் 'பானாள் கொண்ட கங்குல் இடையில்' முடிவுறுகின்றது. இங்கே பானாள் என்பது நடு இரவைக் குறிக்கும்.

*அரை நாள்*

20. இரவின் நடுப்பகுதியை 'அரைநாள்' (பெரும்பாண். 111), 'நடுநாள்' (முல்லை. 50) என்றும் கூறுவர். இங்கே அரைநாள், நடுநாள் என்பன இரவுப்பொழுதின் நடுப்பகுதியைக் குறித்ததாகவே கொள்ள வேண்டும். நண்பகல் பொழுதை, 'ஒருதிறம் சாரா அரைநாள் அமையத்து' என நெடுநல்வாடை (74) குறிப்பிடுகிறது. எனவே, பகலின் நடுப்பகுதியும் அரைநாள் என வழங்கப் பெற்றமை பெறப்படும்.

*மூன்றாம் யாமம்*

21. இதன்பின் மூன்றாம் யாம நிகழ்ச்சிகளில் ஊர்காப்பாளர் துயிலின்றிக் காவல் புரிதலைக் கூறி, இங்ஙனம் இந்த யாமமும் பகுத்து அறியும் வகையில் சென்றது என்று குறிப்பாராய், 'மற்றை யாமம் பகல் உறக் கழிப்பி' (653) என்பர். பகல் உறக்கழித்தலாவது யாம அளவைப் பிரித்து உணரும் வகையில் போக்கி என்பதாம். மூன்றாம் யாமத்து உலவுபவர்; ஊர்காப்பாளர் மட்டும் அல்லர் பேயும், அணங்கும் பிற தெய்வங்களும் திரிவதும் இந்த யாமத்தில் தானாம். எனவே, இம் மூன்றாம் யாமம் 'கடவுள் வழங்கும் கையறு கங்குல்' (651) எனப்படுகிறது. இடையாமத்து உலவும் ஊர்காப்பாளரை, 'யாமங் கொள்பவர்' (புறம். 37 : 9) எனப் புறநானூறு கூறுகிறது.

### இரவின் கடையாமம்

22. மூன்றும் யாமம் கழிந்ததும் மதுரைமாநகரம் துயிலுணரத் தொடங்கிவிடுகிறது. முதலில், 'ஓதல் அந்தணர் வேதம் பாடும்' (655) ஒலி எழுகிறது. யாழோர் முதலிய இசைகாரர் இசை எழுப்புகின்றனர். கடை, மனை முதலிய இடங்களில் மெழுகுதல் முதலிய பணிகள் தொடங்கப்படுகின்றன. சூதர், மாகதர், வேதாளிகர் வாழ்த்தெடுக்கின்றனர். நாழிகை சொல்லுவார் நாழிகையின் அளவைச் சொல்லுகின்றனர்.

'வேதாளிகரொடு நாழிகை இசைப்ப' (மதுரை. 678)

என்கிறார் மாங்குடி மருதனார். இங்கே நாழிகை என்பது நாழிகைப் பொழுது சென்றது அறிந்து கூறும் கடிகையாரைக் குறிக்கும். ஆகவே, இவர் ஒவ்வொரு நாழிகையும் சென்றதும், அவ்வந் நாழிகை கழிந்த பொழுதை யாவரும் உணர வெளிப்படுத்திவந்தனர் என்பது போதரும். இதனை,

'பூமென் கணையும் பொருசிலையும் கைக்கொண்டு
காமன் திரியும் கருவூரா !—யாமங்கள்
ஒன்றுபோய், ஒன்றுபோய், ஒன்றுபோய் நாழிகையும்
ஒன்றுபோய், ஒன்றுபோய், ஒன்று'

(அடியார்க்குநல்லார் மேற்கோள்: சிலப். 5 : 49)

எனவரும் பழம்பாட்டானும் உணரலாம்.

### வைகறை

23. கடையாமத்தின் இறுதியே வைகறைப்பொழுது. 'வைகறை யாமம் துயில் எழுந்து' என்பது ஆசாரக்கோவை (4). மக்கள் வைகறையில் துயிலெழுவதற்கு உதவியாக, வைகறை நெருங்கி விட்டது என்பதனைக் கோழிகள் கூவி அறிவித்துவிடுகின்றன.

'பொறிமயிர் வாரணம் வைகறை இயம்ப' (673)

என்பது மதுரைக்காஞ்சி. மேலும், இவ் வைகறைப் பொழுதை இரவு நீங்கிச் செல்லும் காலம் என்றும் இம் மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.

'இரவுத் தலைப்பெயரும் ஏம வைகறை.' (மதுரை. 686)

24. இதன்பின், காலைப்பொழுது தோன்றுகிறது.

'வைகறை யாமம் வாரணம் காட்ட,
வெள்ளி விளக்க, நள்இருள் கடிய'

என்பது சிலப்பதிகாரம் (6: 116-117).

*சிலப்பதிகாரம் முதலியவற்றில் இரவு யாமங்கள்*

25. இரவில் காதலர்களைத் துயில விடாதபடி காமதேவன் கருப்பு வில்லேந்தித் திரிந்தான் என 'இளங்கோவடிகள் அந்திமாலைச் சிறப்புச் செய்காதை'யில் கூறுமிடத்து, 'யாமப் பொழுதும்' இடம் பெற்றுள்ளது.

'புள்வாய் முரசமொடு பொறிமயிர் வாரணத்து
முள்வாய்ச் சங்கம் முறைமுறை ஆர்ப்ப,
உரவுநீர்ப் பரப்பின் ஊர்துயி லெடுப்பி,
இரவுத் தலைப்பெயரும் வைகறை காறும்,
அரை இருள், யாமத்தும், பகலும் துஞ்சார்,
விரைமலர் வாளியொடு கருப்புவில் ஏந்தி
மகரவெல் கொடி மைந்தன் திரிதர,
நகரம் காவல் நனிசிறந்தது என்' (சிலப். 4 : 77-84)

26. இங்கே வைகறை, யாமம் என்பன வருதல் கவனிக்கத்தகும். இங்கே வைகறை என்றது வைகறை யாமமாகிய நான்காம் யாமத்தை. அரைஇருள் என்பது இரண்டாம் யாமம். யாமம்—ஓர் யாமம். பகல்—அரை யாமம், அதாவது மூன்றாவது யாமம்.

27. இராப்பொழுதின் கூறாக இங்குக் குறித்த யாமத்தைப் பற்றிய குறிப்பு மற்றைய இலக்கியங்களிலும் உண்டு:

'யாயும் பிறரும் அறியாத யாமத்து' (பெரியாழ். 10:5:8)

'சேண்பட்ட யாமங்கள் சேராது இரங்குதியால்'
(திருவாய்மொழி. 2 : 1-2)

'யாமங்கள் தோறும் எரிவீசும் நம் கண்ணன்' (திவ்விய.)

'யாமத்து எல்லைஓர் யாண்டு ஒத்து இறந்ததே!'
(சீவக. சிந்தா. 5 : 150)

'யாமமும் பகலும் அறியாமையால்
பூமி மாநகர் பொன்னுலகு ஒத்தவே!' (சீவக. சிந்தா. 1:106)

## சிறுபொழுது

*அறுவகைச் சிறுபொழுது*

28. மேலே குறித்தபடி யாமம், வைகறை, காலை என்றாற்போன்று வரும் பகல் இரவுப் பொழுதுகளின் சிறுகூறுகள் சிறுபொழுது என்று கூறப்படும். காலை, நண்பகல், எற்பாடு, மாலை, யாமம், வைகறை என அறுவகைச் சிறுபொழுதுகளாகக் காலைப் பொழுது தொடங்கிப் பகுத்துக் கூறுதல் மரபு.

### தொல்காப்பியத்தில் சிறுபொழுது

29. தொல்காப்பியர் தமது நூலில் பின்வரும் சிறுபொழுதுகளைக் குறித்துள்ளார். மாலை (தொல். பொருள். அகத். 6), 'வைகுறு விடியல்' (தொல். பொருள். அகத். 8), எற்பாடு (தொல். பொருள். அகத். 8), நண்பகல் (தொல். பொருள். அகத். 9) என்னும் சிறு பொழுதுகளைத் தொல்காப்பியத்துள் காணலாம். இவற்றுள் 'வைகுறு விடியல்' என்பதனை வைகறைப் பொழுதும், விடியல் ஆகிய காலையும் எனவும் இருசிறு பொழுதுகளைக் குறிப்பதாகவும் கருதுவது உண்டு.

### ஐவகைச் சிறுபொழுது

30. 'காலையும், பகலும், கையறு மாலையும்,
ஊர்துஞ்சு யாமமும், விடியலும், என்றுஇப்
பொழுது இடைதெரியின் பொய்யே காமம்'

எனவரும் குறுந்தொகைப் பாடலில் ஐவகைச் சிறுபொழுதுகள் இடம் பெற்றுள்ளன. இச் சிறுபொழுதுகளின் இயல்பினைத் தனித்தனியே சிறப்பித்துக் கூறுதலை சங்கப் பாடல்களிலும் பிற்பட்ட பாடல்களிலும் அங்கங்கே காணலாகும்.

## பகல், இரவு

31. காலை முதல் மாலை வரை உள்ள காலத்தைப் பகல் என்கிறோம்; இது சூரியன் விளங்கும் காலம். எனவே, இவனைப் பகலை ஆக்குவோன் என்னும் பொருளில், 'பகலவன்' என்றும் கூறுவர். இங்ஙனமே இரவின் இருளை நீக்கி ஒளி செய்கிறான் சந்திரன்.

'பகற் செய்யும் செஞ்ஞாயிறும்,
இரவுச் செய்யும் வெண்திங்களும்' (மதுரை. 7-8)

எனவரும் மதுரைக்காஞ்சி அடிகள் சூரிய சந்திரரைப் பகல், இரவு ஆக்குவோராகக் கூறுகின்றன.

'அகல் இரு விசும்பினானும்
பகல் விளங்குதியால் பல்கதிர் விரித்தே (புற. 8:9-10)

எனச் சூரியன் பகலில் விளங்குதலைப் புறநானூறும் சுட்டுகிறது.

32. பகலில் ஒளி செய்வதனால் 'எல்' என்னும் ஒளிப்பெயர் சூரியனுக்கும், 'எல்லை', 'எல்லி' எனும் பெயர்கள் பகற்பொழுதுக்கும் வழங்கும்.

'எல்லையும் இரவும் எண்ணாய்' (புறம். 7 : 7)

'எல்லையும் இரவும் ஊன்தின்று மழுங்கி' (பொருந. 118)

'பல்மான் எல்லை தருநன் பல்கதிர் பரப்பி' (பொருந. 232-233)

'எல்படக் கண்போல் மலர்ந்த' (திருமுருக. 74)

'இரவொடு எல்லியும் ஏத்துவார்' (தேவாரம்)

இவற்றுள் 'எல்லை தருநன்' என்பது பகற்பொழுதைத் தரும் கதிரோனைக் குறிக்கும்.

'பறவை பாட்டு அடங்கினவே, பகல்செய்வான் மறைந்தனனே' (சிலப். கானல். 7 : 42)

'பையுள் நோய் கூரப் பகல்செய்வான் போய்விழ' (சிலப். கானல். 7:50)

எனச் சிலப்பதிகாரம் சூரியனைப் 'பகல் செய்வான்' என்று குறிப்பிடுதல் காணலாம்.

33. இன்ப துன்பம் போலப் பகலும் இரவும் மாறிமாறி வருகிறது என்கிறார் ஒரு புலவர்.

'இன்பமும் இடும்பையும், புணர்வும் பிரிவும்,
நன்பகல் அமையமும் இரவும் போல,
வேறுவேறு இயல ஆகி, மாறு எதிர்ந்து
உள என உணர்ந்தனை ஆயின்' (அகம். 327:1-4)

என்பது புலவர் வாக்கு.

34. இரவிலிருந்து பிரித்தலினால், பிரித்தல் என்னும் பொருள்படும் பகல் என்பது சூரியன் விளங்கும் காலப்பகுதிக்குப் பெயராயிற்று.

இதற்குக் காரணமான சூரியனையே 'பகல்' என்னும் பெயரால்,

'பல்மலர்ப் பூம்பொழில்
பகல் முளைத்தது போல்' (மணி. 4:92)

என மணிமேகலை கூறுகிறது.

எல்லி

35. 'எல்லி' என்பது பகலைக் குறித்தல் ஒருபுறமிருக்க இச்சொல், இரவு என்னும் பொருளிலும் வழங்கப் பெறுகிறது.

'எல்லி வருநர் களவிற்கு' (குறுந். 47 : 3)

'எல்லி வந்து நில்லாது புக்கு.' (புறம். 305:3)

சூரியனது ஒளி குறைந்தது என்னும் பொருளில், 'பெய்தற்கு எல்லின்று பொழுதே' (புறம். 319 : 7) எனப் புறநானூற்றில் வந்துள்ளது. ஆகவே, ஒளி குறைந்து இருள் பரவி இராப்பொழுது ஒளியின்மை யாதல் கருதி 'எல்லி' எனக் குறிக்கப்பட்டதோ என்பது, சொல் வரலாற்று ஆய்வாளர்களின் ஆராய்ச்சிக்குரியதொன்றாகும்.

'எல்லும் எல்லின்று' (குறுந். 179 : 2) என்பது குறுந்தொகைத் தொடர்; பகற்பொழுதும் மங்கியது என்பது இதன் பொருள்.

*அல்*

36. எல் ஒளி இல்லாத இரவுப் பொழுதை 'அல்' என்றும் வழங்குவது உண்டு.

'அன்று அவண் அசைஇ, அல்சேர்ந்து அல்கி,' (மலைபடு. 158)

'அல் சேர்ந்து அல்கி, அசைதல் ஓம்பி' (மலைபடு. 256)

37. இரவில் நடைபெறும் கடைத்தெருவை,

'அல்லங்காடி அழிதரு கம்பலை' (மதுரை. 544)

என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. இதற்கு எதிராகப் பகலில் பொருள் விற்கும் கடைகளை 'நாளங்காடி' என்பர்.

'நாளங்காடி நனந்தலைக் கம்பலை' (மதுரை. 430)

என வருதல் இதற்குச் சான்றாம்.

*அந்தி*

38. பகற்பொழுதின் காலை, நண்பகல், மாலை என்னும் முப்பகுதியும் கூறப்பட்ட இடங்களும் பல உள. பொதுவாக, 'அந்தி மாலை' என்று மாலைப் பொழுதை அந்தி என்று குறிப்பிடுதலேயன்றி, காலை, நண்பகற் பொழுதுகளையும் 'அந்தி' என்று குறித்தலும் உண்டு. இங்கே அந்தி என்பது இருபொழுதுகள் சந்திக்கும் காலத்தைக் குறிக்கின்றது

'காலை அந்தியும் மாலை அந்தியும்' (புறம். 34 : 8)

'நண்பகல் அந்தி நடைஇடை விலங்கலின்' (பொருந. 46)

39. இவற்றுள் 'காலை அந்தி,' 'மாலை அந்தி' என்பன இரவும் பகலும், பகலும் இரவும் சந்திக்கும் பொழுதுகளாம். பகலும் இரவும் சேர்ந்த காலப் பகுதியே நாள் எனப் பெயர் பெறுகிறது.

## *நாள்*

*பகலும் இரவும்*

40. 'நாள் என ஒன்றுபோல் காட்டி' (குறள், 33 : 4)

'ஒருநாள் எழுநாள் போல் செல்லும்' (குறள். 126 : 9)

எனவரும் குறட் பகுதிகள் பகல் இரவு சேர்ந்த காலப் பகுதியை 'நாள்' எனக் குறிப்பிடுகின்றன.

'நாள்போல் கழியல ஞாயிற்றுப் பகலே' (புறம். 65 : 12)

எனவரும் புறநானூற்றுச் செய்யுள் அடிக்குச் 'சூரியனைக் கொண்டுள்ள பகற்பொழுது முன்பு கழிந்த நாள் போலக் கழியா' என்பது பொருள். இங்ஙனம் 'நாள்' என்பது வருதல் சங்கப் பாடல்களில் சிறுபான்மையே. பெரும்பான்மையும் சங்கப் பாடல்களில் இப்பொருளிலே 'வைகல்,' 'பகல்' என்னும் சொற்கள் பயின்று வந்துள்ளன.

வைகல், பகல்

41. வைகல் என்பது தங்குதல் என்றும் 'கழிதல்' என்றும் பொருள் தரும் சொல்லாகும். 'பகல்' என்பது பகுத்தல் என்னும் பொருள் தரும். ஒளியும் இருளும் தங்குதலும் ஒளியும் இருளும் அகலுதலும் கருதி 'வைகல்' என்றும், பொழுதைப் பாகுபாடு செய்தல் கருதிப் 'பகல்' என்றும் வழங்கும் வழக்கம் தோன்றியதாதல் வேண்டும்.

'வைகல் வைகல் கைகவி பருகி' (பொருந. 158)

எனவும்,

'ஒல்வ கொடாது ஒழிந்த பகலும்' (நாலடி. 16 : 9)

'ஒன்பது குடையும் ஒருபகல் ஒழித்தவன்' (சிலப். 27 : 121)

எனவும்,

'வைகலும் வைகல் வரக்கண்டும், அஃது உணரார்
வைகலும், வைகலை வைகும் என்று இன்புறுவர்—
வைகலும் வைகல்தம் வாழ்நாள்மேல் வைகுதல்
வைகலை வைத்துஉணரா தார்' (நாலடி. 4 : 9)

எனவும் வரும் பாடற் பகுதிகளால் மேற்குறித்த செய்திகள் புலப்படுகின்றன.

நாள் திங்கள் ஆகும்

42. மேலும், இந் நாள் என்னும் பொழுது திங்களின் அங்கமாகவும் உள்ளது. ஔவையார் அதிகமான் நெடுமான் அஞ்சியைப் பாராட்டிப் பேசும்பொழுது, 'ஒருநாளில் எட்டுத் தேரைச் செய்யும் தச்சன் ஒரு மாதம் கொண்டு செய்த தேர்ச் சக்கரத்தை ஒத்த வலிமை உடையான்' என்று அவனைப் பாராட்டுகின்றார் :

'எம்முளும் உளன்ஒரு பொருநன் ; வைகல்
என் தேர் செய்யும் தச்சன்
திங்கள் வலித்த கால் அன்னோனே' (புறம். 87 : 2-4)

என்பது ஔவை வாக்கு. இங்கே 'வைகல்' என்பது நாளையும் 'திங்கள்' என்பது மாதத்தையும் குறிக்கும். திங்களின் கூறாக அமைவன திதி, வாரம், பக்கம் என்பன. இவற்றுள் திதியும், பக்கமும் சந்திரனுடைய கதியைக் கொண்டு அறியப்படுபவை.

### நாளின் தொடக்கம்

43. இரவுப்பொழுது நீங்கிப் பொழுது விடிதலே ஒரு நாளின் தொடக்கமாகும். நாளின் தொடக்கத்திற்குக் கோழியும் பிற பறவைகளும் கட்டியங்கூறி வரவேற்றலைப் புலவர் பெருமக்கள் அழகுற வருணித்துள்ளனர். பாண்டியனுடைய அரண்மனையிலே காலைமுரசம் ஒலிக்கும் ஓசை கேட்ட மாதரி, தன் மகள் ஐயையைக் கூவி, அரண்மனைக்கு நெய் கொடுக்கும் முறை இந் நாளில் நமக்குளது என்று உரைத்துத் தயிர்கடை மத்தும் கயிறும் கொண்டு அவள் தயிர் கடைய முற்படுதலைச் சிலப்பதிகாரம் குறிப்பிடுகிறது :

'மாலை வெண்குடைப் பாண்டியன் கோயிலில்
காலை முரசம் கனைகுரல் இயம்பும் ; ஆகலின்,
நெய்ம்முறை நமக்கு இன்றுஆம்' என்று,
ஐயை தன் மகளைக் கூஉய்க்
கடை கயிறும் மத்தும் கொண்டு
இடை முதுமகள் வந்து தோன்றுமன்.'

(சிலப். ஆய்ச்சியர். 5-10)

இங்கே, 'நெய்ம்முறை நமக்கு இன்று' என்று காலை முரச ஓசை கேட்டு மாதரி கூறினளாதலான சூரியன் உதிக்கும் காலமே ஒருநாளின் தொடக்கம் எனல் தெளிவு.

44. மேலும், பல்வேறு நிகழ்ச்சிகளுக்கும் உரிய காலமாக இருப்பதும் பகற்போதுதான். நாட்காலை, நாட்சோறு, நாள்மோர், நாட்பலி, நாளிருக்கை முதலியனவாக வரும் தொடர்களும் இக் கருத்தை அரண்செய்வனவாக உள்ளன.

45. 'ஒருநாள் செல்லலம் ; இருநாள் செல்லலம்
பலநாள் பயின்று, பலரொடு செல்லினும்,
தலைநாள் போன்ற விருப்பினன் மாதோ'

(புறம். 101:1-3)

'ஒருநாள் வாரலன், இருநாள் வாரலன் ;
பல்நாள் வந்து பணிமொழி பயிற்றி' (குறுந். 176:1-2)

என்ற போன்று வரும் தொடர்களும் நாள் என்னும் கால அளவைப் பகல் தொடங்கி இரவு இறுதிகாறும் உள்ள பொழுதே என்பதனைக் குறிப்பிடுகின்றன.

நாட் கணக்கு

46. நாட்கணக்குத் தெரிவதற்குச் சுவரில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு கோடாக இட்டு அவற்றை எண்ணி வந்தனர் என்றும் தெரிய வருகிறது. சுவரில் நாட்கணக்கு எழுதப் படுதலால், 'நாள் இழை நெடுஞ்சுவர்' (அகம். 61:4) என்று சுட்டுகிறார் ஒரு புலவர். தலைவனைப் பிரிந்துறைமகளிர், சுவரில் தாம் இழைத்த கோடுகளை எண்ணி, அவன் சென்ற கால இடையீட்டை நினைந்து, வருந்தி நிற்கும் நிலையையும் சங்கப்பாடல்கள் குறிப்பிட்டுள்ளன :

'விங்கு இழை நெகிழ, விம்மி ஈங்கே
எறிகன் பேதுறல்; 'ஆய் கோடு இட்டுச்
சுவர்வாய் பற்றும்நின் படர்சேண் நீங்க
வருவேம்' என்ற பருவம் உதுக்காண்.' (குறுந். 358:1-4)

சேண் உறை புலம்பின் நாள்முறை இழைத்த
திண்சுவர் நோக்கி, நினைந்து, கண்பனி,
நெகிழ்நூல் முத்தின், முகிழ்முலைத் தெறிப்ப.'
(அகம். 289:9-11)

'செல்சுடர் நோக்கிச் சிதர் அரிக்கண் கொண்டநீர்
மெல்விரல் ஊழ்தெறியா, விம்மி, தன்மெல் விரலின்,
நாள்வைத்து, நம் குற்றம் எண்ணும்கொல், அந்தோ! தன்
தோள்வைத்து அணைமேல் கிடந்து ! (நாலடி. 40:4)

இவற்றினால் சுவரில் குறியிட்டு நாட்கணக்குப் பார்த்து வந்ததொரு வழக்கமும் முன்பு இருந்தமை புலனாம்.

## வாரம், கிழமை

47. பாட்டு, தொகை நூல்களில் ஏழு நாள்கள் கொண்ட வாரம் அல்லது கிழமை என்னும் கால அளவு காணப்படவில்லை. ஆனால், ஒன்றுக்கு ஏழு என்னும் ஒரு வழக்குச் சங்கப் பாடல்களில் உளது.

'எழுகுளிறு மிதித்த ஒருபழம் போல.' (குறுந். 24:4)

'ஏழ்ஊர்ப் பொதுவினைக்கு ஓர் ஊர் யாத்த
உலை வாங்கு மிதி தோல்.' (குறுந். 172:5-6)

இவ்வாறு குறிப்பிடும் இடங்கள் இன்னும் பல உள. இங்கே 'ஏழு' என்பது 'பல' என்னும் பொருள் பயப்பதாகும். பரிமேலழகர் 'ஒரு

நாள் எழுநாள் போல் செல்லும்' (குறள். 127:9) என்னும் குறட் பகுதிக்கு விளக்கம் தரும்போது,

" ஏழ் என்பது அதற்கு மேலாய பன்மை குறித்து நின்றது,
'ஒருவர் கூறை எழுவர் உடுத்து' என்றாற்போல"

என்று குறிப்பிடுதல் கவனிக்கத் தக்கது.

**நாளும் கோளும்**

48. ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என இப்பொழுது வாரப்பெயர்களை வழங்கி வருகிறோம். இவை கோள்களின் (கிரகங்களின்) பெயர்கள் ஆகும். சம்பந்தர் தாம் பாடிய கோளறு பதிகத்தில்,

'ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி,
சனி, பாம்பு இரண்டும் உடனே
ஆசுஅறும்; நல்லநல்ல; அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே' (சம்பந்தர், 2:85:1)

என நவகோள்களைக் கூறுமிடத்து ஞாயிறு முதலாக எண்ணுதல் காணலாம்.

49. 'இன்றையது அன்று கேண்மை
எமர் நுமர் எழுவர் காறும்
நின்றது கிழமை நீங்கா,
வச்சிர யாப்பின் ஊழால்' (சீவக. 544)

என்பது சீவக சிந்தாமணி. இங்கே 'வச்சிர யாப்பு' என்றது வச்சிரத்தால் தலையில் இட்ட எழுத்தினை. கேண்மை இன்று உளதாயது அன்று; வச்சிர யாப்பின் நீங்காத விதியினாலே எமர் எழுவர் நுமர் எழுவர் அளவும் ஏழு கிழமையும் போல ஏற்றிழிவு இன்றி நின்றது அக்கேண்மை' என்பது பொருள். இங்கே வாரத்தின் ஏழுநாள்களை ஏழுதலை முறைக்கு உவமை கூறுகின்றார்.

50. மேலும், சிந்தாமணியில், 'கோளுடைக் கிழமை ஒப்பாய்' என்றும் உள்ளது. இதற்கு விளக்கம் தரும்பொழுது பதிப்பாசிரியர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்,

'கோளுடைக் கிழமையாவது ஞாயிறு முதலாகிய கிழமைகள். ஏழு கோளுக்கும் அவற்றிற்கும் மிக்க உரிமை உண்டு என்பர். கிழமை என்பதன் பொருளே இதனைப் புலப்படுத்தும்',

என்று எழுதியுள்ளார்.

*ஏழு கிழமைப்பெயர்*

51. *திருநாவுக்கரசர்*, 'இறைவன் ஏழு கிழமையாகவும் உள்ளான்' என்று புகழ்கின்றார்.

'குருகுஆம், வயிரம்ஆம், கூறும்நாள்ஆம் ;
கொள்ளும்கிழமைஆம்; கோளே தான்ஆம்'

(தேவா. 6:15:1)

'கொள்ளும் கிழமை ஏழ்
ஆனாய் போற்றி' (தேவா. 6:56:6)

என்பன நாவுக்கரசர் வாக்குகள்.

52. சிலப்பதிகாரம் கட்டுரை காதையில், மதுராபதி தெய்வம், ஆடி மாதத்துக் கிருஷ்ணபட்சத்து அட்டமி திதியில் வெள்ளிவாரத்தன்று மதுரை எரிந்துபடும் என்னும் ஓர் உரை முன்பே உள்ளமையைக் கண்ணகிக்கு எடுத்துக் கூறுவதாக ஒரு நிகழ்ச்சி உள்ளது.

'ஆடித் திங்கள் பேரிருட் பக்கத்து,
அழல்சேர் குட்டத்து, அட்டமி ஞான்று,
வெள்ளி வாரத்து, ஒள்ளெரி உண்ண
உரைசால் மதுரையொடு அரைசு கேடுறும்' எனும்
உரையும் உண்டே—நிரைதொடி யோயே !

(சிலப். கட்டுரை 23:133-137)

என்பது அத் தெய்வத்தின் வாக்கு. இங்கே 'வெள்ளி வாரம்' குறிப்பிடப்படுதல் காணலாம்.

**நாள், கிழமை, பக்கம்**

53. சிவகசிந்தாமணியில் ஒருபாட்டு நாள், கிழமை, பக்கம் என்பவற்றை முறையே குறிப்பிடுகிறது. மண்டபம் ஒன்றை நிர்மாணிப்பதற்குரிய காலம் பற்றிச் சோதிடர் வகுத்துரைத்த முகூர்த்தத்தை அப் பாடல் தெரிவிக்கிறது. அது வருமாறு :

'நானக் கிடங்கு ஆடைநகர் நாகத்திடை நன்பொன்
வான் நக்கிடு மாட்சியது ஓர் மண்டபம் செய்கென்ன
மீனத்திடை நாள்; கிழமை வெள்ளி, சயை பக்கம்,
கானத்திடை வேங்கை எழக், கண்ணினர்கள் அன்றே'

(சீவக. 590)

இப்பாடலுக்குரிய நச்சினார்க்கினியர் உரையும் கிழமைக் கருத்தை நன்கு விளக்குதலினால், அதுவும் ஈண்டு ஒப்பு நோக்குதல் பொருத்தமாகும். நச்சினார்க்கினியர் தரும் உரைவிளக்கம் வருமாறு :

54. 'நானக் கிடங்கை ஆடையாகவுடைய நகராகிய சுவர்க்கத்தின் நடுவே பொன்னையுடைய வானைச் சிரித்திடும் அழகினையுடையதொரு மண்டபத்தைச் செய்க என்று கூறினுகை—

கணிகள் வெள்ளிக்கிழமையும் திருதியையும் பெற்ற உத்திரட்டாதி நாள் சிங்கம் உதயமாக முகூர்த்தம் குறித்தார் என்க.

நானம்—புழுகு. குளித்தலில் புழுகு உடைத்தாயிற்று. வானைத் தீண்டும் என்றும் ஆம்

பூரட்டாதியின் நாலாங்காலும் உத்திரட்டாதியும் இரேவதியும் மீனராசியாதலால், உத்திரட்டாதி நடுநாள் ஆதலின், 'மீனத்திடை நாள்' என்றார். திருதியை, அட்டமி, திரயோதசி என்பவற்றில், திருதியை சிறத்தலின் 'சயை பக்கம்' என்றார். மேடத்தின் முற்கூறு மேடராசியின் கூறு; இரண்டாம் கூறு சிங்கராசியின் கூறு, மூன்றும் கூறு தனுராசியின் கூறு. ஆதலால் மேடத்தின் நடுக்கூற்றைச் சிங்கத்தின் உதயமாக விதித்தார். இது கூறிற்று, சிங்கத்தே பிருகஸ்பதியாதலின், வெள்ளி முதல் வியாழம் ஈருகக் கிழமை ஏழாயவாறும், உத்திரட்டாதி முதல் உரோகிணி ஈருக நாள் ஆருயவாறும் கூடுமாறு என்னை எனின், இத்திங்களில் சதயம் முதல் ஆயிலியத்தளவும் சந்திரன் வர்த்தித்து வருதலின், வியாழக் கிழமைக்கு உரோகிணி கூடிற்று. இதனுனே மேல்

'ஒள் நிற உரோணி ஊர்ந்த ஒளிமதி ஒண்பொன் ஆட்சி'

(சீவக. 620)

என்று வியாழக் கிழமையிலும் சிறிது நாழிகை உரோகிணியாகக் கூறினர்.'

## திதி – பக்கம்

### 55. பிறைக் கணக்கு

பிறை தோன்றி வளரும் வளர்பிறைப் பக்கமும், முழுமதிக்குப் பின் மதி தேய்ந்து வரும் தேய்பிறைப் பக்கமும் எனப் பக்கம் இரண்டு. இவற்றை முறையே வளர்பிறை, தேய்பிறை (சுக்கில பட்சம், கிருஷ்ண பட்சம்) என இப்பொழுது வழங்குவர். திங்கள் நிறைமதிநாள் தவிர, மற்றைய நாள்களில் எல்லாம் மாற்றம் பெற்று வரும் இயல்பினை உடையது.

திங்களின் மாறுதல் நாள் ஒவ்வொன்றும் 'திதி' என்று கூறப்படும். திதியாவது திங்களின் நிலைமை என்று கொள்ளலாம். இம் மாறுதல் நிலை இரு பக்கத்தும் உள்ளதே. ஒன்று வளரும் நிலைமை;

மற்றென்று தேயும் நிலைமை. இந்நிலைமை பற்றிப் பாட்டு தொகை நூல்களில் காணும் குறிப்புக்கள் வருமாறு :

56. முதற் பிறை

'பிறை பிறந்தன்ன பின் ஏந்து கவைக்கடை' (பெரும்பாண். 11)

57. மூன்றும் பிறை

'தொழுதுகாண்பிறை' (குறுந். 178 : 5)

'ஒள்இழை மகளிர் உயர்பிறை தொழூஉம்
புல்லென் மாலை' (அகம். 239 : 9-10)

58. எட்டாம் பிறை

'எண்-நாள் திங்கள் வடிவிற்று ஆகி,
அண்-நா இல்லா அமைவரு வறுவாய்' (பெரும்பாண். 11-12)

'எண்-நாள் திங்கள் அனைய கொடுங்கரை.' (புறம். 118 : 2)

59. வளர்பிறை

'குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்
வழிவழி சிறக்க நின் வலம்படு கொற்றம்' (மதுரைக். 193-194)

'சிறுகோட்டுக் குழவித் திங்கள்' (பெரும்பாண். 383-384)

60. நிறை மதி (பதினைந்தாம் நாளில்)

பிறையின் இரு கோடும் (முனையும்) பொருந்தி வட்டவடிவம் திருந்திக் காணப்பெறுவதே நிறைமதி (பூர்ணச் சந்திரன்).

'கோடு கூடு மதியம் முழுநிலா விளங்கும்' (புறம். 67 : 4)

'மணி நிற மைஇருள் அகல, நிலா விரிவு,
கோடுகூடு மதியம் இயலுற்றாங்கு' (பதிற். 31 : 11-12)

'மாக விசும்பின் வெண் திங்கள்
மூ-ஐந்தான் முறை முற்ற'
கடல் நடுவண் கண்டன்ன' (புறம். 400 : 1-3)

உவாப்பதினான்கு

61. 'உவாப்பதினான்கு' என உம்மைத் தொகையாக வழங்கப் பெறும் ஒரு பழந்தொடர் உவாவும் பதினான்கு திதியும் எனப் பொருள் பயந்து, பதினைந்து நாள் கொண்ட பக்கத்தினை உணர்த்தும். 'அட்டமியும், ஏனை உவாவும், பதினான்கும்' என்னும் ஆசாரக் கோவை அடிகள் 47 : 1) 'உவாப்பதினான்கு' என்னும் தொடரை விளக்கி நிற்றல் காணலாம்.

### வளர்பிறை, தேய்பிறை

62. பிறை தோன்றிப் பதினைந்தாம் நாள் நிறைவு பெறும் வரை உள்ள பகுதியே வளர்பிறை. இப் பிறைகள் திங்களின் இயற்கைக் கலையாகிய ஒற்றைக் கலையுடன் சேர்ந்து, பதினாறு கலைகளோடு கூடிய நிறைமதியாகக் காட்சியளிக்கும். பின், இப் பதினாறு கலைகளோடு கூடிய மதி தேய்ந்து வரும். நிறைமதியை அமரர் உணவாகக் கொள்ளுதலினால் தேய்கிறது என்பது ஒரு புராணக் கொள்கை. இதுவே தேய்பிறைப் பக்கம்.

‘அணிநிழல் வயங்குஒளி, ஈர்-எண் தீம்கதிர்,
பிறைவளர், நிறைமதி உண்டி,
அணிமணிப் பைம்பூண், அமரர்க்கு முதல்வன்நீ!’

(பரி. 3 : 51 : 53)

### அலர்தரு பக்கம், வழியது பக்கம்

63. வளர்பிறைப் பக்கம் ‘அலர்தரு பக்கம்’ என்றும் முற்பக்கம் என்றும் குறிக்கப்படும். தேய்பிறைப் பக்கமோ ‘வழியது பக்கம்’ என்றும் பிற்பக்கம் என்றும் சுட்டப்பெறும். நிறைமதி உவா ‘பெரும் பக்கம்’ எனப்படும்; அதாவது, பௌர்ணமி நாள். அமாவாசை நாள் ‘இருள் உவா’ எனப்படும். இக்குறிப்புக்கள் பதினொன்றாம் பரிபாடலால் தெரிய வருகின்றன.

‘ஆம்நாள் நிறைமதி அலர்தரு பக்கம் போல்,
நாளின், நாளின், நளிவரைச் சிலம்பு தொட்டு,
நிலவுப் பரந்தாங்கு, நீர்நிலம் பரப்பி,
உலகு பயம்பகர ; ஓம்பு பெரும்பக்கம்
வழியது பக்கத்து அமரர் உண்டி
மதிநிறைவு அழிவதில் வரவு சுருங்க ;
எண்மதி நிறை, உவா இருள் மதிபோல
நாள் குறை படுதல் காணுநர் யாரே ?
சேண் இகந்து கல் ஊர்ந்த மாண் இழை வையை’

(பரி. 11 : 31-39)

என வையையில் நீர் மிகுதலுக்கும் குறைவுபடுதலுக்கும் இரு பக்கங்களில் மதியின் நிலைமையை ஒப்புக் காட்டியுள்ளார் கவிஞர்.

‘குடமுதல் தோன்றிய தொன்று தொழு பிறையின்
வழிவழிச் சிறக்க, நின் வலம்படு கொற்றம்!
குணமுதல் தோன்றிய ஆர்இருள் மதியின்
தேய்வன கெடுக நின் தெவ்வர் ஆக்கம்’ (மதுரை. 193-194)

எனவரும் மதுரைக்காஞ்சி அடிகளில் பெருகுதலுக்கும் சுருங்குதலுக்கும் வளர்பிறை தேய்பிறைகள் உவமம் காட்டப்பட்டுள்ளமை காணலாம்.

### தேவாரம் முதலியவற்றில் திதிக் குறிப்பு

64. அட்டமி என்னும் திதிப் பெயரும் உவாவும், பதினன்கு திதிகளும் பற்றிய குறிப்புக்கள் தேவாரம் முதலிய இடைக்கால இலக்கியங்களிலும் பயின்று வந்துள்ளன.

'உச்சிஅம் போழ்தோடு, இடையாமம், ஈர்அந்தி,
மிக்க இருதேவர் நாளோடு, உவாத்திதி நாள்,
அட்டமியும், ஏனைப் பிறந்தநாள், இவ்அனைத்தும்
ஒட்டார்—உடன் உறைவின் கண்.' (ஆசாரக். 43)

'அட்டமியும், ஏனை உவாவும், பதினன்கும்,
அப்பூமி காப்பார்க்கு உறுகண்ணும், மிக்க
நிலத் துளக்கு, விண் அதிர்ப்பு, வாலாமை—பார்ப்பார்
இலங்குநூல் ஓதாத நாள்.' (ஆசாரக். 47)

'அழல் சேர் குட்டத்து அட்டமி ஞான்று' (சிலப். கட்டுரை. 134)

'பண் ஆர் பதினெண் கணங்கள்தம் அட்டமிநாள்
கண்ணாரக் காணாதே போதியோ பூம்பாவாய்!'

'தீர்த்தம்ஆம் அட்டமி முன் சீருடை ஏழு நாளும்
கூத்தராய் வீதி போந்தார், குறுக்கை வீரட்டனாரே'
(நாவுக். தேவா. 4 : 50 : 2)

'உவாக் கதிர்த்திங்கள் அம்மென்
கதிர் விரித்து உடுத்தது ஒத்தான்' (சிந்தாமணி. 12 : 67)

'ஓவாது இரண்டு உவாவும், அட்டமியும்
பட்டினி விட்டு ஒழுக்கம் காத்தல்
தாவாத் தவம் என்றார்' (சிந்தாமணி. 6 : 136)

'அட்டமியில் ஓதினல் ஆசானுக்கு ஆகாது;
சிட்டருக்குப் பன்னன்கு தீதாகும்;—கெட்டஉவா
வித்தைக்கு நாசம் ஆம்; வெய்ய பிரதமையில்
பித்தரும் பேசார் பிழை' (பெருந்தொகை. 258)

என்பது ஒரு பழைய தனிப்பாடல்.

### நிகண்டுகளில் திதி—பக்க விளக்கம்

65. நிகண்டுகளில் பழமையவாகிய திவாகரம், பிங்கலம் என்பனவும் திதி, பக்கங்களின் இயல்புகளை விளக்குகின்றன.

‘ திதியே பக்கம்’ (திவா. தெய்வப்.)
‘ பக்கம் முதலது நந்தை ஆகும்’ (திவா. தெய்வப்.)
‘ பத்திரை என்பது இரண்டாம் பக்கம்’ (திவா. தெய்வப்.)
‘ மூன்றே சயை பக்கம்’ (திவா. தெய்வப்.)
‘ நான்கே இருத்தை’ (திவா. தெய்வப்.)
‘ ஐந்தாம் பக்கம் பூரணை ஆகும்’ (திவா. தெய்வப்.)

இச்சூத்திரங்களை அப்படியே பிங்கல நிகண்டுடையார் தமது நூலின் இரண்டாவது தொகுதியான வானவர் வகையில் எடுத்தாண்டுள்ளார் (194, 198, 199, 206, 202). நந்தை, பத்திரை, சயை, இருத்தை, பூரணை என்னும் ஐந்தும் ஒரு பக்கத்தில் மும்முறை வருவதாகும். அதாவது 1, 6, 11 நந்தை என்று கொள்ள வேண்டும். இவ்வாறே பிற வற்றிற்கும் கொள்ளுதல் வேண்டும்.

‘ மீனத்திடை நாள், கிழமை வெள்ளி, சயை பக்கம்’ (சீவக. 590) எனச் சிந்தாமணி ‘ சயை’ என்னும் திதியை எடுத்தாண் டுள்ளமை காணலாம்.

## திங்கள் (மாதம்)

### திங்கள் என்னும் பெயர்

66. திங்களைக் கொண்டு (சந்திரன்) மாத அளவு கணிக்கப் பட்டமை பற்றித் ‘ திங்கள்’, ‘மதி’ என்னும் பெயர்கள் மாதத்தைக் குறிக்கவும் வழங்கப்பட்டன. ‘மதியே, திங்கள், மாதம் ஆகும்’ (திவா. தெய்வப்.) என்பது திவாகரம்.

### பிறை நோக்கிக் காலங்கணித்தல்

67. கண்ணகிக்கு இமயத்தில் எடுத்த சிலையைக் கங்கையில் நீராட்டியபின், சேரமன்னன் செங்குட்டுவன் தம் வீரர்க்குப் பெருஞ் சிறப்புச் செய்து, கங்கைக்கரைப் பாடியில் வீற்றிருக்கிறான். அப் பொழுது அங்குவந்த மாடல மறையோனுடன் உரையாடிக் கொண்டி ருந்தான். கதிரவன் அந்திவானை நெருங்கவே செக்கர்வானில் வெண் பிறை எழுந்தது. அதனைக் கண்ட கணி ‘வஞ்சிநகரை விட்டு வந்து இன்றோடு 32 மாதங்கள் ஆயின எனக் கூறுகின்றான். கணியின் உரை வருமாறு :

“ பகல்செல முதிர்ந்த படர்கூர் மாலை
செந்நீப் பரந்த திசைமுகம் விளங்க,
அந்திச் செக்கர் வெண்பிறை தோன்ற,
பிறைஏர் வண்ணம் பெருந்தகை நோக்க,
இறையோன் செவ்வியின் கணிஎழுந்து உரைப்போன் ;

எண்-நான்கு மதியம் வஞ்சி நீங்கியது
மண் ஆள் வேந்தே! வாழ்க! (சிலப். நீர்ப்படை. 144-150)

இந்நிகழ்ச்சியிலிருந்து மதிக்கொழுந்தாம் பிறையின் தோற்றம் நோக்கி, திதி, பக்கம், மாதம் கொண்டனர் என்பது போதரும்.

68. பாரி மகளிர் பாடிய புறப்பாட்டில், அம்மகளிர் தம் தந்தையையும் அரசச் செல்வத்தையும் இழந்து நலிவுற்றிருந்த காலத்திலே திங்கள் தோன்றக் கண்டு, தமது முந்தைய மாதத்து நிலையை உன்னி, நிகழ்கால நிலைக்கு இரங்கி மொழிந்ததாகக் காணப்படுகிறது.

‘அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்,
எந்தையும் உடையேம்; எம்குன்றும் பிறர் கொளார்;
இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்,
வென்று எறிமுரசின் வேந்தர் எம்
குன்றும் கொண்டார்; யாம் எந்தையும் இலமே!’ (புறம்.112)

இங்கே, ‘அற்றைத் திங்கள்’, ‘இற்றைத் திங்கள்’ என்பன மாதங்களைக் குறித்துத் திங்களின் பெயர் வழங்கப்படுதலையும், திங்களை, நோக்கி மாதப் பாகுபாடு கொள்ளுதலையும் புலப்படுத்துதல் காணலாம்.

### முற்பக்கமும் பிற்பக்கமும்

69. உவாநாளின்பின் பிறையின் தோற்றம் முதற்கொண்டு பதினன்கு நாள்களையும், அலர்தரு பக்கம், முற்பக்கம் என்றும் நிறைமதி நாளின்பின் பதினன்கு நாள்கள் வழியது பக்கம், பிற்பக்கம் எனவும் வழங்கப்படுதலைப் பக்கத்தைப் பற்றி முற்கூறிய பகுதியில் பார்த்தோம். அதோடு ‘எண்நாள் திங்கள்’ (பெரும்பாண். 11-12; புறம். 118:) என்னும் வழக்கு எட்டாம் நாள் காணும் பிறையைக் குறித்தலினல், பிறை தொடக்கமாகத் திங்களின் தொடக்கமும் கொள்ளப் பெற்றது என்பதைக் குறிப்பிக்கும்.

### மாதத் தொடக்கம்

70. மேற்குறித்த ஒருசில குறிப்புகளினல் திங்கள் அமாந்தமாய் முடிவுற, பிறை தொடக்கமாக அடுத்த திங்களின் நாட்களைக் கணக்கிட்டனர் என்று கொள்ளலாம்.

‘பங்குனி உயர் அழுவத்துத்
தலைநாள் மீன்நிலை திரிய’ (புறம். 229 : 5-6)

எனவரும் பகுதி பங்குனி மாதத்தினது முதற் பதினைந்தின்கண், அம்மாதத்திற்குச் சிறப்பான உத்தரநாள், உச்சியினின்று சாய்தலைக் குறிப்பிடுகிறது. இதனுனும் மேலே சுட்டிய அமாந்த முறை வழக்கம் உணரலாகும்.

மாதப் பெயர்கள்

71. ஒவ்வொரு மாதத்தும் நிறைமதி நாளில் சந்திரனோடு சேரும் நட்சத்திரப் பெயரைக்கொண்டு மாதப் பெயர்கள் அமைந்திருத்தல் கவனிக்கத்தக்கது. சங்கப் பாடல்களிலும் பிற இலக்கியங்களிலும் பயின்று வரும் சில குறிப்புக்கள் இவ் வுண்மையைத் தெளிவுபடுத்து கின்றன.

சித்திரை

72. காவிரிப்பூம்பட்டினத்தில் இந்திரவிழா நிகழ்த்தப்பெற்றது, சித்திரை மாதத்துச் சித்திரை நாளில் வரும் பூரணையிலாகும்.

'சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென' (சிலப். இந்திர. 64) என்பது சிலப்பதிகாரம். இதில் 'சேர்ந்தென' என்பதற்குச் 'சிறந்தென' எனவும் பாடம் உண்டு. இவ்வாறு பாடம் கொண்டவர் அரும்பதவுரைகாரர். 'சித்திரை மாதத்துச் சித்திரைநாள் சிறந்தது என்கையால், சித்திராபூரணை என்க' என்பது அரும்பதவுரை.

வைகாசி

73. வைகாசி விசாகம் புத்ததேவனுக்கு உரியநாள். மணிமேகலை மணிபல்லவத் தீவிலுள்ள கோமுகிப் பொய்கையில் அமுதசுரபி பெற்றதும் இந் நாளில்தான்.

'இருது இளவேனில் எரிகதிர் இடபத்து
ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்,
மீனத்து இடைநிலை மீனத்து அகவையின்,
போதித் தலைவனொடு பொருந்தித் தோன்றும்'

(மணி. பாத்திரம் பெற்ற. 40-43)

முன்பு அமுதசுரபிக்கு உரியனாயிருந்த ஆபுத்திரன் என்பான் மறு பிறப்புத் தோற்றம் செய்ததும் வைகாசி மாதத்து விசாக நாளில்தான் என்பர் சாத்தனார்.

'இருது இளவேனில் எரிகதிர் இடபத்து,
ஒருபதின்மேலும் ஒருமூன்று சென்றபின்,
மீனத்து இடைநிலை மீனத்து அகவையின்
போதித் தலைவனொடு பொருந்திய போழ்தத்து'

(மணி. பாத். பிச்சைபுக்க. 23-26)

என்பது சாத்தனார் வாக்கு. இந்த இரண்டு இடங்களிலும் மீனத்து இடைநிலை மீனம் என்றது 27 நட்சத்திரங்களுள் நடுவில் நிற்றலை யுடைய விசாகம். இங்கே கார்த்திகையை முதலாகக் கொண்டு

என்னும் பழைய முறைப்படி விசாகம் 27 நட்சத்திரங்களுள் பதினன்காவதாய் நடுவில் வருதல் காணலாம்.

### கார்த்திகை

74. கார்த்திகை மாதத்தில் நிறைமதியுடன் அறுமீனுகிய கார்த்திகை சேர்ந்து வருதலே,

'குறுமுயல் மறுநிறம் கிளர, மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகல்இருள் நடுநாள்' (அக. 141 : 7-8)

எனவரும் அகநானூற்றடிகள் புலப்படுத்துகின்றன.

'மழைநீங்கிய மாக விசும்பில்
மதி சேர்ந்த மக வெண்மீன்' (பட்டின. 34-35)

என்பதனல் மகவெண்மீன் மதிசேரும் மாசி மாதம் உணர்த்தப்படுதல் தெளிவு.

### மார்கழி

75. ஆண்டாள் தமது திருப்பாவையில் 'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்நாளில்' பாவை நோன்பு செய்வார் நீராடத் தொடங்குதலைக் குறிப்பிடுகின்ருர். மார்கழிப் பூரணையில் மிருகசீரிட நாளில் இந்த நோன்பு தொடங்குதலினல், 'மார்கழி நீராடல்' என ஆண்டாள் அருளிச்செய்கின்ருர்.

'மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்நாளால்
நீராடப் போதுவீர், போதுமினே நேரிழையீர்' (திருப்பாவை.1)

என்று அழைக்கின்ற அம்மையார், பின்னரும்,

'வாழ உலகினில் பெய்திடாய் நாங்களும்
மார்கழி நீராட மகிழ்ந்து—ஏல் ஓர் எம்பாவாய்!
(திருப்பாவை. 4)

என மழையை வேண்டிக் கூறுகிருள்.

'மாலே மணிவண்ணு மார்கழிநீர் ஆடுவான்'

என மாலை நோக்கிப் பேசுமிடத்தும் 'மார்கழிநீர்' எனக் கூறுதல் கவனிக்கத்தக்கது.

### தைந் நீராடல்

76. இங்ஙனமாகவும் சங்கப் பாடல்களோ மகளிர் தைந்நீராடி நோன்பு நோற்றமையைக் குறிப்பிடுகின்றன. பரிபாடல் திருவாதிரையில் அந்தணர் விழா தொடங்கியதையும், அப்பொழுது முதுபார்ப்பனி

மார் நோன்பு முறை காட்டக் கன்னிப்பெண்கள் 'அம்பாவாடல்' என்னும் தைந்நீராட்டம் தொடங்குதலேயும் விளக்குகிறது. இங்கே திருவாதிரை என்பது மார்கழியில் மதி நிறைந்த மிருகசீரிட நாளுக்கு அடுத்த நாளாகும். பூர்ணிமாந்த முறையில் பார்ப்பின் ஆதிரை தையின் தொடக்கநாள் ஆகும். எனவே, தையில் தொடங்கும் நீராடல் தைந்நீராடல் ஆயிற்று. தைந்நீராடி மகளிர் நோன்பு இயற்றுதலே,

'தையின் நீராடிய தவம் தலைப்படுவாயோ?' (கலி. 59)

எனக் கலித்தொகையும் குறிப்பிடுகின்றது. திருப்பாவை குறித்ததும் இப் பாவை நோன்பைத்தான். திருப்பாவையை அடுத்துவரும் நாச்சியார் திருமொழியில், 'தை ஒரு திங்களும் தரை விளக்கி' எனக் குறிப்பித்தது மார்கழிப் பூரணமையில் தொடங்கி, தை மாதம் முழுவதும் நோன்பு இயற்றியதலைப் புலப்படுத்தியவாரும்.

*மாசியில் காம நோன்பு*

77. இதன்பின், மாசி முன்னுளிலிருந்து காமநோன்பு தொடங்குகிருள் ஆண்டாள். இங்கே மாசி முன்னுள் என்பது தை மாத நிறைவாகிய தைப்பூசப் பூரணேயைக் குறிக்கும். ஆகவே, ஆண்டாள் மார்கழிப் பூரணிமையில் தொடங்கிய பாவை நோன்பைத் தை மாதப் பூரணே வரையில் நிகழத்தி, மாசி முன்னுளாம் தை மதி நிறை நாளில் காமநோன்பு தொடங்குகிருள்.

'தைஒரு திங்களும் தரை விளக்கி,
தண்மண்டலம் இட்டு மாசி முன்னுள்
ஐயநுண் மணல் கொண்டு தெரு அணிந்து,
அழகினுக்கு அலங்கரித்து அனங்கதேவா!
உய்யவும் ஆம் கோலோ?' என்று சொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்;
வெய்யது ஓர்தழல் உமிழ் சக்கரக்கை
வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே' (நாச். 1)

என்பது கோதை திருமொழி. இங்கே தை ஒரு திங்களும் தரை விளக்கியது என்றது திருப்பாவையில் குறித்த பாவை நோன்பை. இதைப் பூர்த்தி செய்ததும் மாசி முன்னுளாம் தைந்நிறைவில். நிறைமதி நாளில் காமனே நோக்கி நோன்பு இயற்றத் தொடங்குகிருள். இந் நோன்பு பங்குனி மாதம் பூர்த்தியாகும் கடைநாளாம் உத்தரம் வரை கொண்டாடப்படுகிறது. இதனேப் பின்வரும் நச்சியார் திருமொழிப் பாசுரங்களில் காணலாகும்.

*பங்குனி உத்தரம்*

78. 'உருவு உடையார் இளேயார்கள் நல்லார்
ஒத்து வல்லார்களேக் கொண்டு, வைகல்

தெருவிடை எதிர்கொண்டு பங்குனிநாள்
திருந்தவே நோற்கின்றேன் காமதேவா !' (நாச். 1:6)

என்பதனல் பங்குனி மாதத்து நாள்கள் முழுவதும் மாசி முன்னளில் தொடங்கிய இக் காம நோன்பு இயற்றப்பெறுதல் பெறப்படும்.

'நாமம் ஆயிரம் ஏத்த நின்ற
நாராயண ! நரனே ! உன்னை
மாமிதன் மகன் ஆகப் பெற்ருல்
எமக்கு வாதை தவிருமே ;
காமன் போதரு காலம் என்று பங்
குனி நாள் கடை பாரித்தோம்,
தீமை செய்யும் சிரீதரா ! எங்கள்
சிற்றில் வந்து சிதையேலே !' (நாச். 2 : 1)

இங்கே பங்குனி நாள் கடை வரையில், அதாவது உத்தரநாள் வரையில் காமன் போதரும் காலமாகக் கொண்டு போற்றி இங் நோன்பு பூர்த்தி செய்யப்படுதல் தெரியவரும். ஆண்டாள் பாசுரங்களின் போக்குப்படி பார்த்தால், பூர்ணிமாந்த முறை வழக்கப்படி நோன்பு முதலியன இயற்றப் பெறுதல் புலனுகிறது.

*நிறைமதியில் விழாக்கள்*

79. பங்குனி நிறைமதியில் திருவிழாக் கொண்டாடுதல் எங்கும் பெருவழக்காய் இருந்து வந்ததொன்றே. உறையூரில் பங்குனியில் நிகழ்ந்த பெருவிழாவை, 'பங்குனி முயக்கம்' (அக. 137 : 9) என அக நானூற்றுத் தொகைநூல் குறிப்பிடுகின்றது. இங்கே 'பங்குனி முயக்கம்' என்றது பங்குனி நிறைமதி நாளாம் உத்தரத்தில் நடந்த பெரு விழாவைக் குறிக்கும். இங்ஙனமே பிற மாதங்களிலும் நிறைமதி நாளில் விழாக்கள் கொண்டாடப்பெற்று வந்தமை இலக்கியங்களால் தெரியவரும்.

80. சித்திரைத் திங்களில் சித்திரைநாள் சேரும் நிறைமதி நாளில் இந்திரவிழா நிகழ்ந்தமையை முன்பு சுட்டினேம்.வைகாசி விசாக நாளைப் புத்ததேவனுக்கு உரிய நாளாக மணிமேகலை கூறும். மாயோனுக் குரிய ஓண விழா ஆவணி நிறைமதி நாளில் நிகழ்த்தப்பெறுவதாம். மார்கழி மிருகசீரிடத்தில் வரும் நிறைமதியோடு அடுத்து வரும் ஆதிரை சிவபெருமானுக்கு விழா எடுக்கும் பெருநாளாகும். அதோடு மார்கழி மதிநிறை நாள் பாவை நோன்பு தொடங்கும் காலமும் ஆகும். தைப் பூசம் தை மாதப் பூரணமையில் வருவது. காமன் நோன்பு தொடங்கிய தும் இப் பூசநாளில்தான். மக நாளில் கடலாடும் விழாச் சிறப்பாகக் கூறப்பட்டிருக்கிறது. பங்குனி உத்தரம் பெருவிழாநாள் என்பது கண்டோம். இவ்வாருக நிறைமதி நாளில் விழா நடைபெறுதல், பூர்ணி மாந்த முறையில் திங்களின் நிறைவையும் அடுத்த திங்களின் தோற்றத் தையும் கொண்டாடும் நோக்கமாக இருந்திருத்தல்கூடும்.

### மயிலையில் மாதத் திருவிழாக்கள்

81. 'சம்பந்தர் தமது மயிலாப்பூர்த் தேவாரமாகிய 'மட்டு இட்ட புன்னை' (2 : 47) எனத் தொடங்கும் பூம்பாவைப் பதிகத்தில் ஐப்பசி முதல் பங்குனி வரையில் அங்கு நிகழும் திருவிழாக்களைக் குறிப்பிட்டுள்ளார் :

'ஐப்பசி ஓண விழாவும் அருந்தவர்கள்
துய்ப்பனவும் காணாதே போதியோ பூம்பாவாய் ! (2 : 47 : 2)

'துளக்குஇல் கபாலீச் சரத்தான் தொல்கார்த்திகைநாள்
தளத்து ஏந்து இளமுலையார் தையலார் கொண்டாடும்
விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்!' (2 : 47 : 3)

'கார்தரு சோலைக் கபாலீச்சரம் அமர்ந்தான்
ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய் !' (2 : 47 : 4)

'நெய்ப் பூசும் ஒண் புழுக்கல் நேரிழையார் கொண்டாடும்
தைப்பூசம் காணாதே போதியோ பூம்பாவாய்!' (2 : 47 : 5)

'மடல் ஆர்ந்த தெங்கின் மயிலையார் மாசிக்
கடலாட்டுக் கண்டான் கபாலீச்சரம் அமர்ந்தான்! ' (2:47:6)

'பலி விழாப் பாடல் செய் பங்குனி உத்தரநாள்
ஒலி விழாக் காணாதே போதியோ பூம்பாவாய் ! (2:47:7)

### பன்னிரு மாதப் பெயர்கள்

82. ஆண்டு என்பதனைக் குறிக்க சிந்தாமணி 'பன்னிரு மதியின்' (சீவக. 1220) என்றும் 'ஆறு - இரு மதியின்' என்றும் சுட்டுகிறது. எனவே, தமிழ் ஆண்டின் பகுதியாக வழங்கும் சித்திரை முதல் பங்குனி ஈறாக மாதப்பெயர்கள் பழமையாகவே வழங்கி வருவன என்பதும், சங்கப் பாடல்கள் முதலியன இம்மாதப் பெயர்களைச் சுட்டுதலும் இவ் வழக்கின் தொன்மையைப் புலப்படுத்தும் என்பது விளக்கமாகிறது.

83. தொல்காப்பியர் கூறும் திங்கட் பெயர்களின் ஈறுகளை வைத்து நோக்கினும் சித்திரை முதலிய மாதப்பெயர்களை அவர் குறிப்பிட்டுள்ளமை தெரியவரும். இகர ஈற்றுத் திங்கட் பெயர் (மாதம்) ஐகார ஈற்றுத் திங்கட் பெயர் ஆகியவற்றிற்குச் சந்தி விதியைத் தொல்காப்பியர் கூறுகிறார்.

'திங்கள் முன்வரின் இக்கே சாரியை'

(தொல். எழுத். உயிர். 46)

'திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன'

(தொல். எழுத். உயிர். 84)

என்பன தொல்காப்பிய விதிகள். இவை முறையே 'இகர ஈறு' ஐகார ஈறுகளில் முடியும் திங்கட்பெயர்களுக்குரிய விதிகள். திங்கட் பெயருடன் 'இக்கு' என்னும் சாரியை சேர்ந்து வழங்கப்பட வேண்டும் என்பது விதி. 'ஆடிக்குக் கொண்டான்', 'சித்திரைக்குக் கொண்டான்' என்றாற் போன்று வரும். மாதப்பெயர்களில் இகர ஈற்றில் முடிவன, வைகாசி, ஆனி, ஆடி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி, மார்கழி, மாசி, பங்குனி என்னும் ஒன்பதும் ஆம். எஞ்சிய சித்திரை, கார்த்திகை, தை என்னும் மூன்றும் ஐகார வீற்றையுடைய மாதப்பெயர்கள். இப் பெயர்களுக்கே மேற்குறித்த தொல்காப்பிய விதி அமைதலின், சித்திரை முதலிய மாதப் பெயர் வழக்கு தொல்காப்பியர் காலத்திற் கும் முற்பட்டது என்பது போதரும்.

## பருவம் (இருது)

### அறுவகைப் பருவம்

84. இருதிங்கள் சேர்ந்த காலப்பகுதி பருவம் அல்லது இருது எனக் கொள்ளப்படும். ஆவணி தொடங்கி இரண்டிரண்டு மாதங் களாக முறையே கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முது வேனில் என ஆறு பருவங்கள் கொள்வர். உலகம் வளம் பெறுதற்கு ஆதாரமாயிருத்தல் கருதி கார்ப்பருவத்தை முதன்மையாய் வைத்துப் பிற பருவங்களை எண்ணினர் போலும்.

### முப்பெரும் பருவம்

85. இந்த ஆறு பருவங்களையும் முக்கியமாக மழை, பனி, வெயில் என மூன்று பெரும் பகுதியாகவும் கொள்ளலாம். மழைக்காலத்தின் முற்பகுதி கார் எனவும் பிற்பகுதி கூதிர் எனவும் கொள்ளப்படும். முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பனவும் அவ்வப் பருவத்தின் முற்பகுதி பிற்பகுதி நோக்கிக் கொள்ளப்பட்ட தனிப் பெயர்களே.

'காரே, கூதிர், முன்பனி, பின்பனி,
சிர் இளவேனில், முதுவேனில், என்றாங்கு
இருமூன்று வகைய பருவம்.'
அவைதாம்,
ஆவணி முதலா இரண்டுஇரண்டு ஆக
மேவின திங்கள் எண்ணினர் கொளலே' (திவா. தெய்வப்)

என்பது திவாகரம்.

### தொல்காப்பியர் விளக்கும் பருவம்

86. தொல்காப்பியர் அகத்திணை இயலில், ஐவகை நிலங்களுக் குரிய பொழுதுகளை வகுத்துரைக்குமிடத்து, 'கார்' (தொல். பொரு.

அக. 6) 'பனி எதிர்பருவம்' (முன்பனி) (ஷ 7), 'பின்பனி' (ஷ 10), வேனில் (ஷ 9) என்னும் பெரும்பொழுதுகளைக் குறிப்பிட்டுள்ளார். மேலும் அவர், மழை, பனி, வெயில் என்னும் மூன்று பருவப் பெயர்களுக்கும் உயிர் மயங்கியலிலும், புள்ளி மயங்கியலிலும் சந்திவிதி கூறுதலும் குறிப்பிடத்தக்கது.

'மழை என்கிளவி வளி இயல் நிலையும்.' (உயி. மய. 85)

'பனி என வரூஉம் காலவேற்றுமைக்கு
அத்தும் இன்னும் சாரியை ஆகும்.' (உயி. மய. 39)

'வெயில் என்கிளவி மழை இயல்நிலையும்.' (புள். மய. 82)

87. பருவத்தோற்றங்கள் பற்றிய பல குறிப்புக்கள் சங்கப் பாடல்களிலும் பிற்கால இலக்கியங்களிலும் காணப்படுகின்றன.

கார், கூதிர்

88. 'கார் செய்தன்றே கவின் பெறுகானம்' (அக. 4 : 7)

'கானம் கார் எனக் கூறினும்' (குறு. 21 : 4)

'கை தோய்வு அன்ன கார் மழைத் தொழுதி
தூஉய் அன்ன துவலை துவற்றலின்
தேளம் தேருக் கடும்பரிக் கடும்பொடு' (மலைபடு. 362-364)

'முழங்கு கடல் முகந்த கமஞ்சூல் மாமழை
மாதிர நனந்தலை புதையப் பாஅய்' (நற். 347:1-2)

'பெயல் கால் மறைத்தலின் விசும்பு காணலரே
நீர் பரந்து ஒழுகலின் நிலம் காணலரே' (குறுங். 380:1-2)

'கூதிர் நின்றன்றால் போதே' (நெடுநல். 72)

'குன்று குளிப்பன்ன கூதிர்ப் பானாள்.' (நெடுநல். 12)

முன்பனி, பின்பனி

89. முன்பனியை அற்சிரம், அச்சிரம் எனவும் வழங்குவர்.

'பின்பனி அமையம் வரும் என, முன்பனிக்
கொழுந்து முந்துறீஇக் குரவு அரும்பினவே' (நற். 224:3-4)

'பெரும்பெயல் பொழிந்த தொழில எழிலி
தெற்கு ஏற்பு இரங்கும் அற்சிரக் காலையும்' (நற். 5:5-6)

'பின்பனிக் கடைநாள், தன்பனி அற்சிரம்
வந்தன்று, பெருவிறற் தேரே. (குறு. 338:5-6)

'தண்வரல் வாடை தூக்கும்
கடும்பலி அற்சிரம் நடுங்கு அஞர் உறவே (குறு. 76:5-6)

'நோற்றோர் மன்ற தோழி — தண்ணெனத்
தூற்றும் துவலைப் பனிக் கடுந்திங்கள்' (குறுந். 344:1-2)

*இளவேனில், முதுவேனில்*

90. 'இருங்கண் ஞாலத்து ஈண்டு தொழில் உதவிப்
பெரும்பெயல் பொழிந்த வழிநாள் அமையத்து,
பல்பொறி அரவின் செல்புறம் கடுப்ப
யாற்று அறல் நுணங்கிய நாட்பதவேனில்' (நற். 157:1-4)

'போது அவிழ் மரத்தொடு பொருகரை கவின்பெற
நோதக வந்தன்றால் இளவேனில் மேதக' (கலி. 26:7-8)

'நாம்நகை உடையம் நெஞ்சே! — கடுந்தெறல்
வேனில் நீடிய வான் உயர் வழிநாள் (அகம். 121:1-2)

'கல்காயும் கடுவேனிலொடு
இருவானம் பெயல் ஒளிப்பினும்' (மதுரைக். 106-107)

*சிலப்பதிகாரத்தில் அறுவகைப் பருவ வருணனை*

91. சிலப்பதிகாரம் ஊர்காண் காதையில் கார் முதலிய அறுவகைப் பருவமும் முறையே சுட்டப்பெற்றுள்ளன. கடைகழி மகளிர் காலத்திற்கு ஏற்ற இன்பங்களில் ஈடுபட்டமையை விளக்க வந்த இடத்திலே கார்காலம், கூதிர்க்காலம், முன்பனிக்காலம், பின்பனிக் காலம், இளவேனில், வேனில் எனும் பருவங்களையும் அவ்வக் காலங் களில் அம் மகளிர் பொழுதுபோக்கும் வகையையும் இளங்கோவடிகள் விவரிக்கின்றார் (ஊர்காண். 86-125).

'கார் அரசாளன் வாடையொடு வரூஉம்
காலம் அன்றியும் — நூலோர் சிறப்பின்
முகில்தோய் மாடத்து; அகில்தரு விறகின்
மடவரல் மகளிர் தடவு நெருப்பு அமர்ந்து;
நறுஞ் சாந்து அகலத்து நம்பியர் தம்மொடு
குறுங்கண் அடைக்கும் கூதிர்க் காலையும்—
வளமனை மகளிரும் மைந்தரும் விரும்பி,
இளநிலா முன்றிலின் இளவெயில் நுகர,
விரிகதிர் மண்டிலம் தெற்கு ஏர்பு, வெண்மழை
அரிதின் தோன்றும் அச்சிரக் காலையும்
கொண்டலொடு புகுந்து கோமகன் கூடல்
வெங்கண் நெடுவேள் வில்விழாக் காணும்
பங்குனி முயக்கத்துப் பனியரசு யாண்டு உளன்?
கோதை மாதவி கொழுங்கொடி எழுப்ப,
காவும் கானமும் கடிமலர் ஏந்த,
தென்னவன் பொதியில் தென்றலொடு புகுந்து,
மன்னவன் கூடல் மகிழ்துணை தழூஉம்

இன் இளவேனில் யாண்டு உளன்கொல்?" என்று,
உருவக் கொடியோர் உடைப்பெருங் கொழுநரொடு
பருவம் எண்ணும் படர்தீர் காலை—
கன்று அமர் ஆயமொடு களிற்றினம் நடுங்க
என்றூழ் நின்ற குன்றுகெழு நல் நாட்டுக்
காடு தீப்பிறப்ப, கனைஎரி பொத்தி,
கோடையொடு புகுந்து, கூடல் ஆண்ட
வேனில் வேந்தன் வேற்றுப் புலம்படர
ஓசனிக்கின்ற உறுவெயில் கடைநாள்.'

(சிலப். ஊர்காண். 96-125)

92. தேவார திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களிலும் பிற்காலக் காவியங்களிலும் வரும் பருவ வருணனைப் பகுதிகள் பலப்பலவாம். பருவ வருணனையைக் காவியத்திற்கு ஓர் அங்கமாகவும் நூலோர் கூறுவர்.

## ஞாயிறும் அயனமும்

*இருசுடர்*

93. இரவில் ஒளி செய்து திகழும் திங்களையும் பகலில் ஒளி செய்யும் ஞாயிற்றையும் 'இரு சுடர்' (புற. 65 : 7) எனத் தொகைப் பெயரால் குறிப்பிடுவர். மேலும், 'ஞாயிற்றுப் புத்தேள்' (கலி. 108 : 13), 'திங்கட் புத்தேள்' (புற. 27 : 14) என இவ்விரு சுடரையும் தமக்கு வாழ்வு நல்கும் தெய்வங்களாகவே கொண்டு மக்கள் போற்றினர்.

*ஞாயிற்றின் இயல்பும் சிறப்பும்*

94. ஞாயிற்றைச் சுட்டி உரைக்கும் பொழுதெல்லாம் பெயர் அளவில் சுட்டாது, அதன் இயல்பினையும் சிறப்பினையும் புலப்படுத்தும் அடைமொழிகள் சேர்த்தே சங்கப்புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர். 'பகல்செய் மண்டிலம்' (பெரும். 442), 'மலர்வாய் மண்டிலம்' (புற. 175 : 9), 'வீங்கு செலல் மண்டிலம்' (நெடுநல். 161 : புற. 8 : 6), 'தேயா மண்டிலம்' (பரி. 17 : 32), 'சுடர் மண்டிலம்' (அக. 367 : 1), 'சுடர்கெழு மண்டிலம்' (அக. 378 : 14), 'பருதிஅம் செல்வன்' (அக. 360 : 2 ; கலி. 26 : 2), 'மைஅறு மண்டிலம்' (கலி. 141 : 12).

95. ஞாயிற்றினின்று வெளிப்படும் கதிரின் விளக்கம், வெம்மை முதலிய இயல்புகளைப் பாராட்டும் தொடர்களும் உள. 'விரிகதிர் ஞாயிறு' (புற. 228 : 8), 'கதிர்ச் செல்வன்' (பட்டின. 122), 'அலங்கு கதிர்க் கனலி' (புற. 35 : 6), 'தெறு கதிர்க் கனலி' (புற. 397:24), 'அழல்போல் வெங்கதிர்' (அக. 1:10), 'உருகெழு ஞாயிற்று ஒண்கதிர்' (புற. 160 : 1), 'வெவ்வெஞ் செல்வன்' (பொருந. 136). 'வெம்மையால் தெறுதலால்' 'கனலி' (புற. 35 : 6 ; கலி. 16 : 12) என்றும், பெரு

விளக்கமான கதிர்களை உடைமையால் 'சுடர்' (கலி. 100 : 1) என்றும் இஞ் ஞாயிறு வழங்கப்பட்டிருக்கிறது. ஞாயிறு உலகத்திற்கு இன்பத்தையும் நலத்தையும் நல்குதலைச் சுட்டி, 'ஏமுற விளங்கிய சுடர்' (நற். 283 : 7) எனவும் பாராட்டப்படுகிறது.

**ஞாயிறு முதலாப் பிறகோள்கள்—சுடர்ச் சக்கரம்**

96. ஞாயிற்றை முதலாகக் கொண்டு பிற கோள்களும், நாள் மீன்களும் மேரு மலையைச் சூழ வருகின்றன என்பர். ஞாயிறு முதலிய சுடர்களின் போக்கைத் தெரிவிப்பதே 'சுடர்நிலை' எனப்படும் சுடர்ச்சக்கரம்.

'என்றூழ் உறவரும் இருசுடர் நேமி
ஒன்றிய சுடர்நிலை உள்படு வோரும்' (பரி. 19 : 46-47)

என்பது பரிபாடல்.

97. இவை சூழ்வரும் தெரு (வீதி) மூன்று. அவையாவன ஆடு (மேட ராசி), ஏறு (இடப ராசி), மிதுனம் (மிதுன ராசி) என்பன. இவற்றுள் மேட ராசியை முதலாகக் கொண்டு ஏனைய ராசிகளிலும் ஞாயிறு, திங்கள், நட்சத்திரங்கள் ஆகியவை வரும். ஒவ்வோர் இராசியும் ஒன்பது ஒன்பது நட்சத்திரங்களை உரித்தாகக் கொள்ளும். இச் செய்திகள்,

'தெரு இடைப்படுத்த மூன்று ஒன்பதிற்று இருக்கையுள்'
(பரி. 11 : 3)

எனவும்,

'திண்நிலை மருப்பின் ஆடுதலை ஆக,
விண் ஊர்பு திரிதரும் வீங்கு செலல் மண்டிலத்து'
(நெடுநல். 160-161)

எனவும் வருவனவற்றால் புலனாகின்றன.

**ஞாயிற்றின் போக்கும் அயனமும்**

98. ஞாயிறு செல்லும் வீதியை,

'செஞ்ஞாயிற்றுச் செலவும், அஞ்ஞாயிற்றுப்
பரிப்பும் ; பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்'

எனப் புறநானூறு (புற. 30 : 1-2) குறிப்பிடுதலும் கவனிக்கத்தக்கது. ஞாயிற்றின் செலவினாலேயே அயனங்களும், பருவங்களும் உளவாகின்றன. தெற்கும் வடக்குமாகிய அயனங்களில் மாறிமாறி வரும் இயல்புடையது ஞாயிறு.

'கடந்து அடுதானைச் சேரலாதனை
யாங்கனம் ஒத்தியோ?—வீங்கு செலல் மண்டிலம்!
பொழுது என வரைதி; புறக்கொடுத்து இறத்தி;
மாறிவருதி, மலை மறைந்து ஒளித்தி;
அகல் இரு விசும்பினானும்
பகல் விளங்குதியால் பல்கதிர் விரித்தே' (புறம். 8 : 5-10)

என்பது புறப்பாட்டு. இங்கே ஞாயிறு மிக்க செலவை உடைத்தாதலும், பகற்பொழுதைத் தனக்கெனக் கோடலும், திங்கள் மண்டிலத்திற்கு முதுகிட்டுப் போதலும், தெற்கும் வடக்கும் ஆகிய இடங்களில் மாறிமாறி வருதலும், மலையில் மறைந்து போகுதலும், பகலில் பலகதிர் பரப்பி விளங்குதலும் ஆகிய தன்மைகள் சுட்டப்பட்டுள்ளன. 'மாறி வருதி' என்பதற்கு அயனங்களில் மாறி வருதலைக் கொள்ளுதலையன்றி 'இராசி' தோறும் மாறி வருதலையும் குறிப்பித்ததாகவும் கொள்ளுவது உண்டு.

### ஞாயிற்றின் தெற்கு நோக்கிய செலவு

99. ஞாயிறு தெற்கு நோக்கி நகர்ந்து செல்லும் காலத்து பனிப்பருவம் உளதாதலைச் சங்கப் பாடல்கள் சில குறிப்பிட்டுள்ளன:

'பெரும்பெயல் பொழிந்த தொழில எழிலி
தெற்கு ஏர்பு இரங்கும் அற்சிரக் காலையும்' (நற். 5: 5-6)

'விழுமிது நிகழ்வது ஆயினும்—தெற்கு ஏர்பு
கழிமழை பொழிந்த பொழுது கொள் அமையத்து'
(அக. 13 : 12-13)

'விரிகதிர் மண்டிலம் தெற்கு ஏர்பு, வெண்மழை
அரிதின் தோன்றும் அச்சிரக் காலையும்.' (சிலப். 14: 104-105)

100. ஞாயிற்று மண்டிலம் தெற்கே எழுதலால் வெண்முகில் அரிதாகத் தோன்றும் முன்பனிக்காலம் நிகழ்வது குறிக்கப்படுகிறது. 'தெற்கு ஏர்பு' என்பதற்கு 'மிதுன வீதியிலே எழுந்து இயங்குதலானே' என அடியார்க்கு நல்லார் எழுதுகின்றார். 'தெற்கு ஏர்பு கழிமழை பொழிந்த பொழுதுகொள் அமையத்து' (அகம். 13 : 12-13) என்பதில், 'பொழுது காலத் தன்மை; அமையம்—கூதிர்' எனப் பழைய உரைக் குறிப்பு எழுதப்பட்டிருக்கிறது. ஞாயிற்றின் தெற்குநோக்கிய எழுச்சியால் கார், கூதிர், முன்பனி என்னும் பருவங்கள் தலைப்படுதலை மேற்குறித்த பாடல் பகுதிகளினின்றும் உணரலாகும்.

### ஞாயிற்றின் வடக்கு நோக்கிய செலவு

101. ஞாயிற்றின் வடக்கு நோக்கிய செலவைக் குறித்துச் சிவகசிந்தாமணியில் ஒரு பாடல் உளது. இங்கே, 'அயணம்' என்னும் சொல்லையும் கவிஞர் ஆளுகின்றார்.

'காசு அறு துறவின் மிக்க
கடவுளர் சிந்தை போல
மாசு அறு விசும்பின் வெய்யோன்
வடதிசை அயணம் முன்னி,
ஆசு அற நடக்கும் நாளில்,
ஐங்கணைக் கிழவன் வைகி,
பாசறைப் பரிவு தீர்க்கும்
பங்குனிப் பருவம் செய்தான்.' (சீவக. 851)

இப் பாடலுக்கு நச்சினர்க்கினியர் எழுதும் உரையும் ஞாயிற்றின் கதியை நன்கு விளக்குதலினலே அதனையும் இங்கே பார்ப்போம். அவரது உரை வருமாறு :

102. 'அயனம்' என்னுது 'அயணம்' எனப் பாகதத்தால் கூறினர், செய்யுட் சொல் என்று. வெய்யோன் வடதிசைச் செலவைக் கருதி இருடிகள் சிந்தைபோல மாசு அற்ற விசும்பிலே குற்றம் அற நடக்கும் நாட்களில் பின்பனி நீங்கும் பங்குனித் திங்களிலே காமன் தங்கும்படி இளவேனிலைப் பிறப்பித்தான்.'

103. இங்கே வடதிசை அயணம் ஆவது சூரியனுடைய வடதிசைச் செலவு. இந்த வடதிசைச் செலவால், பின்பனி, இளவேனில், முதுவேனில் என்னும் பருவங்கள் உளவாகின்றன என்பது குறிப்பினல் பெறப்படும்.

## யாண்டு, ஊழி

104. மாத்திரை, நாழிகை, முகூர்த்தம், யாமம், நாள், திங்கள், இருது, அயணம் எனச் செல்லும் காலப்பகுதியில் யாண்டு ஒரு பெருங் காலப்பகுதி. 'யாண்டு இருது மதி நாள் ஆதிக் காலம்' என நன்னூலில் (276) பவணந்தி முனிவர் காலம் என்பதற்கு விளக்கம் தந்துள்ளார். யாண்டுகள் பல கூடி ஊழிகளாக ஆகும்.

### நாள், திங்கள், யாண்டு, ஊழி, வெள்ளம்

105. ஓர் யாண்டில் பன்னிரண்டு மாதங்களும், ஆறு பருவங் களும், இரு அயனங்களும் உளவாதலை முன்பு திங்கள், இருது, அயனம் பற்றிக் கூறிய இடங்களில் பார்த்தோம்.

'நின்நாள் திங்கள் அனைய ஆக! திங்கள்
யாண்டு ஓரனைய ஆக! யாண்டே
ஊழி அனைய ஆக! ஊழி
வெள்ள வரம்பின ஆக! என உன்னிக்
காண்கு வந்திசின் யானே.' (பதிற். 90 : 51-55)

106. 'நின் வாழ்நாட்கள் மாதத்தைப் போன்றன ஆகுக. மாதங்கள் ஆண்டைப் போன்று ஒரு தன்மைய ஆக. ஆண்டுகள் ஊழி போன்றன ஆகுக. ஊழிகள் வெள்ளம் என்னும் பேரெண்ணின் எல்லையை உடையன ஆகுக. இவ்வாறு நினைத்து நான் உன்னைக் காணும் பொருட்டு வந்தேன்' என்பது இளஞ்சேரலிரும்பொறையை நோக்கிப் பெருங்குன்றூர் கிழார் கூறிய வாக்கு. இங்கே நாள், திங்கள், யாண்டு, ஊழி, என்பன முறையே சுட்டப்படுதல் காணலாம். இங்ஙனம் செல்லும் காலங்களின் இயல்புகள் வேறு சில பாடல் களிலும் காணக் கிடக்கின்றன. அவை வருமாறு :

107. 'ஊழியும் யாண்டு எண்ணி யாத்தன ; யாமமும்
நாழிகை யானே நடந்தன.' (நான்மணி. 71)

'உயிர்த் தொகை உண்ட ஒன்பதிற்று இரட்டி என்று
யாண்டும், மதியும், நாளும், கடிகையும்
ஈண்டு நீர் ஞாலம் கூட்டி எண்கொள.' (சிலப். 27 : 8-10)

'வெள்ள வரம்பின ஊழி போகியும்
கிள்ளை வாழிய பலவே!' (ஐங். 281)

'ஊழியின் பெரிதால் நாழிகை என்னும்.'
(திருவாய். 2 : 7 : 4)

'கரிய நாழிகை ஊழியின் பெரியன
கழியும் ஆறு அறியேனே!' (பெரியதிரு. 8 : 5 : 6)

'காலையும் மாலையும் ஒத்துண்டு, கங்குல்
நாழிகை ஊழியில் நீண்டு உலாவும்.'
(பெரியதிரு. 9 : 5 : 3)

'பலபல ஊழிகள் ஆயிடும் ; அன்றி
ஓர் நாழிகையைப்
பலபல கூறிட்ட கூறு ஆயிடும்.' (திருவிருத்தம், 16)

### பேரெண்கள்

108. 'அடை அடுப்பு அறியா அருவி ஆம்பல்
ஆயிர வெள்ள ஊழி
வாழி, ஆத! வாழிய பலவே! (பதிற். 63 : 19-21)

இங்கே வெள்ளம் என்பது பேரெண்ணைக் குறிப்பிடுகின்றது. அடை அடுத்தலை அறியாத, பூக்கள் அரிதாகிய பல ஆம்பல் என்னும் எண்ணும், ஆயிரத்தால் பெருக்கிய வெள்ளம் என்னும் எண்ணும் ஆகிய எண்களின் அளவுள்ள பல ஊழிகள் வாழ்வாயாக என்பது பொருள்.

109. ஆம்பல், வெள்ளம் என்பன போலவே, நெய்தல், குவளை, சங்கம், கமலம் என்னும் பேரெண்களும் உள.

‘ நெய்தலும், குவளையும், ஆம்பலும், சங்கமும்,
மைஇல் கமலமும், வெள்ளமும் நுதலிய
செய்குறி ஈட்டம் கழிப்பிய வழிமுறை.’ (பரி. 2 : 13-15)

‘ ஐ, அம், பல் என வரூஉம் இறுதி
அல்பெயர் எண்ணும் ஆயியல் நிலையும்.’ (தொல். புள்ளி. 98)

110. இங்கே ஐ, அம், பல் என வரூஉம் இறுதியாவது, தாமரை, வெள்ளம், ஆம்பல் என்னும் பேரெண்களாம். இவை பலநூறு ஆண்டுகளைக் குறிப்பவை.

‘ பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பலகோடி நூறுயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா ! உன்
சேவடி செவ்வி திருக்காப்பு’ (பல்லாண்டு, 1)

எனப் பெரியாழ்வார் கூறுமாறு அளவைக்கு எட்டாது செல்லும் மிகப் பேரளவினதாகிய எண்களைச் சுட்டிக்கூறும் மரபும் இலக்கியங்களில் காண்கிறோம்.

மகளிர் கருப்பகாலம்

111. மகளிர் கருப்பகாலம் பன்னிரு திங்கள் கொண்ட ஓர் ஆண்டாம்.

‘ முந்நால் திங்கள் நிறை பொறுத்து அசைஇ
ஒதுங்கல் செல்லாப் பசும் புளி வேட்கைக்
கடுஞ்சூல் மகளிர் போல’ (குறுந். 287 : 1-3)

‘ பன்னிரு திங்கள் வயிற்றிற் கொண்ட அப்பாங்கினால்’
(பெரி. 3 : 2 : 8)

எனவரும் பகுதிகள் மேற்கூறியதனைத் தெளிவிக்கும்.

மனித வாழ்வில் ஆண்டுகள்

112. மனிதர்க்கு ஆயுள் நூறாண்டு என வேதநூல் கூறுவதனையும், மனித வாழ்வில் ஆண்டுகள் கழியும் வகையையும் தொண்டரடிப் பொடியாழ்வார் அறிவுறுத்தியுள்ளார்.

வேதநூற் பிராயம் நூறு
மனிசர்தாம் புகுவரேலும்,
பாதியும் உறங்கிப் போகும் ;
நின்றதிற் பதினை யாண்டு

பேதை பாலகன்அது ஆகும் ;
  பிணி பசி மூப்புத் துன்பம் ;
ஆதலால், பிறவி வேண்டேன்—
  அரங்கமா நகரு ளானே (திருமாலை, 3)

என்பது ஆழ்வார் வாக்கு.

113. ஐயாண்டு எய்தி மையாடி
  அறிந்தார் கலைகள் படைநவின்றார்
கொய் பூமாலை குழல் மின்னும்
  கொழும் பொற்றோடும் குண்டலமும்
ஐயன்மார்கள் துளக்கு இன்றி
  ஆலும் கலிமா வெகுண்டு ஊர்ந்தார் ;
மெய்ஆர் அலங்கல் மார்பற்கு
  முப்பது ஆகி நிறைந்ததே' (சீவக. 13 : 108)

என்னும் சிந்தாமணியில் ஐந்தாம் ஆண்டில் கலை பயில்தலும், காளைப் பருவத்தில் படைக்கலம் முதலிய பயிறலும் குறிப்பிடப்படுதல் காண லாம். இவ்வாறாக ஆண்டு என்பது வாழ்க்கையில் முக்கியமான ஒரு காலக்குறிப்பு என்பது தெரிய வருகின்றது.

*நால்வகை ஊழிகள்*

114. ஊழி என்னும் பெருங்கால அளவில் நான்கு ஊழிகள் சொல்லப்பட்டுள்ளன.

'நால்வகை ஊழி எண் நவிற்றும் சிறப்பினை' (பரி. 3 : 80)

என்பது பரிபாடல்.

'நன்று பிணி மூப்புக் கையகற்றி நான்குஊழி
நின்று நிலம் முழுதும் ஆண்டாலும்' (முதல் திரு. 71)

என்பது பொய்கையார் வாக்கு.

115. நான்கு ஊழிகளாவன கிரேத, திரேத, துவாபர, கலி யுகங்களாம்.

'சேயாய்! கிரேத, திரேத, துவாபர,
கலியுகம்—இவை நான்கும் முன் ஆனாய் !
(பெரிய திருமொழி, 7 : 7 : 6)

என்பது திருமங்கை மன்னன் வாக்கு. மேலும் இவரே,

'கண்டேன் நான் கலியுகத்ததன் தன்மை ;
கருமம் ஆவதும் என்தனக்கு அறிந்தேன்—'
(பெரியதிரு. 7 : 7 : 5)

என்று தாம் வாழும் யுகம் பற்றியும் கூறுகிறார்.

116. கலியுகம் நீங்கிக் கிருதயுகம் தோன்றும் என்றும் சடகோபர் பேசுகிறார் :

‘பொலிக ! பொலிக ! பொலிக !
போயிற்று வல் உயிர்ச் சாபம் ;
நலியும் நரகமும் நைந்த ;
நமனுக்கு இங்குயாது ஒன்றும் இல்லை ;
கலியும் கெடும் ; கண்டுகொண்மின் ;
கடல் வண்ணன் பூதங்கள் மண்மேல்
மலியப் புகுந்து இசைபாடி,
ஆடி உழிதரக் கண்டோம்.’ (திருவாய். 5 : 2 : 1)

‘திரியும் கலியுகம் நீங்கி,
தேவர்கள் தாமும் புகுந்து,
பெரிய கிதயுகம் பற்றி,
பேரின்ப வெள்ளம் பெருக,
கரியமுகில் வண்ணன், எம்மான்,
கடல்வண்ணன் பூதங்கள், மண்மேல்
இரியப் புகுந்து, இசைபாடி,
எங்கும் இடம் கொண்டனவே !’ (திருவாய். 5 : 2 : 3)

‘தொக்க அமரர் குழாங்கள்
எங்கும் பரந்தன ; தொண்டீர் !
ஒக்கத் தொழகிற்றி ராகில்,
கலியுகம் ஒன்றும் இல்லையே.’ (திருவாய். 5 : 2 : 10)

## நாள் (நட்சத்திரம்)

### நாள்மீன்

117. ‘நாள்’ என்பது ‘தினம்’ என்னும் பொருளில் வழங்குவதோடு நட்சத்திரங்களுக்கும் பெயராக வழங்கும். நட்சத்திரங்களை, ‘நாள்மீன்’ என்றும் குறிப்பிடுவர். விண்மீன்கள், அளவிறந்தன. 27 நட்சத்திரங்கள் சிறப்பாகக் கொண்டு கூறப்படும். இவற்றை இப்பொழுது அசுவினி முதல் ரேவதி ஈருக 27 எனக் கொள்ளுகிறோம்.

### பண்டு முதல்நாள் கார்த்திகை

118. பண்டைக்காலத்தில் கார்த்திகையை முதலாகக் கொண்டு 27 நட்சத்திரங்களையும் எண்ணி வந்தனர். மணிமேகலையில் புத்த தேவன் தோன்றிய நாளை,

‘இருது இளவேனில் எரிகதிர் இடபத்து,
ஒருபதின் மேலும் ஒருமூன்று சென்றபின்,
மீனத்து இடைநிலை மீனத்து அகவையின்’

(மணி. பாத். பெற். 40-42 ; பாத். பிச்சை. 23-25)

என்பர் சாத்தனுர். இங்கே மீனத்து இடைநிலை மீனம் என்றும், பதின்மூன்று நட்சத்திரங்கள் சென்றபின் வருவது என்றும் விசாக நட்சத்திரத்தைக் கொள்கிறுர். கார்த்திகையை முதலாகக் கொண்டு எண்ணினுல்தான் இவர் கூறும் கணக்கு ஒத்து வருகிறது.

119. சம்பந்தர் பாடிய கோளறு பதிகத்தில் பிரயாணத் திற்காகாத தீயநாள்களும் இறையருளால் நல்லனவாம் எனச் சொல்ல வந்தவிடத்து,

‘ஒன்பதொடு ஒன்றெடு ஏழு பதினெட்டொடு ஆறும்
உடன் ஆய நாள்கள் அவைதாம்
அன்பொடு நல்லநல்ல, அவை நல்லநல்ல
அடியார் அவர்க்கு மிகவே’ (சம்ப. தேவா. 2 : 85 : 2)

இங்கும் கார்த்திகையை முதலாகக் கொண்டே எண்ண வேண்டும் என்பர். ஒன்பதாவது நாள் பூரம்; ஒன்று என்னும் முதல் நாள் கார்த் திகை; ஏழாவது நாள் ஆயிலியம்; பதினெட்டாவது நாள் பூராடம். கார்த்திகையிலிருந்து தலைகீழாக எண்ணும்போது ஆருவது நாள் பூரட்டாதி. இவை பிரயாணத்திற்கு ஆகாத நாட்களாம்.

*தொல்காப்பியத்தில் நாட் பெயர்கள்*

120. தொல்காப்பியர் தமது பேரிலக்கணத்தில் 27 நட்சத்திரப் பெயர்களையும் ஈற்றுவகையால் எண்ணி, அவற்றிற்குப் புணர்ச்சி விதி அமைத்துள்ளார். அவர் நாட் பெயர்களை இகர ஈறு, ஐகார ஈறு, மகர ஈறு என மூன்று எழுத்துக்களை ஈருகக் கொண்டு முடிவதாகக் கொள் கின்றுர். 27 நட்சத்திரப் பெயர்களையும் பார்த்தால் அவர் குறித் துள்ள மூன்று ஈறுகளில் அவை அடங்குதல் புலப்படும்.

121.

| இகரஈற்று நாட்பெயர் | ஐகாரஈற்று நாட்பெயர் | மகரஈற்று நாட்பெயர் | |
|---|---|---|---|
| 26 அசுவினி | 1 கார்த்திகை | 3 மிருகசிரிடம் | 14 விசாகம் |
| 27 பரணி | 4 திருவாதிரை | 5 புனர்பூசம் | 15 அனுசம் |
| 2 ரோகிணி | 12 சித்திரை | 6 பூசம் | 17 மூலம் |
| 13 சோதி | 16 கேட்டை | 7 ஆயிலியம் | 18 பூராடம் |
| 23 பூரட்டாதி | | 8 மகம் | 19 உத்திராடம் |
| 24 உத்திரட்டாதி | | 9 பூரம் | 20 திருவோணம் |
| 25 ரேவதி | | 10 உத்திரம் | 21 அவிட்டம் |
| | | 11 அத்தம் | 22 சதயம் |

122. இவற்றுள் இகர ஈற்று ஐகார ஈற்று நாட்பெயர்கள், வருமொழியில் வினைச் சொல் வருங்காலத்து, பரணியாற் கொண்

டான், சோதியாற் கொண்டான், கேட்டையாற் கொண்டான் என ஆன் சாரியை பெறும் என்பர். மகர ஈற்று நாட்பெயர்களோ ஆனெடு அதன்முன் அத்து என்னும் சாரியையும் பெற்று ஓணத்தாற் கொண்டான், மகத்தாற் கொண்டான் என்றாற் போல வழங்க வேண்டும் என்பர்.

‘ நாள் முன் தோன்றும் தொழில் நிலைக் கிளவிக்கு
ஆன் இடை வருதல் ஐயம் இன்றே ’

(தொல். எழுத். உயிர்மயங். 45)

என்பது இகர ஈற்று நாட்பெயர் பற்றிய விதி. ஐகார ஈற்றுப் பெயர்களும் இத்தகையனவே என,

‘ திங்களும் நாளும் முந்து கிளந்தன்ன ’

(தொல். எழுத். உயிர். 84)

என விதிக்கின்றார். மகர ஈற்று நாட்பெயர்களைக் குறிக்குமிடத்து,

‘ நாட்பெயர்க்கிளவி மேற் கிளந்தன்ன ;
அத்தும் ஆன்மிசை வரைநிலை இன்றே ;
ஒற்று மெய் கெடுதல் என்மனார் புலவர் ’

(தொல். எழுத். புள்ளி. 36)

என்பர்.

123. இங்கே, தாம் புதிதாக விதிப்பது அல்ல இவ்விதி என்றும் புலவர் மரபு இது என்றும் குறிப்பாராய், ‘என்மனார் புலவர்’ என்கிறார். எனவே, நாட்பெயர் பற்றிய இவ்வழக்குக்கள் அவர்க்கும் முன்பிருந்தே வழிவழியாக வந்த மரபு என்பது பெறப்படும்.

### சங்கப்பாடல் முதலியவற்றில் நாட்பெயர்கள்

124. சங்கப்பாடல்களிலும், தேவாரம், திவ்யப் பிரபந்தம் முதலியவற்றிலும் இந்நாட் பெயர்களுள் பெரும்பாலன குறிக்கப்பட்டுள்ளன. இவ்விலக்கியங்களில் காணும் நாட் பெயர்கள் பற்றிய விவரம் வருமாறு:

### கார்த்திகை

125. அறுமீன் கொண்ட கூட்டம். இதனை அறுமீன், எரி, அழல், ஆரல் என்னும் பெயர்களால் குறிப்பிட்டுள்ளனர். ஆரல் என்பது இடைக்குறையாக ஆல் எனவும் வழங்கும்.

‘ குறுமுயல் மறுநிறம் கிளர மதிநிறைந்து
அறுமீன் சேரும் அகல் இருள் நடுநாள் ’ (அகம். 141 : 7-8)

'அறுமீன் பயந்த அறம்செய் திங்கள்
செல்சுடர் நெடுங் கொடி போல,
பல்பூங் கோங்கம் அணிந்த காடே' (நற் 202 : 9-11)

'அகல் இரு விசும்பின் ஆஅல் போல
வாலிதின் மலர்ந்தன புன்கொடி முசுண்டை'
(மலைபடு. 100-101)

'நலம் மிகு கார்த்திகை, நாட்டவர் இட்ட
தலைநாள் விளக்கின்' (கார் நாற்பது. 26)

'கார்த்திகைச் சாற்றில் கழி விளக்கு' (களவழி. 17)

'தொல் கார்த்திகை நாள்' (சம். தேவா. 2 : 47 : 3)

'குன்றில் கார்த்திகை விளக்கிட்டன்ன
கடிகமழ் குவளைப் பைந்தார்.' (சீவக. சிங். 256)

*பரணி*

126. 'எரி, சடை, எழில் வேழம்' (பரி. 11 : 2)

இங்கே வேழம் என்பது வேழத்திற்கு யோனியாகிய பரணியைக் குறிக்கின்றது.

*உரோகிணி*

127. மதிசேர் உரோகிணி நாள் திருமணம் செய்வதற்குச் சிறந்த நாளாகக் கொள்ளப்பட்டது.

'அம்கண் இரு விசும்பு விளங்க, திங்கட்
சகடம் மண்டிய துகள் தீர் கூட்டத்துக்
கடிநகர் புனைந்து, கடவுட் பேணி' (அக. 136 : 4-6)

'வான் ஊர் மதியம் சகடு அணைய வானத்துச்
சாலி ஒருமீன் தகையாளைக் கோவலன்
மாமுது பார்ப்பான் மறைவழி காட்டிட,
தீவலம் செய்வது காண்பார்கள் நோன்பு என்னை!'
(சிலப். மங்கல. 50-53)

இங்கே 'சகடம்', 'சகடு' என்பன உரோகிணியைக் குறிக்கும்.

'விண் ஊர்பு திரிதரும் வீங்கு செலல் மண்டிலத்து,
முரண்மிகு சிறப்பின் செல்வனொடு நிலைஇய
உரோகிணி நினைவனள் நோக்கி' (நெடுநல். 161-163)

'விண்ணகம் இருள் கொள விளங்கு வெண்மதி
ஒண்ணிற உரோணியோடு ஒளித்தது ஒத்ததே'
(சீவக. சிங். 1 : 169)

'ஒண்ணிற உரோணி ஊர்ந்த
ஒளிமதி ஒண்பொன் ஆட்சி.' (சீவக. சிந். 3 : 129)

ஆதிரை

128. 'ஆதிரை முதல்வன்' (பரி. 8 : 6)

'மா இருந் திங்கள் மதிநிறை ஆதிரை
விரிநூல் அந்தணர் விழவு தொடங்க' (பரி. 11 : 77-78)

'அரும்பெறல் ஆதிரையான்' (கலி. 150 : 20)

'ஆதிரையான் ஆதிரையான் என்றே அறையுமால்
ஊர்திரை நீர் வேலி உலகு.' (முத்தொள். 1)

129. மூவர் தேவாரத்திலும் ஆதிரைநாளைப் பற்றிய குறிப்புக்கள் பல உள.

'ஆடலன் ஆதிரையன் ஆரூர் அமர்ந்தானே'
(சம். தேவா. 1 : 105 : 1)

'ஆதிரைநாள் காணாதே போதியோ பூம்பாவாய்!'
(சம். 2 : 47 : 4)

'அத்தன் ஆரூர் ஆதிரைநாளால் அது வண்ணம்'
(திருநா. 4 : 21 : 1-10)

'ஆதிரைநாள் ஆதரித்த அம்மான் தன்னை' (திருநா. 6 : 79 : 1)

'திங்களூர் திருவாதிரையான்.' (சுந். 7 : 31 : 6)

புனர்பூசம்

130. 'கடைக் குளத்துக் கயம் காய' (புறம். 229 : 4)

கயமாகிய குளவடிவு போலும் வடிவுடைய புனர்பூசம் இங்குக் குறிக்கப் பட்டுள்ளது.

பூசம் :

131. 'பூசம் புகுந்து ஆடிப் பொலிந்து' (தேவா. 1 : 32 : 5)

'பூச நீர்ப் பொலியும் புனற் பொன்னியிற் பன்மலர்'
(தேவா. 2 : 2 : 6)

'தைப் பூசம் காணாதே போதியோ பூம்பாவாய்'
(தேவா. 2 ; 47 : 5)

'பொருந்திய தைப்பூசம் ஆடிப் பொலிவெய்த'
(தேவா. 2 : 56 : 5)

'பூசநீர்க் கடுவாய்க் கரைப்புத்தூர்.' (தேவா. 5 : 62 : 8)

மகம்

132. ‘ மழை நீங்கிய மாக விசும்பில்
மதி சேர்ந்த மக வெண்மீன் ’ (பட்டினப். 34-35)

‘ மகத்திற் புக்கதோர் சனி எனக்கு ஆனாய். ’
(சுந். தேவா. 7 : 54 : 9)

உத்தரம், மூலம், மிருகசீரிடம்

133. ‘ பங்குனி உயர் அழுவத்துத்
தலைநாள் மீன் நிலைதிரிய
நிலைநாள் மீன் அதன் எதிர் நேர்தர
தொல்நாள் மீன் துறை படிய’ (புறம். 229 : 5-8)

‘பங்குனி மாதத்தினது முதற் பதினைந்தின்கண் உச்சமாகிய உத்தரம் அவ்வுச்சியினின்றும் சாய, அதற்கு எட்டாம் மீனாகிய மூலம் அதற்கு எதிரே எழாநிற்க, அந்த உத்தரத்திற்கு முன் செல்லப்பட்ட எட்டாம் மீனாகிய மிருகசீரிடம் ஆகிய நக்கத்திரம் துறையிடத்தே தாழ’ என்பது இதன் பொருள்.

உத்தரம்

134. உத்தரம் என்னும் நட்சத்திரத்தின் பெயர் மாளிகையில் அமைந்துள்ள உத்தரத்திற்கும் அமைதல் கருதி,

‘ நாளொடு பெயரிய கோள் அமை விழுமரத்து ’ (நெடுநல். 453)

என நெடுநல்வாடை கூறுகிறது. ‘ உத்தரம் என்னும் நாளின் பெயர் பெற்ற உத்தரக் கவியிலே ’ என்பது இதன் பொருள்.

‘ பங்குனி உத்தரநாள் ஒலி விழாக் காணாதே
போதியோ பூம்பாவாய் ’ (சம். தேவா. 2 : 47 : 7)

‘ ஒற்றியூரையும் உத்திரம் நீர் மகிழ்வீர் ’
(சுந். தேவா. 7 : 49 : 7)

‘ ஒத்தமைந்த உத்தரநாள் தீர்த்தம் ஆக
ஒளிதிகழும் ஒற்றியூர் என்கின்றாரே’ (திருநா. தேவா. 6 : 45:5)

‘ பாரூர் பரிப்பத்தம் பங்குனி உத்தரம்
பாற்படுத்தான்.’ (திருநா. தேவா. 4 : 102 : 2)

அனுடம்

135. ‘ முடப்பனையத்து வேர் முதலா’ (புறம். 229 : 3). இங்கே முடப் பனை என்றது முடப்பனை போலும் வடிவுடைய அனுடநாளைக் குறிக்கும்.

சித்திரை

136. ‘சித்திரைச் சித்திரைத் திங்கள் சேர்ந்தென’ (சிலப். இந்திர. 64)

ஓணம்

137. ‘கணம் கொள் அவுணர்க் கடந்த பொலந்தார்
மாயோன் மேய ஓண நல் நாள்’ (மதுரை. 590-591)

‘திருவோணத் திருவிழவில்’ (திவ். பல்லாண்டு. 5,8)

‘நீ பிறந்த திருவோணம்
இன்று நீராட வேண்டும்’ (பெரியாழ். 2 : 4 : 2)

‘பன்னிரண்டு திருவோணம் அட்டேன்’
(திவ். பெரியாழ். 2 : 9 : 7)

‘ஆண் ஒப்பார் இவன் நேர் இல்லை காண், திரு
ஓணத்தான் உலகு ஆளும் என்பார்களே’
(திவ். பெரியாழ். 1 : 1 : 3)

‘திருநாள் திருவோணம் இன்று ஏழுநாள்’
(பெரியாழ்வார் . 3 : 3 : 9)

‘ஓண விழவில் ஒலியதிர, பேணி’ (4 ஆம் திருவந்தாதி. 41)

‘ஐப்பசி ஓண விழவும்’ (தேவா. 2 : 47 : 2)

‘ஓணப் பிரானும் ஒளிர் மாமலர் மிசை
உத்தமனும்’ (தேவா. 4 : 105 : 10)

உத்திரட்டாதி

138. ‘ஊனத்தில் சிறந்த சீர்த்தி
உத்திரட்டாதியானே’ (சீவக. சிந். 1 : 358)

இரேவதி

139. ‘இரேவதி வியாழ ஓரை
இருஞ்சிலை முளைப்ப ஏறி’ (சீவக. சிந். 3 : 14)

இருபத்தேழின் மேலாகச் சில சிறப்புடை நாள்கள்

140. இருபத்தேழு நட்சத்திரங்களுள் இலக்கியங்களில் கண்ட சில நட்சத்திரங்களைப் பற்றிய குறிப்புக்களை மேலே பார்த்தோம். இவை தவிர, எழுமீன், அருந்ததி, அகத்தியன் என்னும் நட்சத்திரங்களைப் பற்றியும் ஒரு சில குறிப்புக்கள் உள.

எழுமீன் (சப்த ரிஷி மண்டலம்)

141. 'மை அற விளங்கிய மணிநிற விசும்பில்
கைதொழு மரபின் எழுமீன் போல.' (நற். 231 : 1-2)

வடமீன் (அருந்ததி)

142. 'வடமீன் விளங்குஆல் உறை எழு மகளிருள்
கடவுள் ஒருமீன் சாலினி' (பரி. 43-44)

'பெருநல் வானத்து வடவயின் விளங்கும்
சிறுமீன் புரையும் கற்பின், நறுநுதல்' (பெரும். 302 - 303)

'இருண்டு தோன்று விசும்பின் உயர்நிலை உலகத்து
அருந்ததி அனைய கற்பின்' (ஐங். 442 : 3-4)

'வடமீன் புரையும் கற்பின் மடமொழி' (புறம். 122 : 8)

'வடமீன் போல் தொழுது ஏத்த வயங்கிய கற்பினாள்'
(கலி. 2 : 21)

'விசும்பு வழங்கு மகளிருள்ளும் சிறந்த செம்மீன்
அனையள் நின் தொல் நகர்ச் செல்வி' (பதிற். 31 : 27-28)

'சாலி ஒருமீன் தகையாளை' (சிலப். மங்கல. 51)

'தீதிலா வடமீனின் திறம் இவள் திறம்' (சிலப். மங்கல. 27)

'அங்கண் உலகில் அருந்ததி அன்னாளை' (சிலப். மங்கல. 63)

அகத்தியன்

143. 'பொதியில் முனிவன் புரைவரை கீறி
மிதுனம் அடைய' (பரிபா. 11 : 11-12)

இங்கே பொதியில் முனிவன் என்றது 'அகத்தியன்' என்னும் நட்சத்திரத்தினை.

நிகண்டுகளில் நாட்பெயர்

144. திவாகரம், பிங்கலம் என்னும் நிகண்டுகள் அசுவினி முதல் 'ரேவதி' ஈறாக இருபத்தேழு நட்சத்திரங்களுக்கும் உரிய பெயர்களைத் தெய்வப் பெயர்த் தொகுதியிலும், வானவர் வகையிலும் முறையே கொடுத்துள்ளமையும் கவனிக்கத்தக்கது.

வானவீதியில் நாள்களின் செலவு

145. வானவீதியில் நட்சத்திரங்கள் செல்லும் வீதிகளைக் குறித்தும் பரிபாடல் கூறுகிறது. 27 நாள்களும் கோள்களுடன் கூட வானவீதியில் உலாவரும் வீதிகள் மூன்றும். அவை ஆடு (மேடராசி), ஏறு (இடப ராசி), மிதுனம் (மிதுன ராசி) என்பனவாம். இவற்றுள்

மேடராசியை முதலாகக் கொண்டு ஏனைய இராசிகளிலும் ஞாயிறு, திங்கள் முதலிய கோள்களும் நட்சத்திரங்களும் இயங்கும். மேற் குறித்த மூன்று ராசிகளும் ஒன்பது நட்சத்திரங்களைக் கொண் டிருக்கும்.

'விரிகதிர் மதியமொடு, வியல்விசும்பு, புணர்ப்ப,
எரி, சடை, எழில்வேழம், தலையெனக் கீழ் இருந்து,
தெரு இடைப்படுத்த மூன்று ஒன்பதிற்று இருக்கையுள்'

எனவரும் பரிபாடல் (11 : 1-3) பகுதியால் இது புலனும்.

146. இதற்குப் பரிமேலழகர் தரும் உரை விளக்கமும் கூர்ந்து நோக்குதற்கு உரியது. அது வருமாறு :

(அடி. 1-3) 'விசும்பு மதியத்தோடு புணர்ப்பனவாகிய எரியும், சடையும், வேழமும் முதலாக அவற்றின் கீழிருந்து விதியால் வேறுபடுக்கப்பட்ட ஒரோன்று ஒன்பது நாளாகிய மூவகையிராசி களுள்.

மேலவாகிய நாள்மீன்களைக் கீழதாகிய மதி புணர்தலாவது அவ்வந் நேர் நிற்றல் மாத்திரமாகலின், 'அவற்றை விசும்பு புணர்ப்ப' என்றார்.

(அடி-2) எரி, அங்கியைத் தெய்வமாகவுடைய கார்த்திகை. அதனுல் அதன் முக்காலையுடைய இடபம் உணர்த்தப்பட்டது. சடை-சடையையுடைய ஈசனைத் தெய்வமாகவுடைய திருவாதிரை; அதனுல் அதனையுடைய மிதுனம் உணர்த்தப்பட்டது. வேழம்— வேழத்திற்குரிய யோனியாகிய பரணி ; அதனுல் அதனையுடைய மேடம் உணர்த்தப்பட்டது.

இவை முதலாக இவற்றின் கீழ் இருத்தலாவது, இவற்றது பெயரான், இடப வீதி, மிதுன வீதி, மேட வீதி என வகுக்கப்பட்டு அம்மூவகை வீதியுள்ளும் அடங்குதல். அவற்றுள் இடப வீதி கன்னி, துலாம், மீனம், மேடம் என்பன. மிதுன வீதி தேள், வில்லு, மகரம், கும்பம் என்பன. மேட வீதி இடபம், மிதுனம், கற்கடகம், சிங்கம் என்பன.

ஓர் இராசியாவது இரண்டேகால் நாள் ஆதலின், நந்நான்கு இராசி யாகிய இவை ஒரோன்று ஒன்பது நாளாயின. கோள்களுக்கு இடனுகலான் இவை பன்னிரண்டும் 'இருக்கை' எனப்பட்டன.

பிங்கல நிகண்டுதரும் விளக்கம்

147. இருசுடர் முதலிய கோள்களும் நாள்களும் இயங்கும் வீதி களைக் குறித்துப் பிங்கல நிகண்டு கூறும் செய்திகளும் ஈண்டுக் கவனித்தல் பொருத்தமாகும்.

‘ மேட வீதி, இடப வீதி, மிதுன வீதி என ஒரு மூன்றே,
அவைதாம் இருசுடர் முதலிய இயங்கு நெறியே.’

(பிங். 2 : 182)

‘ இடபம் சிங்கம், மிதுனம், கடகம்
இனைய நான்கும் மேட வீதி.’ (பிங். 2 : 183)

‘ மீனம். மேடம், கன்னி, துலாமும்,
ஆன இடப வீதிக்கு அமைந்தன.’ (பிங். 2 : 184)

‘ வில்லு, மகரம், குடமே, விருச்சிகம்,
சொல்லிய மிதுன வீதித் துறையே.’ (பிங். 2 : 185)

இவற்றுள்,

சொன்ன இராசி தொகுத்த மாதங்கள்
மன்னிய கதிர் முதல் கோள் வரு நெறியே.’ (பிங். 2 : 186)

148. முற்கூறிய மூன்று இராசிகளுள் இடபம் முதல் விருச்சிகம் ஈறுகத் தொகுத்த மாதங்களில் சூரியன் முதலிய கிரகங்கள் வரும் என்பது குறிக்கப்பட்டுள்ளது.

### நாள் பார்த்து நற்காரியம் செய்தல்

149. நாள் பார்த்து நற்காரியம் செய்தல் என்பது பழமையாக வரும் ஒரு மரபு. திருமணம் முதலிய சுபகாரியங்களுக்கு நாள்கேட்டு, அதன்படி அவற்றை நடத்தினர்.

‘ நாள் ஆய்ந்து வரைதல் அறம்.’ (திணைமாலை. 52)

‘ பல்லார் அறியப் பறை அறைந்து, நாள்கேட்டு,
கல்யாணம் செய்து கடிபுக்க மெல்லியல்
காதல் மனையாளும் இல்லாளா ’ (நாலடி. 9 : 6)

எனக் கீழ்க்கணக்கு நூல்கள் நாள் கேட்டுக் கலியாணம் செய்தமையைக் குறிப்பிடுகின்றன. சந்திரன் உரோகிணியுடன் சேர்ந்திருக்கும் நாளே திருமணத்திற்கு மிகச் சிறந்த நாளாகக் கருதப்பட்டு வந்தமையும் இலக்கிய வழக்குகளால் தெரிய வருகின்றது. (உரோகிணி பற்றிய முன் பகுதி பார்க்கவும்).

### நல்லோரையில் மன்னர் போருக்கு எழுதல்

150. மன்னர்கள் போருக்கு எழுங்காலத்துக் குறித்த நல்லோரையில் தாம் செல்ல வேண்டும் திக்கில் தமது வாள், குடை முதலிய அரச சின்னங்களை எடுத்துச்சென்று பெயர்த்து வைத்தல் மரபு. இம் மரபு சிலப்பதிகாரத்தில் இரண்டு இடங்களில் குறிக்கப்பட்டிருக்கிறது.

151. கரிகால் வளவன் வடநாடு சென்ற காலத்தும், செங்குட்டுவன் கண்ணகிக்குக் கற்கால் கொண்டு வர வடநாடு சென்றபோதும் இந் நிகழ்ச்சி நடைபெற்றதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

‘செருவெங் காதலின் திருமா வளவன்
வாளும் குடையும் மயிர்க்கண் முரசும்
நாளொடு பெயர்த்து, நண்ணர் பெறுகஇம்
மண்ணக மருங்கின் என் வலிகெழு தோள்எனப்
புண்ணிய திசை முகம் போகிய அந்நாள்.’

(சிலப். இந்திர. 90-94)

செங்குட்டுவன் கணி குறித்த நாளில், ‘வாளும் குடையும் வடதிசை பெயர்க்க’ (கால்கோள். 33) என ஆணையிட, அவ்வாறே செய்தமையை,

‘மறமிகு வாளும் மாலை வெண் குடையும்
புறநிலைக் கோட்டப் புரிசையுள் புகுத்தி’ (கால்கோள். 44-45)

எனவரும் அடிகளால் உணரலாகும்.

பிறந்த நாட் பெருமங்கலம்

152. மன்னர்கள் தாம் பிறந்தநாளில் செற்றம் விடுத்து, தமது துணைவர்க்கும் பிறர்க்கும் தக்க பரிசுகள் தந்து பாராட்டுவர். இங்ஙனம் மன்னர்கள் கொண்டாடும் பிறந்த நாள் ‘வெள்ளணி நாள்’ எனவும் கூறப்படும். இந் நிகழ்ச்சியைத் தொல்காப்பியர்,

‘சிறந்த நாள் அணி செற்றம் நீக்கி,
பிறந்த நாள் வயின் பெருமங்கலமும்’

என இதனைப் ‘பெருமங்கலம்’ என்னும் பெயரால் குறிப்பிடுவர்.

‘பேர் இசை நன்னன் பெரும்பெயர் நல்நாள்
சேரி விழவின் ஆர்ப்பு எழுந்தாங்கு’ (மதுரைக். 618-619)

என்பதில் ‘பெரும்பெயர் நல்நாள்’ என்பது நன்னனுடைய பிறந்தநாள் விழாவைக் குறிப்பிடுவதாகும்.

‘குடவர் கோமான் வந்தான் நாளைப்
படுநுகம் பூணுப் பகடே ; மன்னர்
அடித்தளை நீக்கும் வெள்ளணியாம் எனும்
தொடுப்பு ஏர் உழவர் ஓதைப் பாணியும்’

(சிலப். நீர்ப். 227-230)

என்னும் பாடலடிகள் செங்குட்டுவனது வெள்ளணி நாளைக் குறிப்பிடுவதாகும்.

*பிணியுற்ருர்க்குப் பிறந்தநாள் துன்பம்*

153. நோயுற்ருர்க்குப் பிறந்தநாள் அடுப்பின் அது வருத்தந்தரும் என்பது ஒரு நம்பிக்கை.

> ‘ பிணி கிடந்தார்க்குப் பிறந்தநாள் போல
> அணியிழை அஞ்ச வருமால்—மணியானை
> மாறன் வழுதி மணவா மருள் மாலைச்
> சீறி ஓர் வாடை சினந்து ’ (முத்தொள். புறத். 1560)

எனவரும் முத்தொள்ளாயிரப் பாடல், ‘ பிணி கிடந்தார்க்குப் பிறந்த நாள் போல ’ எனப் பழமொழி போலக் கொண்டு கூடுகிறது.

*நாள் நிமித்தம் புள் நிமித்தம் பார்த்தல்*

154. நாள் நிமித்தம், புள் நிமித்தம் முதலியன பார்த்தலும் உண்டு. தீயநாள் நிமித்தம் முதலியன கண்டவழி அது நிகழாது விலகல் வேண்டும் எனக் கூறுதலை ஓம்படை என்பர். ஓம்படை என்ருல் பாது காவல் என்பது பொருள்.

> ‘ நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும்,
> காலம் கண்ணிய ஓம்படை உளப்பட,
> ஞாலத்து வரூஉம் நடக்கையது குறிப்பின்
> காலம் மூன்ருெடு கண்ணிய வருமே ’ (தொல். புறத். 36)

என்பது ஓம்படை பற்றிய தொல்காப்பியர் விளக்கம். ‘ நாள் நிமித்தத் தானும், புள் நிமித்தத்தானும், பிறவற்றின் நிமித்தத்தானும், பாடாண் தலைவர்க்குத் தோன்றிய தீங்கு கண்டு அஞ்சிய அச்சமும், அது பிறத் தற்குக் காரணமாகிய அன்பும் ஒழிவு இன்றிப் பரிசிலர்க்கு நிகழ்தலின், அவர் தலைவர் உயிர் வாழும் காலத்தைக் கருதிய பாதுகாவல் முற்கூறியவற்ருேடேகூட’ என்பது முற்கூறிய சூத்திரப் பகுதியின் பொருள்.

155. இதனை விளக்கி மேலும் நச்சினர்க்கினியர் கூறும் கருத்துக்கள் வருமாறு :

> ஒருவன் பிறந்தநாள்வயின் ஏனைநாள் பற்றிப் பொருந்தாமை பிறத்தலும், அவன் பிறந்த நாண்மீனிடைத் கோண்மீன் கூடியவழி, அவன் நாண் மீனிடைத் தீது பிறத்தலும், வீழ்மீன் தீண்டியவழி அதன்கண் ஒரு வேறுபாடு பிறத்தலும் போல்வன நாளின்கண் தோன்றிய நிமித்தம். ‘புதுப்புள் வருதலும் பழம் புட் போதலும் ’ பொழுதன்றிக் கூகை குழறலும் போல்வன புள்ளின்கண் தோன்றிய நிமித்தம். ஓர்த்து நின்றுழிக் கேட்ட வாய்ப்புள்ளும் ஓரிக்குரல் உள்ளிட்டனவும், கழுதுடன் குழீஇய குரல் பற்றலும், வெஞ்சுடர் மண்டிலத்துக் கவந்தம்

விழ்தலும், அதன்கண் துளை தோன்றுதலும், தண்சுடர் மண்டிலம் பகல் நிலவு எறித்தலும் போல்வன பிறவற்றுக்கண் தோன்றிய நிமித்தம்.' (தொல். புறத். 36 உரை)

'நின்று நிலைஇயர் நின்நாள்மீன் ; நில்லாது
படாஅச் செலீஇயர், நின் பகைவர் நாளே' (புறம். 24 : 24-25)

என்பது நாள் பற்றிய ஓம்படை. வீழ்மீன் தீண்டியவழிக் கேடு நிகழ்ந்தமையை 'ஆடு இயல் அழற்குட்டம்' எனத் தொடங்கும் (புறம். 229) புறப்பாட்டு அறிவிக்கின்றது.

156. மேற்கூறிய சில செய்திகளினுல் மக்களுக்கு நாள் நிமித்தம் முதலியன பார்த்தலில் உளவாயிருந்த பெருநம்பிக்கை நன்கு விளங்கும்.

## கோள்

### ஒன்பது கோள்கள்

157. ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஏழும் பாம்புக்கோள் இரண்டும் ஆக ஒன்பதும் கோள்கள். இவற்றுள் ஞாயிற்றுக்கோளை முதலாகக் கொண்டு பிறகோள்களும் நட்சத்திரங்களும் மூவகை வீதியில் வலம் வருதலைப் பற்றி முந்திய 'நாள்' பற்றிய பகுதியில் விரிவாகக் கூறப்பட்டது இங்கும் நினைவுகூர்தற்கு உரியது.

'ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி,
சனி, பாம்பு இரண்டும் உடனே'

எனத் திருஞானசம்பந்தர் தமது கோளறு பதிகத்தில் நவகோள்களையும் குறிப்பிட்டுள்ளமை காணலாம். தேவாரப் பாசுரங்களில் வேறுசில இடங்களிலும் இக்கோள்கள் பற்றிய குறிப்புக்கள் உள.

'விலங்கல் அமர் புயல் மறந்து,
மீன் சனி புக்கு,
ஊன் சலிக்கும் காலத்தானும்' (தேவா. 1 : 129 : 3)

'சனி புதன் ஞாயிறு வெள்ளி திங்கட் பல தீயன
முனிவது செய்து உகந்தானை' (தேவா. 3 : 10 : 7)

'சனியும் வெள்ளியும் திங்களும் ஞாயிறும்
முனிவனுய் முடி பத்துடையான்தனை' (தேவா. 5 : 21 : 10)

'மகத்திற் புக்கதோர் சனி எனக்கு ஆனுய்' (தேவா. 7 : 54 : 9)

158. இக்கோள்களால் வரும் தீயவற்றை நீக்கி இறைவன் அருளுவான் எனத் திருஞான சம்பந்தர் அறிவுறுத்துகின்றுர்.

'கோளாய நீக்குமவன்
கோளிலி எம் பெருமானே' (தேவா. 1 : 62 : 1)

'கோளும் நாளவை போய் அறும்' (தேவா. 2 : 10 : 7)

என வருவன திருஞான சம்பந்தரின் திருவாக்குக்களாம்.

*கோள்களின் தன்மை*

159. இக்கோள்களுள் சனி, இராகு, கேது என்னும் மூன்றும் தவிர ஏனையவை ஒளி படைத்தவை; நாள்களும் ஒளிபடைத்தனவே. இதனை,

'நாள், கோள், திங்கள், ஞாயிறு, கனை அழல்,
ஐந்து ஒருங்கு புணர்ந்த விளக்கத்து அனையை'

(பதிற். 14 : 3-4)

எனவரும் உவமை வாயிலாக உணர்ந்து கொள்ளலாம்.

160. 'பகற் செய்யும் செஞ்ஞாயிறும்
இரவுச் செய்யும் வெண் திங்களும்' (மதுரை. 7-8)

கவிஞர்களால் பலபடியாகச் சிறப்பித்துப் பேசப்பட்டுள்ளன.

161. பதினொன்றும் பரிபாட்டு, மழைக்கோளைப் பற்றிக் கூற வந்த இடத்தில் சில கோள்களின் நிலையையும் விளக்குகிறது.

'உரு கெழு வெள்ளி வந்து ஏற்று இயல் சேர,
வருடையைப் படிமகன் வாய்ப்ப, பொருள்தெரி
புந்தி மிதுனம் பொருந்த, புலர் விடியல்
அங்கி உயர்நிற்ப, அந்தணன் பங்குவின்
இல்லத் துணைக்கு உப்பால் எய்த, இறை யமன்
வில்லின் கடைமகரம் மேவ, பாம்பு ஒல்லை
மதியம் மறைய, வருநாளில்.' (பரி. 11 : 4-10)

இங்கே 'படிமகன்' என்றது செவ்வாய்க் கோளை. புந்தியாவது புதன். பங்கு, இறையமன் என்பன சனிக்கோளைக் குறிக்கும். பாம்பு என்பது பாம்புக்கோளாகிய இராகு. மதியம் ஆவது சந்திரன்.

*வெள்ளி*

162. 'சீர்சால் வெள்ளி' (பதிற். 24 : 24)

'பயங்கெழு வெள்ளி' (பதிற். 69 : 14)

'வசை இல் புகழ் வயங்கு வெண்மீன்' (பட்டினப். 1)

*வெள்ளி—செவ்வாய்*

163. ‘அழல் சென்ற மருங்கின்,
வெள்ளி ஓடாது’ (பதிற். 13 : 25)

*வெள்ளி—வியாழம்*

164. ‘வெள்ளி எழுந்து வியாழம் உறங்கிற்று’
(ஆண்டாள். பாவை. 13)

‘நறவினை வரைந்தார்க்கும், வரையார்க்கும் அவைஎடுத்து,
அறவினை இன்புறூஉம் அந்தணர் இருவரும் (கலி. 99 : 1-2)

165. இங்கே அந்தணர் இருவராவார் தேவர்க்கும் அகரர்க்கும் ருவாக விளங்கும் வியாழனும் வெள்ளியுமே.

*வெள்ளி—சனி*

166. ‘மைம்மீன் புகையினும், தூமம் தோன்றினும்,
தென்திசை மருங்கின் வெள்ளி ஓடினும்’ (புற. 117 : 1-2)

*விடியலில் வெள்ளி*

167. ‘விரிகதிர் வெள்ளி முளைத்த நள்இருள் விடியல்’
(பொருந. 71-72)

‘இலங்கு கதிர் வெள்ளி’ (புறம். 35 : 7)

‘வைகுறு மீன்’ (அக. 17 : 21 : பெரும். 318)

*செவ்வாய்*

168. ‘செம்மீன் இமைக்கும் மாக விசும்பின்’ (புறம். 60 : 2)

‘அழல் சென்ற மருங்கின் வெள்ளி ஓடாது (பதிற். 13 : 25)

‘படிமகன்’ (பரி. 11 : 4)

*சனி*

169. ‘மைம்மீன்’ (புறம். 117 : 1)

*புதன்*

170. ‘புந்தி மிதுனம் அடைய’ (பரி. 11 : 5)

*பாம்புக்கோள்*

171. ‘அரவு நுங்கு மதி’ (குறுந். 395:4; நற். 377:6-9; அக. 313:7)

‘அரவுக் குறைப் படுத்த பசுங்கதிர் மதியம்’ (நற். 367 : 6-7)

'பாம்பு ஊர் மதி' (நற். 128 : 2)

'பாம்பு சேர் மதி' (கலி. 15 : 17)

'அரவு செறி உவவுமதி' (பரி. 10 : 75)

மழைக்கோள்

172. மழை பெய்வதற்கு ஏற்ற கோள்நிலை அமைப்புக்களைப் பதினொன்றும் பரி பாடலில் விளங்கக் காணலாம் (பரி. 11 : 1-15). மழைவளம் இல்லாமற் செய்யும் கோள்நிலையைப் பதிற்றுப் பத்து முதலிய தொகை நூல்களில் காணலாகும் (பதிற். 24: 23-25 ; 13:25-28; புறம். 386 : 20-25 ; 35 : 6-8 ; 117 : 1-3 ; 388 : 1-2 ; மதுரைக். 106-109 ; பட்டினப். 1-2).

சோதிடர்

173. சோதிடர் என்பது சந்திரன், சூரியன், மற்றைக் கோள்கள், 27 நட்சத்திரங்கள், தாரகைகள் என்னும் ஐந்து வகையினரையும் குறிக்கும். இவரைப் 'பஞ்சவர்' என்றும் உரைப்பர்.

'சந்திரரும், சூரியரும்,
தாரகையும், நாள்மீனும்,
வெந்திறல கோள்களும் ஆம்
என விளங்கி விசும்பு ஆரு
மந்தரத்தை வலம் சூழ்ந்து
வருபவரும் நிற்பவரும்
சுந்தரம் சேர் மணி முடியாய்
சுடர்பவரும் சோதிடரே' (சூளா. துறவு. 206)

என்பது சூளாமணி.

174. மாடத்து இட்ட நறும்புகை பஞ்சவர் விமானத்தையும் கடந்து அப்பாற்சென்றது என்று கவிஞர்கள் வருணிக்கின்றனர்.

'அண்ணரும் பேர் அழல் ஆக்கிய கமழ் புகை
மாதிரத்து இயங்கும் சோதிடர் விமானமும்
வாசம் ஊட்டும் வகையிற்று ஆகி— (பெருங். 2 : 18 : 49-51)

'முகில்தலை மதியம் அன்ன
முழுமணி மாடத்து இட்ட
அகிற்புகை தவழ்ந்து வானத்து
அருவிசும்பு அறுத்து நீண்டு
பகற்கதிர்ப் பரப்பிற்று ஆகி,
பஞ்சவர் விமானம் முட்டி,
புகற்கு அரும் அமரர் கற்பம்
புக்கு, அயா வுயிர்த்த தன்றே. (சீவக. 600)

## கணி

175. கணி என்பான் நாள்கோள்களின் நிலை உணர்ந்து உரைக்கும் சோதிடன் ஆவன். கணித மேதையாகிய இச் சோதிடர் அரசனுடன் உடனுறையும் சுற்றத்தாருள் ஒருவராவர்.

'ஆசான், பெருங்கணி, அறக்களத்து அந்தணர்
காவிதி மந்திரக் கணக்கர்தம்மொடு' (சிலப். 22 : 8-9)

'ஆசான், பெருங்கணி, அருந்திறல் அமைச்சர்
தானைத் தலைவர் தம்மொடு குழீஇ' (சிலப். 26 : 3-4)

'பொன் அணி புதுநிழல் பொருந்திய நங்கையை
அறக்களத்து அந்தணர், ஆசான், பெருங்கணி
சிறப்புடைக் கம்மியர் தம்மொடும் சென்று'
(சிலப். 28 : 221-223)

எனவரும் சிலப்பதிகாரப் பகுதிகளால் கணியின் பெருமதிப்புப் புலனாகும்.

176. 'ஆயுள் வேதரும் காலக் கணிதரும்' (சிலப். 5 : 44)

என்பதில் 'காலக்கணிதர்' என்றது சோதிட நூலாரைக் குறிக்கும். 'காலக்கணிதர் —கணியர்; காலத்தை எண்ணியிடுவார்' என அரும்பத உரைகாரர் இதற்கு விளக்கம் தருகின்றார்.

177. இவர்கள் ஐந்து வகையான கேள்வியை உடையவரா யிருப்பர்.

'ஆறு இரு மதியினும் காருகவடிப் பயின்று
ஐந்து கேள்வியும் அமைந்தோன்' (சிலப்.கால்கோள், 25-26)

என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. இங்கே ஆறு இரு மதியினும் என்பது இராசி பன்னிரண்டிலும் என்றவாறும். காருகவடியாவது கிரகநிலை. ஐந்து கேள்வி என்பதற்கு 'திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம்; நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசக்கோளும் ஆம்' என்று அரும்பத உரைகாரர் விளக்கம் தந்துள்ளார்.

178. திதி, வாரம், நட்சத்திரம், யோகம், கரணம் என்னும் ஐந்தையும் 'பஞ்சாங்கம்' என்று வழங்குவர்.

179. நட்பு, ஆட்சி, உச்சம், பகை, நீசக்கோள் என்பன நாள் கோள்களின் நிலையை உணர்த்தும். இந்த நிலைகளை உணர்த்துவதனைச் 'சாதகம்' என்று உரைப்பர்.

'தத்தம் நிலனும், உயர்வு இழிவும்
பகையும், நட்பும், தம் தசையும்,
வைத்து வழு இல் சாதகமும்
வகுத்த பின்னர்த் தொகுத்த நாட்

சச்சந்தணனே சுதஞ்சணனே
தரணி கந்துக்கடன் விசயன்
தத்தன் பரதன் கோவிந்தன்
என்று நாமம் தரித்தாரே.' (சீவக. 13 : 107)

180. பஞ்சாங்கம் கணித்து நாள் நிலை உரைத்தலைச் சிறுபஞ்ச மூலச் செய்யுள் ஒன்று பின்வருமாறு விளக்குகின்றது :

நாள் கூட்டம், மூழ்த்தம், இவற்றொடு நன்று ஆய
கோள்கூட்டம், யோகம், குணன் உணர்ந்து—தோள்கூட்டல்
உற்றானும் அல்லானும்,—ஐந்தும் உணர்வான்நாள்
பெற்றானேல் கொள்க, பெரிது.' (சிறுபஞ்ச. 42)

## வானநூற் புலவர்

181. வானநூற் புலவரின் இயல்புகளை முப்பதாம் புறப்பாட்டு நன்கு விளக்கியுள்ளது. அதுவருமாறு :

'செஞ்ஞாயிற்றுச் செலவும்,
அஞ்ஞாயிற்றுப் பரிப்பும்,
பரிப்புச் சூழ்ந்த மண்டிலமும்,
வளி திரிதரு திசையும்
வறிது நிலைஇய காயமும், என்று இவை
சென்று அளந்து அறிந்தோர்போல, என்றும்
இனைத்து என்போரும் உளரே.' (புறம். 30 : 1–7)

182. இச் செய்யுட் பகுதிக்கு உரிய பழைய உரை விளக்கம் பின்வருமாறு :

'செஞ்ஞாயிற்றினது வீதியும், அஞ்ஞாயிற்றினது இயக்கமும், அவ் வியக்கத்தால் சூழப்படும் பார்வட்டமும், காற்று இயங்கும் திக்கும், ஓர் ஆதாரமும் இன்றித் தானே நிற்கின்ற ஆகாயமும் என்று சொல்லப்பட்ட இவற்றை ஆண்டாண்டு போய் அளந்து அறிந்தவர்களைப் போல நாளும் இத்துணை அளவை உடையன என்று சொல்லும் கல்வியை உடையோரும் உளர்....'செலவு' என்றது செலப்படும் வீதியை. 'பரிப்பு' என்றது இத்துணை நாழிகைக்கு இத்துணை யோசனை செல்லும் என்னும் இயக்கத்தை.'

183. இவ்வுரைகாரர் தரும் விளக்கத்தால் பண்டு வாழ்ந்த வான நூற் புலவரின் இயல்பும் சிறப்பும் நன்கு புலனாம்.

## நிறைவுரை

184. வானத்தில் தோற்றமளிக்கும் நாள் கோள்களைக் கொண்டு காலங்கணிப்பது உலகில் தொன்றுதொட்டு வரும் முறை. பிற

இயற்கைத் தோற்றங்களும் காலத்தை நினைவூட்டுவது உண்டு. இரவு நடுயாமத்தில் சாமக்கோழியின் கூப்பீடும் விடியலில் கோழி கூவுதலும் காகம் கரைதலும் என்றும் உள்ளவை. வேங்கைப் பூ மலரும் காலம் திருமணத்திற்கு ஏற்ற காலம் என்று இலக்கியங்களில் பேசப்படு கிறது. ஒவ்வொரு நாளிலும் காலை, மாலை, இரவு எனக் குறித்த நேரத்தில் மலரும் மலர்களும் பல. மலையில் உள்ள குறிஞ்சிமர மலர் பன்னிரண்டு ஆண்டுகளுக்கு ஒருமுறை மலர்கிறது. இப்படி எத்தனை எத்தனையோ இயற்கைத் தோற்றங்களும் நிகழ்ச்சிகளும் மாந்தர்க்கு அனுபவ வாயிலாகக் காலங்களை நிர்ணயிக்க உதவுகின்றன.

185. 'காலம்' என்பது கடவுளாகவும் போற்றப்படுகிறது. 'காலம் உலகம்' எனத் தொடங்கும் தொல்காப்பியச் சூத்திரவுரையில் (சொல்.57) 'காலம்' என்றது காலக்கடவுளை' என்று கூறுகிறார் சேனாவரையர். உரிய காலத்தில் வந்து உயிர்த்தொகுதிகளைக் கவர்ந்து செல்லும் மரணதேவதை காலன் என்னும் பெயரால் வழங்கப்படு கிறது. எல்லாவற்றையும் படைத்துக் காத்து அழிக்கும் முழுமுதற் கடவுளையே காலத்தொடு பிணைத்து 'ஆதிரையான் ஆதிரையான்' என்று கற்பித்துக் கூறுகிறது உலகம். கால எல்லைக்குக் கட்டுப்படாத வர் யார்?

'காலம் என்பது கறங்குபோற் சுழன்று
மேலது கீழா கீழது மேலா
மாற்றிடும் தோற்றம்......(மனோன்மணீயம் 1, 1, 94–96)

என்று கணித்துக் கூறுகிறார் தத்துவப் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை.

'புலர்ந்து விடியும் பொழுதினிலே
பொய்கைக் கரையஞ் சோலையிலே
மலர்ந்து நல்ல மணம்வீசி
மகிழும் மலர்கள் ஆயிரமாம்;
உலர்ந்து வாடிச் சேற்றினிலே
உதிரு மவையும் ஆயிரமாம்;
கலந்த உலக வாழ்வைஇதில்
கண்ணுற் கண்டு தெளிவாயே!

'வசந்த ருதுவும் வந்திடுமோ?
வாச மலர்கள் பூத்திடுமோ?
கசிந்து பாடும் குயில் இன்னும்
காது குளிரச் செய்திடுமோ?
இசைந்த இளமைப் பருவத்தின்
இனிமை இனியும் எய்துவனோ?
அசைந்த உள்ளம் தேறுமொழி
ஆரே கூற வல்லாரே?

—கவிமணி தேசிகவிநாயகம் பிள்ளை.

# 2. தமிழகராதியியலும் அகரநிரலும்

வ. ஜெயதேவன்
தமிழ் விரிவுரையாளர், சென்னைப் பல்கலைக் கழகம்.

1.0 அகரநிரலே அகராதியியலின் அடிமணை. எனினும், எம்மொழி யகராதியியலிலும் தொடக்க காலத்திலேயே அகரநிரல் தோன்றவில்லை. காலப்போக்கில் பல படிமுறை வளர்ச்சிக்கு (evolution) உள்ளாகியே முதிர்ச்சியுற்ற—முழுமை பெற்ற அகரநிரல் அலர்ந்தது.

> "............process of alphabetization involved a considerable time and passed through several stages," [1]

என்ப டாக்டர் எஸ். எம். காத்ரே. இக்கருத்து, தமிழகராதியியலுக்குத் துவரப் பொருந்துவதாகும். தமிழகராதியியலில் அகரநிரலின் வளர்ச்சி வரலாற்றையும், அகரநிரல் அமைப்பிற்குதவிய கருவிகளையும் விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கம்.

2.0 தொல்காப்பியம்

தமிழகராதியியலின் வயது மூவாயிரம் ஆண்டுகளுக்கும் மேற்பட்டதாகும். தமிழகராதியியலுக்குத் தோற்றுவாய் செய்த தொல்காப்பியம்,

> "எழுத் தெனப் படுப
> அகர முதல னகர இறுவாய்" [2]

எனத் தமிழ் நெடுங்கணக்கின் அகரநிரலைச் சுட்டுகிறது. ஆயினும், தொல்காப்பியத்தில் பொருள் குறிக்கப்பட்ட சொற்கள் இற்றை அகராதிபோல் அகரநிரலில் அமைக்கப்படவில்லை. தொல்காப்பியம் அகரநிரல் வரம்புகளுக்கு உட்படாமல் நூற்பா வடிவில் ஓலைகளில் பூத்தது. அகரநிரலின் குறிப்பு நோக்கீட்டின் இன்றியமையாமை

1. Dr. S. M. Katre: Lexicography, Annamalai University, Annamalai nagar, 1965, p. 5, para. 1. 3.
2. தொல். எழுத். 1.

(reference importance) அக்காலத்தில் உணர்ந்து கொள்ளப்படவில்லை. மனப்பாடஞ் செய்வதற்கேதுவாய் மட்டுமே படைக்கப்பட்டது.

> "Tolkāppiyam is in the sutra style, and sutras, like other metrical measures in Tamil, often employ, for mnemonic purposes, etukai, or initial rhyme. It is this initial rhyme that has suggested the arrangement of words and their synonyms in uri-y-iyal. There is neither a strictly logical nor an alphabetical order,"[3]

எனத் தமிழ்ப் பேரகாதி குறிப்பது நோக்கத் தகுவதாகும்.

### 3.0 சங்ககாலம்

தொல்காப்பியருக்குப் பின் தமிழகராதியியல் வரலாற்றில் இடம் பெறும் 'நிகண்டன் கலைக்கோட்டுத் தண்டனார்' என்பவர் சங்க காலத்தைச் சார்ந்தவர். நற்றிணை 382-ஆம் பாடலை யாத்த இப்புலவரின் பெயர் பல்வேறு கருத்து வேறுபாடுகளுக்கு வித்திட்டுள்ளது. ஆயினும், இவர் படைப்பாக நிகண்டேதும் கிடைத்திலது. ஆகவே, தமிழகராதியியல் வரலாற்றில் சங்ககாலம் பெயரளவே அன்றிப் பேரளவு அங்கம் வகிக்கவில்லை.

### 4.0 நிகண்டுகள்

தொல்காப்பியத்திற்குப் பின் கி.பி. 7-ஆம் நூற்றாண்டு முடிய தமிழகராதியியல் வரலாற்றில் ஒரு வெற்றிடம் விளங்கக் காணலாம். இக்கால இடைவெளியில் நிகண்டுகள் தோன்றவே இல்லையா? அல்லது தோன்றி அழிந்துவிட்டனவா? என்பது ஆய்வுக்குரியது.

4.1 கி. பி. 8ஆம் நூற்றாண்டு தொடங்கிப் பல நிகண்டுகள் எழுந்தன. இந்நிகண்டுகள், தமிழகராதியியலின் உயர்நிலையாக—உயிர்நிலையாக விளங்குவன. இவையனைத்தும் மனப்பாடம் செய்வதற்கேற்ப செய்யுள், நூற்பா நடையிலேயே படைக்கப்பட்டன. குறிப்பு நோக்கீட்டின் இன்றியமையாமை கருத்திற் கொள்ளப்படவில்லை. ஆதலின், நிகண்டுகளில் அகரநிரல் தென்படவில்லை. இவற்றிற்கு விலக்காகச் சில விளங்கின. இனி, அவற்றை நோக்குவோம்.

### 4.2 அகராதி நிகண்டு

இது கி. பி. 1594-இல் சிதம்பர இரேவண சித்தரால் படைக்கப்பட்டது. தமிழகராதியியல் வரலாற்றில் தனிச் சிறப்புவாய்ந்த தனியிடம் பெற்றுத் திகழ்கிறது. சொற்பொருள் கூறும் துறை நூலை,

---

3. Tamil Lexicon, University of Madras, 1936, Vol. I. p. xxv.

"அகராதி" என வழங்கப்படுவதற்குப் பெயர் வழங்கிய பெருமை இந்நிகண்டுக்கே உண்டு. அன்றியும், தமிழகராதியியலுக்கு முதன் முதலில் அகரநிரலை அறிமுகஞ் செய்த பெருமையும் இதற்கே உண்டு.

4.2.1 "அகராதி நிகண்டு தமிழ் மொழியில் தோன்றிய முதல் அகராதி மட்டு மன்று; இதுவரைக்கும் தெரிந்துள்ள ஆராய்ச்சி முடிவின்படி, உலகத்தின் முதல் அகராதியும் இதுவேதான். தொல் காப்பியமே போல, இற்றைக்கு 2500 ஆண்டுகட்கு முன் அசிரிய மக்கள் சொற்பொருள் கூறும் துறைநூல் இயற்றினரெனினும், மேலைநாட்டில் முதன்முதலாக அகரவரிசையில் அகராதி நூல் தோன்றியது பதினேழாம் நூற்றுண்டில் தான். அதாவது, 1612-ஆம் ஆண்டில் இத்தாலிமொழியில் முதல் முதலாக அகரவரிசையில் அகராதி தோன்றியது,"[4] என்பர் புலவர் சுந்தரசண்முகனுர். ஆனல், கி.பி. 1450-இல் இங்கிலாந்தில் அகரநிரலில் அகராதிகள் எழுந்துள்ளன என டாக்டர் எஸ். எம். காத்ரே[5] கூறுவர். இவ்விருவர் கருத்துகளின் வன்மை மென்மை ஆழ்ந்து ஆய்தற்குரியன.

4.2.2 அகராதி நிகண்டு முற்றுக அகரநிரலில் தன்னிறைவு பெறவில்லையெனினும், முதலெழுத்தளவில் அகரநிரலமைப்பு முயற்சி யில் முழுமை பெற்றே விளங்குகிறது. இந் நிகண்டு, அகராதிப் பேர்த் தொகுதி முதலாக வகராதிப் பேர்த் தொகுதி யீருகப் பத்துத் தொகுதிகளையுடையது. அ—ஔ, க—கௌ, ச—சௌ, ஞ—ஞௌ, த—தௌ, ந—நௌ, ப—பௌ, ம—மௌ, ய—யௌ, வ—வௌ என்று பத்துத் தொகுதிகளிலும் முதலெழுத்தளவில் அகரநிரலில் சொற்கள் அமைக்கப்பட்டுள்ளன. மேலைநாடுகளிலும், அகராதியிய லில் அகரநிரல் முதன்முதலில் முதலெழுத்தளவில் மட்டுமே நடை முறைக்கு வந்தது ஒப்பு நோக்கத் தகுவதாகும்.[6]

---

4. புலவர் சுந்தரசண்முகனுர்: தமிழ் அகராதிக்கலை, புதுவைப் பைந்தமிழ்ப் பதிப்பகம், 1965, பக். 38-39.
5. Dr. S. M. Katre: Lexicography, Annamalai University, Annamalai nagar, 1965, p. 5, para. 1. 3.
6. (a) "Students of English Lexicography will note that the Epinal Glossary had advanced exactly to this first-letter Order" (Sir James Murray: The Romanes Lecture (1900), The Evolution of English Lexicography, p. 11).
6. (b) "In the first process, words beginning with A were separated from those beginning respectively with B, C and others and put in blocks without regard to the second letters of the words" (S. M. Katre: Lexicography, p. 5).

4.2.3 அகராதி நிகண்டில் அகரநிரல் இடம் பெற்றதற்கான காரணங்களை அறுதியிடல் அரிது. எனினும், சில எண்ணிப் பார்க்கத் தக்கவையே. அவைகளாவன :

1. மனப்பாடத்திற்கு உரிய போக்கினின்றும் குறிப்பு நோக்கீட்டிற்குத் திருப்புகிற முயற்சியின் விளைவு.[7]

2. முதலெழுத்தளவில் அகரநிரலுடைய வருக்கக்கோவை முதலிய இலக்கியச் செய்யுள்களின் தூண்டுகோல்[8].

3. வடமொழி நிகண்டுகளின் செல்வாக்கு[9].

4. சிதம்பர இரேவண சித்தருக்குப்புதுமைகளைப் படைக்கும் வேட்கை இயல்பாகவே இருந்திருக்கக் கூடும். இதன் காரணமாகவே இந்நிகண்டில் இரு பெரும் புதுமைகளைச் செய்துள்ளார் எனலாம். (அ) ஒரு பொருளுடைய சொல், இரு பொருளுடைய சொல் என 46 பொருளுடைய சொல் வரை பொருள் தொகை யடிப்படையில் பகுத்தது. (ஆ) சொற்களை அகரநிரலில் அமைத்தது.

4.2.4 அகராதி நிகண்டில் அகரநிலுக்குக் காரணம் எதுவாயினும், அகரநிரலை எளிதில் அமைக்கவல்ல சாதனங்களேதும் அறியாத ஒரு கால கட்டத்தில், மனத்துள்ளேயே எண்ணி எண்ணிப் பார்த்துப் பகுத்து 3368 சொற்களை அகரநிரல் படுத்தியிருப்பது வியக்கத்தக்க பெருஞ் சாதனையே.

4.3 அகராதி நிகண்டு அகரநிரலுக்கு அடிகோலியும், அடுத்துவந்த பல நிகண்டுகள் இவ்வகரநிரலைப் பொருட்படுத்தவில்லை ; பின்பற்ற

---

7. "As this (etukai) arrangement was perfected more and more, the emphasis shifted from 'memorising' to 'reference'.......... The first work of this kind (which gave up the etukai arrangement altogether and purported solely to be work of reference) is Akarāti-nikaṇṭu."

(Tamil Lexicon, Vol, I, p. xxxii - xxxiii)

8. In Tamil Literature, there were species of compositions, like Varukka-k-kōvai, which were charecterised by an alphabetical arrangement of the initial letters of the stanzas. Most probably, these works suggested the idea to the author of Akarāti-nikaṇṭu." (Tamil Lexicon, Vol. I, p. XXXIII.)

9. "It is probable that early Sanskrit Nighantus had also some influence in the matter." (Tamil Lexicon, Vol. I, p. XXXIII.

வில்லை. ஆனல், கி. பி. 1700இல் ஈசுவர பாரதியாரால் படைக்கப்பட்ட 'பல்பொருள் சூளாமணி நிகண்டி'ல் கிடைத்துள்ள முதலிரு காண்டங்களும், அகராதி நிகண்டைப் போலவே முதலெழுத்தளவில் அகரநிரலில் இலங்குகிறது. 4265 சொற்கள் இங்ஙன் பொருள் விளக்கப்பட்டுள.

4.4 கைலாச நிகண்டு சூடாமணி என்னும் நிகண்டு கி. பி. 17ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியில் தோன்றியதாகக் கருதப்படுகிறது. 56 பிரிவுகளை உடைய இந்நிகண்டில் 50ஆவது பிரிவாகிய 'ஓரெழுத்தொரு மொழி' மட்டுமே அகரநிரலில் அமைக்கப்பட்டுள்ளது. ஓரெழுத்தொரு மொழி எண்ணிக்கையில் குறைவாதலாலும், வேறு எழுத்துகள் பின்னே தொடராமையால் எழும் சிக்கலின்மையாலும் இப்பிரிவு மட்டும் அகரநிரலில் அமைக்கப்பட்டது போலும்.

4.5 கி.பி. 1750இல் சுவாமிநாதக் கவிராயரால் இயற்றப்பட்ட பொதிகை நிகண்டு, அகரநிரல் வளர்ச்சி வரலாற்றில் குறிப்பிடத்தக்க ஒன்ருகும். இஃது, ஏனைய நிகண்டுகள்போல் பொருட்பிரிவுகளைப் (Sectional classifications) பெற்றிராமல், அகரநிரலுக்கே சிறப்பிடம் தந்துள்ளது. முதலெத்தளவில் நின்ற அகரநிரல், இந்நிகண்டில் முதலிரண்டு எழுத்துகளுக்கு விரிந்துள்ளது சிறப்பாகக் குறிக்கத் தகுவது. 15,850 சொற்கள், இந்நிகண்டுள் முதலிரண்டெழுத்தளவில் அகரநிரலில் நிறுத்தப்பட்டுள.

4.5.1 மேனுட்டு அகராதியியல்களிலும், முதன்முதலில் முதலெழுத்தளவில் அகரநிரல் அமைந்தது ; பின்னர் முதலிரண்டெழுத்துகளுக்கு விரிந்தது ; அதற்குப் பின்னரே இறுதியெழுத்து வரை முழுமையாக அகரநிரல் மலர்ந்தது. இதனை,

> " In the first process (of alphabetization) words beginning with A were separated from those beginning respectively with B, C and others and put in blocks without regard to the second letters of the words. Later on the second letters were alphabetized under each of the first letters, leaving the third and subsequent letters out of consideration. Finally alphabetization was carried out throughout as in a modern glossary",[10]

என்னும் டாக்டர் எஸ். எம். காத்ரேயின் கருத்தால் தெளியலாம். அகராதி நிகண்டு, பல்பொருள் சூளாமணி நிகண்டு ஆகியவற்றில் முதலெழுத்தளவில் நின்ற அகரநிரல் பொதிகை நிகண்டில் முதலிரண்டு எழுத்துகள் வரை விரிந்தது.

10. Dr. S.M. Katre: Lexicography, Annamalai University, Annamalai nagar, 1965, p. 5. para. 1.3

4.6 அகராதி மோனைக்ககராதி எதுகை

இதனைப் படைத்தவர், படைத்தகாலம் பற்றிய குறிப்புகள் ஏதுமில்லை. ஆயினும், சதுர் அகராதியைக் காட்டிலும் காலத்தால் முந்தியது எனக் கருதப்படுகிறது. இப்படைப்பிலும் முதலிரண்டெழுத்துகள் வரை அகரநிரல் அமைந்துள்ளது.

5.0 முதலிரண்டெழுத்துகள் வரை விரிந்த அகரநிரல் முதிர்ச்சி பெறலாயிற்று. அகரநிரலின் செல்வாக்கு அகராதியியலில் ஓங்கி வளரலாயிற்று. மேனாட்டார் தொடர்பும் வாய்த்தது. தமிழ்ப் பேரகராதி,

> "Lexicography had, by now, outgrown the crude form of class-vocabularies; 'memorising' had given place to 'reference' and the alphabetical arrangement had been slowly evolved, though it had not advanced beyond the second letter of the word. At this stage, foreign influences began to set in,"[11]

எனக் குறித்தமை எண்ணத்தக்கது. மேனாட்டார் உறவால் தமிழகராதியியலில் அகரநிரல் முற்றாகக் கனிந்தது.

5.1 மணிப்பிரவாள நடையில் உள்ள வைணவ உரைகளில் பயின்றுவந்த அருஞ்சொற்கள் அகரநிரலில் நிறுத்தப்பட்டுப் பொருள் விளக்கும் படைப்பு ஒன்று அரும்பியது. ஓரெழுத்தொரு மொழி தொடங்கிப் பத்தெழுத்துச் சொல் ஈறாக 10 தொகுதிகளில் சொற்கள் அகரநிரலில் நிறுத்தப்பட்டுப் பொருள் விளக்கும் பத்துச்சொல்லகராதியொன்றும் படைக்கப்பட்டது. இப்படைப்புகளில் எல்லாம் முழுமையுற்ற அகரநிரலைக்காண முடிகிறது.

6.0 கி. பி. 1679இல் கொச்சியில் அச்சேறி வந்த முதலகராதி தமிழ்—போர்ச்சுக்கீசிய அகராதியாகும். இதன் ஆசிரியர் ஆந்தம் தெ. ப்ரோயன்சா என்பவராவார். கி.பி. 1712இல் பார்த்தலோமியஸ் சியகென் பால்க் என்பவரால் 'டிக்ஷனேரியம் தமுலிகம்' படைக்கப்பட்டது.

6.1 கி.பி. 1732-இல் வீரமாமுனிவர் சதுர் அகராதியைப் படைத்தார். இதற்குப் பின்னர்தான் தமிழகராதியியல் பொலிவும் வலிவும் பெற்றது. முற்றக் கற்றோர் மட்டுமே பயன்கொள்ளத்தக்க வகையில் இருந்த அகராதியியல் எளிய மக்களும் பயன்கொள்ளும் வகையில் பரவலாயிற்று. அன்றியும் அகராதியியல் ஒரு கலையாகவே வளரலாயிற்று. மேனாட்டார் தொடர்பே தமிழகராதியியல் தனிக்கலையாக வளரக் காரணமெனலாம்.

---

11. Tamil Lexicon, University of Madras, Madras, Vol. I, p. XXXV.

7.0 குறிப்பு நோக்கீட்டிற்கு அகரநிரல் ஒன்றே எளிய வழி. இதனுற்றான் இன்று இயன்றவிடமெல்லாம் இவ்வகரநிரல் அமைக்கப் பட்டு வருகிறது. இவ்வகரநிரல் அமைப்பிற்குதவும் கருவிகள் பற்றி அறிவது சுவை பயப்பதாகும்.

7.1 பழங்காலத்தில்—ஓலைகள் புழக்கத்திலிருந்த காலத்தில் மனதிற்குள்ளேயே எண்ணி எண்ணிப் பார்த்தே அகரநிரலில் சொற்களை அமைத்திருப்பர். மேலைநாட்டார் தொடர்பும், அச்சியந் திரங்கள், தாள்கள் ஆகியவற்றின் அறிமுகமும் கிடைத்த பிறகே அகரநிரலில் அமைப்பது எளிதாயிற்று. எனினும், பலரும் பலவித கருவிகளைப் பயன்படுத்தி வந்தனர்.

7.1.1 தமிழ்ப் பேரகராதி பற்றி எஸ். வையாபுரிப்பிள்ளை குறிப்பது சுவை நல்குவதாகும்:

> "லெக்ஸிகனின் ஆரம்ப காலத்தில் Folio அளவுள்ள நோட்டுப் புத்தகங்களில் சொற்களை எழுதி வந்தார்கள். மொழி முதலில் வரும் எழுத்துக்களின் கீழாகச் சொற்கள் பல நோட்டுப் புத்தகங்களில், பல இடங்களில், அகராதிக் கிரம மின்றி எழுதப்பட்டு வந்தன. ஏதேனும் ஒரு சொல்லைப் பார்க்க வேண்டுமாயின் பல நோட்டுப் புத்தகங்களையும், ஒவ்வொரு புத்தகத்திலும் பல இடங்களையும் நோக்கும் படி நேர்ந்தது. இதனுல் விளைந்த இடைஞ்சல்கள் பல. சொற்கள் மிகுந்தோறும், நோட்டுப் புத்தகங்களும் மிகுந்தன ; கஷ்டப்பாடுகளும் மிகுந்தன. ஒரு சொல்லின் பல பொருள் களையும் தொடர்ச்சியாகவும் பார்க்க முடியாது. சொற் களையும் பொருள்களையும் தேடும் இந்தக் காட்சி சிறிது விநோதமாகவேயிருந்ததாம். பதிப்பாசிரியராயிருந்த ரெவ. சாண்ட்லெர் இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய தேசங் களுக்குச் சென்று அகராதி இயற்றும் முறையைத் தெரிந்து மீண்ட பிற்பாடுதான், கார்டு அளவிலுள்ள கடுதாசித் துண்டுகளில் சொற்களையும் பொருள்களையும் எழுதி அகராதிக் கிரமத்தில் அடுக்கிவைக்கும் முறை கையாளப் பட்டதாம்."[12]

7.1.2 தமிழ்ப் பேரகராதியில் சொற்கள் அகரநிரலில் அடுக்கப் பட்ட முறை வியப்பளிப்பதாகவே உள்ளது. தமிழ்ப் பேரகராதிக்கும் காலத்தால் முந்திய வீரமாமுனிவரும், வின்சுலோவும், விசுவநாதப் பிள்ளையும் தங்கள் அகராதியைத் தொகுக்க நோட்டுப்புத்தகங்களைப் பயன்படுத்தினுர்களா? அல்லது கார்டு அளவுத் துண்டுத்தாள்களைப்

---

12. எஸ். வையாபுரிப்பிள்ளை : அகராதி நினைவுகள், தமிழ்ப் புத்த காலயம், 1959, பக். 12.

பயன்படுத்தினர்களா? எங்ஙன் சொற்களை அகரநிரலில் அடுக்கினார்கள்? என்று தெரியவில்லை. இவை குறித்து மேலும் ஆய்வது இன்றியமையாததாகும்.

7.2 இது அறிவியல் யுகம். துண்டுத்தாள்களில் சொற்களை எழுதிப் பிறகு அவற்றை அகரநிரலில் அடுக்குவது காலத்தையும் பலருடைய உழைப்பையும் விரயமாக்கிவிடும். ஆகவே, மேல் நாடுகளில் இன்று கம்பியூட்டர்கள் பெரிதும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. மொழியின் பல்வகை ஆய்வுக்கு மட்டுமன்றி, அகராதித் தயாரிப்புக்கும் இன்று கம்பியூட்டர்கள் பயன்படுத்தப்பட்டு வருகின்றன. (பின்னிணைப்பு-1 காண்க). பலர் பல மணி நேரம் செய்வதை கம்பியூட்டர் ஒரு சில மணித்துளிகளில் செம்மையாய்ச் செய்து விடுகின்றது.

7.2.1 ஆர். பன்னீர்செல்வம், பி. ஆர். சுப்பிரமணியன் ஆகிய இருவரின் கூட்டு முயற்சியால் 'சங்க இலக்கியச் சொற்பொருள் களஞ்சியம்'[13] ஒன்று கம்பியூட்டரின் துணையால் கோபன்ஹேகனில் உருவாக்கப்பட்டு வருகிறது.

7.2.2 கோபன்ஹேகனில் கம்பியூட்டர் மூலம் ஒரு தமிழ்ப் பேரகராதியும் தயாரிக்கப்பட்டு வருகிறது:

> "The Tamil Lexicon project was decisively launched by Eric Grinstead in March 1973 when Gregers Koch and Bente Morck-Larsen, of the Datalogisk Institute, coded the Tamil letters into an alphabet that will sort correctly in the high-speed system that is standard at the Northern Europe computing Centre."[14]

7.2.3 பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள் கம்பியூட்டர் துறையில் காட்டிவரும் ஆர்வமும் அக்கறையும் பெரிதும் நம்பிக்கை அளிப்பதாக உள்ளது. எதிர் காலத்தில் சென்னையிலேயே கம்பியூட்டரின் உதவியால் அகராதியியல் நன்கு சிறக்கும் என நம்பலாம்.

8.0 இதுகாறும் கூறியவற்றான், (1) தொல்காப்பியம் தோற்றுவாய் செய்த தமிழகராதியியலில் தொடக்க காலத்தில் குறிப்பு நோக்

---

13. R. Panneer Selvam - P. R. Subramanian: Concordance to Sangam Literature (Newsletter of S. I. A. S. No. 4, p. 8, No. 5, p. 23, No. 6, p. 12).

14. Newsletter of the Scandinavian Institute of Asian Studies, June 1973, No. 6. p. 11-12.

கீட்டிற்கு உதவும் அகரநிரல் இல்லை. (2) கி. பி. 1594-இல்தான் முதன் முதலில் முதலெழுத்தளவில் அகராதி நிகண்டில் அகரநிரல் அமைக்கப் பட்டது. (3) கி. பி. 1700-இல் பல்பொருள் சூளாமணி நிகண்டிலும் முதலெழுத்தளவில் அகரநிரல் அமைக்கப்பட்டது. (4) 17ம் நூற்றூண் டில் கைலாச நிகண்டு சூடாமணியில் ஒரு பிரிவுமட்டும் அகரநிரலில் அமைந்துள்ளது. (5) கி. பி. 1750 -இல் பொதிகை நிகண்டில் முதலிரு எழுத்துகள் வரை அகரநிரல் விரிந்தது. (6) அகராதி மோனைக்ககராதி யெதுகையிலும் முதலிரு எழுத்துகள் வரை அகரநிரல் அமைக்கப் பட்டது. (7) இதற்கிடையே மேலைநாட்டார் உறவும் ஏற்பட்டுத் தமிழ கராதியியல் புதுப் பொலிவு பெற்றது; அகராதிக் 'கலை' மலர்ந்தது. (8) அகராதியியலின் அடிப்படையாகிய அகரநிரலை அமைக்கப் பயன் பட்ட கருவிகள், நோட்டுப் புத்தகங்கள் — கார்டு அளவுத்தாள்கள்— கம்பியூட்டர்கள் என வளர்ச்சியுற்றிருக்கின்றன என அறிந்தோம். சுருங்கக்கூறின், தமிழகராதியியலில் அகரநிரலின் படி முறை வளர்ச்சி வரலாற்றையும் பயன்படு கருவிகளையும் ஓரளவு கண்டோம்.

## APPENDIX - I

*A Selective Bibliography on Computation in Lexicography*


1. Automatic Data Processing Glossary, Executive Office of the President, Bureau of the Budget, U. S. Government Printing Office, Washington, December, 1962.

2. Documentation, Indexing, and Retrieval of Scientific Information, prepared by the committee on Government Operations, U. S. Senate, Doc. No. 113, Washington, 1960.

3. Edmumdson, H. P. (ed.): Proceedings of the National Symposium on Machine Translation, held at the University of California, Los Angeles, Feb. 1960, Prientice — Hall International Englewood Cliffs, N. J., 1961.

4. Garvin, P. L.: "Automatic Linguistic Analysis: A Heuristic Problem", Proceedings of the International Conference on Machine Translation and Applied Language Analysis, Her Majesty's Stationary Office, London, 1962, Vol. 2. pp. 665-669.

5. ...... and Bernard Spolsky (ed.): Computation in Linguistics— A case Book, Indiana University Press, Bloomington and London, 1966.

6. Lamb, S. M., and W. H. Jacobson, Jr.: "A High speed Large capacity Dictionary System", Mechanical Translation, Vol. 6, pp. 76-106, 1961.

7. Lunch, L. P.: Keyword-in-context Index for Technical Literature (KWIC Index), RC. 127, IBM Advanced Systems Development Div., Yorktown Heights, N. Y., 1959.

8. Machine Indexing: Progress and Problems, Papers presented at the Third Institute on Information Storage and Retrieval, Centre for Technology and Administration, School of Govt. and Public Admn., The American University, Washington, Feb. 1961.

9. Maron, M. E.: "Automatic Indexing: An Experimental Inquiry," Journal of the Association for Computing Machinery, Vol. 8. No. 3, July, 1961.

10. …… and J. L. Kuhns: "On Relevance, Probabilistic Indexing and Information Retrieval", Journal of the Association for Computing Machinery, Vol. 7, No. 3, July, 1960.

11. Micklesen, L. R.: "Source — language Specification with Table Look up and High Capacity Dictionary, Proceedings of the International Conference on Machine Translation of Languages and Applied Language Analysis, Her Majesty's Stationary Office, London, 1962, pp. 317-340.

12. Oettinger, A. G.: Automatic Language Translation, Harvard University Press, Cambridge, Mass., 1960 (with a detailed description of the Harvard Automatic Dictionary).

13. Proceedings of the International Conference on Machine Translation of Languages and Applied Language Analysis, National Physical Lab., Symposium, Her Majesty's Stationary Office, London, 1962, 2 Vols.

14. Swanson, Don. R.: "Research Procedures for Automatic Indexing", Machine Indexing: Progress and Problems, Papers presented at the Third Institute on Information Storage and Retrieval, Center for Technology and Admn., The American University, Washington, Feb. 1971.

15. Wisbey R. A. (ed.): The Computer in Literary and Linguistic Research, Cambridge, 1971.

# 3. பரிமேலழகர் உவமை விளக்கம்

புலவர். இ. சுந்தரமூர்த்தி, எம். ஏ., டிப். மானிடவியல்,
தமிழ் விரிவுரையாளர்,
தமிழ்த்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்.

உவமையின் பயன் 1. 1 — பரிமேலழகரின் உவமைகள் 2. 1-3 — நாட்டுப் பழமொழி உவமைகள் 3. 1 — கரும்பு தின்பதற்குக் கூலி 3. 2-3 — பலதுளிபெருவெள்ளம் 3.4 — எரியும் நெருப்பும் எண்ணெயும் 3. 5—காட்டுத்தீயும் பஞ்சும் 3.6—இலக்கிய மரபுத்தொடர் உவமைகள் 4. 1—வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போல 4.2—பசுமட் கலத்துள் நீர்போல 4. 3-4 — கயப்பூப் போல வேறுபடாது கோட்டுப் பூப்போல 4. 5-6 — ஏரலெழுத்துப்போல 4. 7-9 — ஔவை உண்ட நெல்லிக்கனி போல 4. 10-11 — காப்பியச் செய்தி உவமை 5. 1 — கட்டியங்காரன் போல 5. 2 -3— சமய புராணச் செய்தி உவமைகள் 6.1—திரிபுரம் போல 6. 2—இந்திரன் போல 6.3 —கருத்து உவமைகள் 7. 1 — மாண்பும் மாசும் 7. 2 — மடியும் நெருப்பும் 7. 3 — கடல்நடுவண் உடைந்த கலம் முதலியன 7. 4-5 — முடிவுரை 8. 1.

### உவமையின் பயன்

1. 1 எண்ணியதை எண்ணியாங்கு உணர்த்துவதற்கு உவமைகள் பெரிதும் துணையாகின்றன. கவிஞர்களின் கற்பனைப் படைப்பிலும் உவமை தனி இடம் பெற்றுத் திகழ்கிறது. பொதுவாகச் செய்யுள்களிலேயே உவமையும் உருவகமும் மிகுதியாகப் பயின்றுவரும் என்றாலும் உரைநடையிலும் நடைசிறக்கக் கருத்து இனிது புலனாக இவற்றைக் கையாளுகின்றனர். அன்றைய இலக்கணிகள் முதல் இன்றைய திறனாய்வாளர் வரை நாளும் தம் சிந்தனையாற்றலால் எண்ணி எண்ணித் தொகுப்பது உவமைகளையே எனலாம்.

### பரிமேலழகரின் உவமைகள்

2. 1 படைப்பிலக்கியத்திற்கு நிகராக உரையிலக்கியத்தை உருவாக்கிய பரிமேலழகரும் தம் உரையினுள் அழகிய செறிவான உவமைகளை எடுத்தாண்டு உரைக்கு எழிலையும் ஏற்றத்தையும் தந்துள்ளார். இவ்வகையில் பரிமேலழகரின் உவமைகள் வள்ளுவரின் கருத்துகளை விளக்கும் கலங்கரை விளக்கங்களாகத் திகழ்கின்றன.

2. 2 பரிமேலழகரின் உவமை விளக்கங்களை இருவகையாகப் பாகுபடுத்தலாம். ஒன்று வள்ளுவர் படைத்த உவமைகளுக்குத் தம் உரைநயத்தால் மேலும் விளக்கந்தருதல்;[1] மற்றொன்று கருத்து விளக்கங்களுக்காகத் தாமே தம் உரையில் அரிய உவமைகளைப் பெய்து விளக்குதல். இவற்றுள் அவர் பயன்படுத்திய உவமைத் தொடர்களைப் பற்றி ஆராய்வதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

2. 3 பரிமேலழகர் பயன்படுத்திய உவமைகளைக் கீழ்வருமாறு வகுத்தும் தொகுத்தும் ஆராயலாம்.

1. நாட்டுப் பழமொழி உவமைகள்
2. இலக்கிய மரபு உவமைகள்
3. காப்பியச் செய்தி உவமை
4. சமய-புராணச் செய்தி உவமைகள்
5. கருத்து உவமைகள்

### நாட்டுப் பழமொழி உவமைகள்

3. 1 கருத்துகளை விளக்குவதற்கு உரையாளர்கள் மக்கள் பயன் படுத்திய பழமொழிகளையும் எடுத்தாண்டனர். பழமொழிகள் மக்களின் அனுபவ மொழிகள். இவை ஒரு வகையில் அகப்பொருள் துறையில் வழங்கும் உள்ளுறை போலவும், புறப்பொருள் துறையில் விளங்கும் பிறிதுமொழிதலணி போலவும் பொருளும் செறிவும் பெற்றுத் திகழ்வன. 'கரும்பு தின்னக் கூலியா?', 'காட்டுத் தீ முன்னர் பஞ்சுத்துய் போலும்' போன்ற பழமொழித் தொடர்கள் கருத்து விளக் கத்திற்கு வேண்டிய பொருட்செறிவு பெற்றவை. இத்தகைய பழ மொழி உவமைத் தொடர்கள் பரிமேலழகர் உரையிலும் பயின்று வந்துள்ளன.

### கரும்பு தின்பதற்குக் கூலி

3. 2 கல்வி ஒருவர் இன்புறுவதற்குக் காரணமாவதோடன்றிப் பிறர் மகிழ்தற்கும் காரணமாய் அமைகின்றது. எனவே அச் சிறப்பு நோக்கியே கற்றோர் மீண்டும் மீண்டும் கல்வியை விரும்புகின்றனர். இதனைப் பரிமேலழகர்,

> " கரும்பு அயிறற்குக் கூலிபோலத் தாம் இன்புறுதற்கு உலகு இன்புறுதல் பிறவாற்றான் இன்மையின் அதனையே காமுறுவர் என்றுங் கூறினார் ''
> —குறள் 399

என்பர்.

---

1. காண்க: குறள், பரிமேலழகர் உரை, 1, 277, 481, 490, 495, 576 முதலியன.

3. 3 'கரும்பு தின்பதற்குக் கூலியா?', 'கரும்பு தின்பதற்குக் கூலி கொடுத்ததுபோல' முதலான பழமொழித் தொடர்கள் சுருக்க மானவை. ஆனால் உள்ள உணர்ச்சியினைத் தெற்றெனப் புலப்படுத்து பவை. திருவாய்மொழி முதல் பத்திலும், ஒன்பதாம் பத்திலும் வியாக்கியான உரைகாரர் 'கரும்பு தின்னக் கூலி போன்று', 'கரும் பயிலக் கூலி கொடுக்குங் குலத்தோன்றல்'[2] என்று இவ்வுவமைத் தொடர்களைப் பயன்படுத்துவதும் எண்ணுவதற்குரியதாம்.

பலதுளி பெருவெள்ளம்

3. 4 மழை நீர்த்துளி சிறிது சிறிதாகச் சேர்ந்து பெருவெள்ள மாகிப் பயன் தரும். கேள்வியறிவும் அவ்வாறே; சிறிது சிறிதாகச் சேர்ந்து பேரறிவாய்த் திகழும் என்பதனைப் பரிமேலழகர், 'மழைத் துளிபோல வந்து ஈண்டி எல்லா அறிவுகளையும் உளவாக்கலின்' என்பர். (குறள் 416) 'பலதுளி பெருவெள்ளம்' என்னும் நாட்டுப் பழ மொழியின் உட்பொருள் இவ்வுவமையில் நயமுற விளங்குவதைக் காணலாம்.

**எரியும் நெருப்பும் எண்ணெயும்**

3. 5 விறகிட்ட நெருப்பு மேன்மேலும் பற்றி வளர்ந்து எரியும். அதுபோலவே பொருள்கள்மேல் மனம் சென்றால் ஆசைமனம் பற்றி யெரியுமே ஒழிய ஆன்மமனம் வளராது என்பது தெளிவு. இதனைப் பரிமேலழகர்,

'அஃது (மனம்) பொருள்கள்மேல் செல்லின் அந்நுகர்ச்சி விறகு பெற்றதழல் போல் முறுகுவதல்லது' —(குறள் 343

என்னும் உவமையால் விளக்குவர். 'எரிகின்ற நெருப்பினுள் எண்ணெய் வார்த்ததுபோல' என்ற நாட்டுப்புற மக்களின் பழமொழிப் பொருட் செறிவு இவ்வுவமையில் ஓரளவு ஒளிர்கின்றது தெளிவாம்.

**காட்டுத்தீயும் பஞ்சும்**

3. 6 காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய் (குறள் 360)

என்பது மெய்யுணர்தலில் உள்ள குறட்பா. ஞானயோகங்களில் முதிர்ச்சி உடையார்முன் விருப்பு, வெறுப்பு. அறியாமை ஆகிய இம் மூன்று குற்றங்களும் வராமற் கெடும் என்பது இதன் கருத்து.

இக் கருத்தினைப் பரிமேலழகர் விளக்கும்போது பொருள் இனிது புலனாவதற்கு எளிய உவமையினைப் பயன்படுத்துன்றார். காட்டுத்தீ

---

2. திருவாய்மொழி முதல் பத்து, ஆறாந் திருமொழி.

முன்னர் பஞ்சு விரைவில் அழிந்து படும். பெரும்பெரும் வலிய மரங்களே காட்டுத்தீ முன்னர் துகளாகும்போது மெல்லிய பஞ்சின் நிலை என்னாகும்? ஞானயோகத்தின் முன்னர் இம் மூவகைக் குற்றங்களும் எரிந்துவிடும் என்பதனை,

> இடையறாத ஞான யோகங்களின் முன்னர் இக்குற்றங்கள்
> மூன்றும் காட்டுத்தீ முன்னர் பஞ்சுத்துய் போலும்

என்னும் உவமையால் விளக்குவர்.

பரிமேலழகரின் இவ்வுவமை நயத்தால் ஞான யோகத்தின் வலிமையும், அவ் வலிமையின் முன்னர் மூன்று குற்றங்கள் அழிந்து படுகின்ற எளிமையும் இனிது புலனாகின்றன.

நாட்டுப்புற மக்களின் உள்ளங்களில் ஊறிநின்ற இப் பழமொழிகள் பரிமேலழகரின் விளக்கவுரையிலும் இடம்பெற்று விளங்குவது இவ் வுவமைகளால் நன்கு தெளிவாகின்றன.

### இலக்கிய மரபுத்தொடர் உவமைகள்

4.1 பரிமேலழகர் தமக்கு முன்னும், தம்முடைய காலத்தும் இருந்த இலக்கிய இலக்கண நூல்களையெல்லாம் நன்கு கற்றுணர்ந்த அறிஞர்.[3] தங்க அணிகலனில் வைரம் பதித்தாற் போன்று உரையினிடையே அவ்விலக்கிய இலக்கண அருந்தொடர்களைப்பெய்து, உரைக்கு அழகும் அமைப்பும் சேர்த்த அருங்கலைஞர். எனவே மேற்கோள்களுள் பல இலக்கிய மரபுத் தொடர் உவமைகளாக விளங்குவதும் எண்ணுவதற்கு உரியதாகும்.

### வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறுபோல

4.2 ‘அறிவில்லாத பேதையரொடு நட்புக் கொண்டாலும், அந் நட்பு அறிவிலாதவர் நட்பு என அறிந்ததும் அதனை விட்டுவிடுவதே அவனுக்கு வாய்த்த நல்ல பேறாகும்’ என்பதனை வள்ளுவர்,

> ஊதிய மென்பது ஒருவற்குப் பேதையார்
> கேண்மை யொரீஇ விடல் (குறள் 797)

என்னும் குறளால் கூறுவர். நட்பினை ஒழித்தாலும் அவனை விட்டு நீங்காவிடில் துன்ப மிகும். இதனைப் பரிமேலழகர் உவமைவழி நன்கு விளக்குவர்.

---

3. காண்க: பரிமேலழகர் மேற்கோள் விளக்கம் — இ. சுந்தர மூர்த்தி, சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்த்துறைக் கருத்தரங்கக் கட்டுரை.

"நட்பு ஒழிந்தாலும் நீங்காக்கால் வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போலத் தீங்கு வரும்"

என்பர். மணம் தருகின்ற சந்தனமரமும் வேங்கைமரமும் மூங்கிலின் சேர்க்கையால் வெந்தழிவது போலப் பேதையாரின் நட்பு அவரைச் சார்ந்த நல்லோரையும் அழிக்கும் என்பதே இவர்தரும் உவமை விளக்கம். நட்பாராய்ந்து ஒழுகுதற்குத் தம் சிந்தனையாற்றலால் ஒப்பிட்டு விளக்கும் இவருடைய கருத்துநயம் பெரிதும் போற்றுவதற்கு உரியது. பன்னூல் பயிற்சி மிக்காரான பரிமேலழகர் நாலடியின் நற்றமிழை நன்கு ஓதி உணர்ந்தவர். இக் கருத்து,

மனத்தான் மறுவில ரேனுஞ் தாஞ் சேர்ந்த
இனத்தா லிகழப் படுவர்—புனத்து
வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே
எறிபுனந் தீப்பட்டக் கால்[4]

என்னும் நாலடியாரிலும் உவமையாக வந்திருப்பது உளங்கொளற் குரிய ஒன்றும்.

பசுமட்கலத்துள் நீர்போல

4.3 வஞ்சனை வழியால் பொருள் சேர்த்து அதனைக் காப்பாற்றுதல் என்பது பச்சைமண் கலத்துள் நீரைவிட்டுக் காப்பது போன்றதாகும் என்பர் வள்ளுவர்.

அறத்தையும் அரிய உவமையால் உணர்த்தும் வள்ளுவப் பெருந் தகையின் அழகிய இவ்வுவமை,

சலத்தால் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துள்நீர் பெய்திரீஇ யற்று (குறள் 660)

என்னும் குறட்பாவில் இனிது விளங்குவதைக் காணலாம். வள்ளுவர் எடுத்தாண்ட இவ்வுவமையினையே பரிமேலழகர்,

அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல் (குறள் 755)

என்னும் குறட்பாவின் விளக்கவுரைக்குப் பயன்படுத்துவர்.

4.4 அருளோடும் அன்போடும் பொருந்தாத வழிகளில் வந்த செல்வத்தின் ஆக்கத்தைப் பெற்று மகிழாமல் அதைத் தீமையானது என்று நீக்கிடவேண்டும் என்பது இக் குறட்பாவின் கருத்தாகும்.

---

4. நாலடி. நல்லினம் சேர்தல், 17.

> "அவ்வாறு வாராத பொருளீட்டம் பசுமட்கலத்துள் நீர் போலச் செய்தானையும் கொண்டு இறத்தலின்"

என்பது பரிமேலழகருடைய விளக்கவுரை. இங்குக் குறட்தொடரையே உவமைத் தொடராக்கும் பரிமேலழகரின் திறம் எண்ணி வியத்தற் குரியதாய் இலங்குகின்றது.

### கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூப்போல

4.5 அறிவுடைமையின் பயன் உலகத்தைத் தழுவுவது. முன்னே மகிழ்ந்து விரிதலும் பின்னே வருந்திக் குவிதலுமில்லாத இயல்பினது அறிவு.

> உலகந் தழீஇய தொட்பம் மலர்தலும்
> கூம்பலு மில்ல தறிவு (குறள் 425)

என்னும் குறட்பாவில் வள்ளுவர் இதனைக் கூறுவர். வள்ளுவர் கருத்துக்கு விளக்கம் வரைந்த பரிமேலழகர், 'மலர்தலும் கூம்புதலு மில்லாத அறிவினுக்கு' இயற்கை நெறியோடு இயைந்த காட்சி ஒன்றினையே உவமையாக்குகின்றார்.

4.6 நீர் நிலையிலுண்டாகும் பூக்கள் மலர்தலுங் குவிதலுமாகத் தாம் அழிகிறவரை நிலை மாறுதல்களைப் பெறும். ஆனால் கோட்டுப் பூவோ (மரக்கிளையிலுண்டாகும் பூக்களோ) ஒருகால் மலர்ந்தது மீண்டும் குவியாமலே அழிகிறவரை இருக்கும். மலர்தலும் குவிதலு மான இருவகை நிலைகள் கோட்டுப்பூக்களிடத்தில்லை. அறிவார்ந்த நட்பும் இத்தகைய இயல்பினதேயாம். எனவேதாம் பரிமேலழகர்,

> "அவரோடு கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூப் போல ஒருநிலையே நட்பாயினன்எல்லா வின்பமும் எய்தும் ஆகலின் அதனை அறிவு என்றார்"

என்பர். மலர்தலும் கூம்புதலுமில்லாத அறிவினுக்குக் கோட்டுப் பூவினை உவமையாக்குகின்றார் பரிமேலழகர். இவ்உவமை விளக் கத்திலும் ஈரடியின் புகழ்பாடும் நாலடியின் நற்றமிழே எதிரொலிப் பதை நன்கு காணலாம்.

> கோட்டுப் பூப்போல மலர்ந்து பிற்கூம்பாது
> வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட
> கயப்பூப்போல் முன்மலர்ந்து பிற்கூம்பு வாரை
> நயப்பாரும் நட்பாரு மில்.[5]

என்னும் நாலடிப் பாட்டின் உவமையே பரிமேலழகரின் உவமையாக மலர்ந்திருக்கிறது எனலாம்.

---

5. நாலடி. 215.

ஏரலெழுத்துப்போல

4.7 கல்லாதவனுடைய அறிவுடைமை ஒரோவழி மிக நன்ருக இருப்பினும் அறிவுடையோர் அதனை அறிவின் பகுதியாக ஏற்றுக் கொள்ளமாட்டார் என்பதனை வள்ளுவர்

கல்லாதா னொட்பங் கழியநன் ருயினும்
கொள்ளா ரறிவுடை யார் (குறள் 404)

என்னும் குறளால் கூறுவர். கல்லாதவனுடைய அறிவுடைமைக்குச் சான்றுதர விழைகின்ருர் பரிமேலழகர். எண்ணி எண்ணி அவர் தருகின்ற உவமை விளக்கம் வள்ளுவரின் கருத்திற்கு வலிவும் பொலிவும் அளிப்பதாய்த் திகழ்கிறது.

4.8 ஆற்றின் கரையோரங்களில் நத்தை ஊர்ந்து செல்லும்போது கோடுகள் தோன்றும். அக் கோடுகள் சிலவேளைகளில் எழுத்துக்கள் போலவும் தோற்றந் தருவன. ஆனல் அவற்றை எழுத்துக்கள் எனப் போற்ருர் அறிவுடையோர். அத்தகையதே கல்லாதவனுடைய ஒட்பமும் என்பர் பரிமேலழகர்.

"ஒண்மை — அறிவுடைமை. அது நன்ருகாது; ஆயிற்ருயினும் ஏரலெழுத்துப்போல்வ தோர் விழுக்காடு. ஆகலின் நிலை பெற்ற நூலறிவுடையார் அதனை மதியாரென்பதாம்"

என்பது அவர் தரும் விளக்கம்.

4.9 பழமொழி நானூற்றில் வரும், "ஆகுமோ நந்து உழுதவெல் லாம் கணக்கு"[6] என்ற தொடரும் இங்கு ஒப்பு நோக்கற்குரியது. நான்காந் திருமொழியில் வியாக்கியான உரைகாரர், "புழுக்குறித்தது எழுத்தானற்போல இங்ஙனே வாய்த்துக்கொண்டு நிற்கக் கண்ட தித்தினை" என்பர்.[7] திருவரங்கத்தந்தாதியிலும்,

'மானத்து வண்டல் உழ ஓர்எழுத்தின்
வடிவுற்ற சீர்மான'

என்று இக் கருத்து வருவதும் எண்ணுவதற்குரியது.[8]

'நந்து நாகு வண்டு சென்னடைவழி யெழுத்தாய்
வந்து வீழினும் வீழும்'

என்ற இலக்கியத் தொடரும் இதனேடு வைத்து எண்ணத்தக்கது.[9]

---

6. பழமொழி, 245.
7. நான்காம் திருமொழி, 588, உரை.
8. திருவரங்கத்தந்தாதி. (மே. கோ. திருவாய்மொழி, தொ. 6 பக். 191)
9. திருக்குறள், 404 பரிமேலழகர் உரை, வை. மு. கோ. விளக்கம்.

இங்ஙனம் இவ்வுவமைத்தொடர் பல இலக்கியங்களில் பயின்று வருவது உளங்கொளத் தக்கது.

ஔவை உண்ட நெல்லிக்கனிபோல

4. 10 அதிகன் ஔவைக்கீந்த நெல்லிக்கனி பற்றிச் சிறுபாணாற்றுப்படையும், புறநானூறும் புகழ்ந்து பேசுகின்றன.

............மால்வரைக்
கமழ் பூஞ்சாரல் கவினிய நெல்லி
அமிழ்து விளைதீம்கனி ஔவைக்கு ஈந்த
உரவுச் சினம் கனலும் ஒளிதிகழ் நெடுவேல்
அரவக் கடல்தானை அதிகனும்...[10]

என்று சிறுபாணாற்றுப்படையும்,

நீயே தொல் நிலைப்
பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீம்கனி குறியாது
ஆதல் நின் அகத் தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந்தனையே.[11]

எனப் புறநானூறும் அதிகனீந்த நெல்லிக்கனியைப் பாராட்டிப் புகழ்கின்றன.

4. 11 பண்டைத் தமிழிலக்கியங்களில் பெரிதும் உளம் தோய்ந்த பரிமேலழகரோ இச் செய்தியை வள்ளுவரின் கருத்து விளக்கத்திற்கு உவமையாக்கி உரைக்கு எழில் கூட்டுகின்றார்.

இனிய உளவாக இன்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று (குறள் 100)

என்னும் குறட்பாவின் விளக்க உரையில் 'இனியகனிகள் என்பது ஔவை உண்ட நெல்லிக்கனி போல அமிழ்தானவற்றை' என்பர். இவ்வுவமையால் கருத்துத் தெளிவு பெறுவதோடன்றி வரலாற்றுச் செய்தியையும் அறிய முடிகிறது.

காப்பியச் செய்தி உவமைகள்

5. 1 காப்பியங்களும், காப்பியச் செய்திகளும் பரிமேலழகரின் உரை விளக்கத்திற்குப் பெரிதும் துணை நிற்கின்றன. சிலம்பும், சிந்தாமணியும் இவர்தம் உள்ளத்தை ஈர்த்தவை என்பதனை இந் நூல்களிலிருந்து அவர் எடுத்துக்காட்டும் மேற்கோள்கள் இனிதுணர்த்தும்.

---

10. சிறுபாணாற்றுப்படை, 99-103.
11. புறநானூறு, 91.

காப்பியங்களுள்ளும் அவர் உரையில் மிகுதியாக இடம்பெற்றது சிந்தா மணிக் காப்பியமே. சமணக் காப்பியத்தில் உள்ளம் ஒன்றிய வைணவ உரைகாரர் பரிமேலழகர்.

### கட்டியங்காரன் போல

5. 2 காப்பியமாந்தன் ஒருவனின் இயல்பை வள்ளுவரின் குறட்பா விளக்கத்திற்கு உவமையாக்குகின்ருர் பரிமேலழகர். எல்லாவகை யாலும் ஆராய்ந்து தெளிந்தபிறகும் செயல் வகையால் வேறுபடு கின்ற மக்களும் இவ்வுலகில் உண்டு என்பதனை வள்ளுவர்,

> எனைவகையான் தேறியக் கண்ணும் வினைவகையான்
> வேருகும் மாந்தர் பலர் (குறள் 514)

என்னும் குறட்பாவால் கூறுவர்.

5. 3 தன்னையே நம்பிய மன்னன் சச்சந்தனைக் காலம் வந்த பொழுது கொன்று ஆட்சியைத் தனதாக்கிக் கொண்ட 'வினைவகை யால் வேருகிய' பண்பு பெற்ற கட்டியங்காரனை 'வேருகும் மாந் தருக்கு' உவமையாக்குகின்ருர் பரிமேலழகர்.

> "கட்டியங்காரன் போல அரசவின்பத்தினை வெஃகி விகாரப் படுவதல்லது அதனைக் குற்றமென்ருெழிந்து, தம் இயல்பில் நிற்பார் அரியராகலின் 'வேருகுமாந்தர் பலர்' என்ருர்"

என்பது பரிமேலழகர் உரை.

கட்டியங் காரனின் உள இயல்பினை உவமை விளக்கத்திற்குப் பயன்படுத்தும் பரிமேலழகரின் உரைநயம் - உவமைநயம் பெரிதும் எண்ணி மகிழ்தற்குரியதாம்.

### சமய — புராணச் செய்தி உவமைகள்

6. 1 கருத்து விளக்கத்திற்காக உரைகாரர்கள் சமயக் கருத்து களையும் கதைகளையும் கூறி விளக்குதலும் உண்டு. திருக்குறள் பரிதி யார் உரையில் இத்தகைய சமயக் கருத்துகளும், கதைகளும் நிறைய வந்துள்ளன.[12] பரிமேலழகரும் ஈரிடங்களில் சமயக் கருத்துப் பொதிந் துள்ள உவமைகளை எடுத்தாள்கின்ருர்.

### திரிபுரம் போல

6. 2 தவமுடையோர் சினந்தால் அரண், படை, பொருள், நட்பு முதலிய காப்புகளைப் பெற்றிருந்தாலும் அவரை எதிர்த்தோர் அழிந்து விடுவர் என்பர் வள்ளுவர்.

---

12. குறள், (பரிதியார் உரை) 2, 5, 8, 296, 310, 346, 388 முதலியன.

இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின் (குறள் 900)

என்பது அக் குறட்பா.

இதன் விளக்கவுரையில் பரிமேலழகர் சிவபிரானது ஆற்றலால் மும்மதிலும் கொண்ட திரிபுரம் அழிந்த செய்தியினை உவமையாக்கி விளக்குவர்.

"அவையெல்லாம் வெகுண்டவரது ஆற்றலால் திரிபுரம்போல அழிந்துவிடுமாகலின் 'உய்யார்' என்றார்"

என்பது பரிமேலழகர் கூற்று. இங்குத் திரிபுரம்போல என்ற புராணக் கருத்து உவமை விளக்கத்திற்குப் பயன்படுவதைக் காணமுடியும்.

இந்திரன் போல

6. 3. பிறனில் விழையாமை அதிகாரத்தில்,

எனைத்துணையர் ஆயினும் என்னாம் தினைத்துணையும்
தேரான் பிறனில் புகல் (குறள் 144)

என்னும் குறட்பாவின் விளக்கவுரையில் எல்லாப் பெருமையுமிழந்த இந்திரனை உவமையாக்கிப் பரிமேலழகர் நயமுற விளக்குவர்.

எத்துணைப் பெருமையுடையவனானாலும் பிறனில் விழைந்தவன் விரைவில் சிறுமையடைவான் என்பது திண்ணம். சமய புராணக் கருத்துகளின்படி மிக உயர்ந்த பதவி இந்திர பதவி என்பர். அப் பெருமையினையே இழந்த இந்திரனை இதற்குச் சான்றுகாட்டி,

"இந்திரன்போல எல்லாப் பெருமையும் இழந்து சிறுமை யெய்தல் நோக்கி 'என்னாம்' என்றார்"

என்று கூறி விளக்குவர் பரிமேலழகர்.

பிறர் மனையினை விழைந்த இந்திரனின் இறுதிநிலையினைச் - சிறுமை நிலையினை உவமையாக்கி, வள்ளுவர் கூறவந்த கருத்தை உள்ளத்தில் தெற்றெனப் பதிக்கின்றார் பரிமேலழகர்.

கருத்து உவமைகள்

7.1. கருத்துக்குக் கருத்து வகையாலே உவமை கூறுவதும் ஒரு வகை மரபு. இருவேறு கருத்துகளை ஒருங்கிணைத்தும் ஒப்பிட்டும் காட்டித் தாம் கூற விழைந்த கருத்துக்கு வலிவையும் பொலிவையும் தருகின்றார் பரிமேலழகர். அவற்றுள் ஒரு சிலவற்றை ஈண்டுக் காண் போம்.

மாண்பும் மாசும்

7.2 உயர்ந்த பண்பாளனிடத்துள்ள சிறுகுறையும் பெரிதாகத் தோன்றும். வெண்மையான ஆடையில்தானே மாசும் தெளிவாகத் தெரியும். இக் கருத்தினைப் பரிமேலழகர் உவமையாக்கி விளக்குவர். 'இரந்து கேட்கத்தக்கவரைக் கண்டால் அவரிடம் இரக்க வேண்டும். அவர் இல்லையென்று ஒளிப்பாரானால் அது அவர்க்குப் பழி; தமக்குப் பழியன்று' என்பர் வள்ளுவர். பரிமேலழகர் இதனை,

> 'தூ வெள்ளறுவைக்கண் மாசுபோல அவர்கட்
> கடிதுசேறலின் அவர் பழி' (குறள் 1051)

என்னும் உவமைவழி விளக்குவர்.

மடியும் நெருப்பும்

7.3 மடியின் தியது பிறிதில்லை ஆதலால் மடியை மடியாகவே கருதி ஒழுக வேண்டும் என்று குறட்பா கூறும். இக் கருத்துக்கு இணையாக வேறொரு கருத்தினைக் கூறி உவமை விளக்கம் தருவர் பரிமேலழகர்.

> "நெருப்பிற் கொடியது பிறிதின்மை பற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக என்றாற் போல, மடியின்தியது பிறிதின்மை பற்றி பின்னும் அப்பெயர்தன்னானே கூறினர்."
>
> (குறள் 602)

என்பது பரிமேலழகரின் உவமை—உரை விளக்கமாகும்.

கடல்நடுவண் உடைந்தகலம்—முதலியன

7.4 அரணாகிய காப்புப் பெருமையினை இழந்தால் கடல்நடுவண் உடைகலத்தார் போன்று (741) ஏமங்காணாது இறுவர் என்றும், பெரியார் துணையில்லாத காவலற்ற அரசன் 'பாகனில்லாத யானை போல' (448) நெறியல்லா நெறிச் சென்று கெடும் என்றும் கருத்துவமைகள் தந்து விளக்குவர். குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவனுக்கு இணையாக அறிவினை ஒப்பிட்டுக் காட்டுவர்.

> 'குதிரையை நிலமறிந்து செலுத்தும் வாதுவன்போல் வேருக்கி மனத்தைப் புலமறிந்து செலுத்துவது அறிவு'
>
> (குறள்422)

கண்ணோட்டமில்லாத அரசனிடத்து வாழ்வது புலியை அடைந்த புல்வாயினம் போல (571) அச்ச வாழ்வினது என்பர்.

7.5 இங்ஙனம் கருத்தினை விளக்குதற்கு ஏற்ற இணையான கருத்து களைத்தம் சிந்தனையாற்றலால் பெய்து எளிமையாக விளக்குவது இவருடைய உரையியல்புகளுள் ஒன்றாகத் திகழ்கிறது.

*முடிவுரை*

8.1 உவமையே ஒருவரின் நுண்திறனைக் காட்டும் அளவுகோல் எனலாம். அவ்வகையில் பரிமேலழகர் நுட்பமாகக் கூறிய உவமைகள் பொருளை விளக்குவதுமட்டுமன்றி அந்தப் பொருள்களை அப்படியே நம்முடைய மனத்தில் படைத்து விடுகின்றன. பரிமேலழகர் பயன் படுத்திய உவமைகளைத் தொகுத்துப் பார்க்கும்போது (காண்க— இணைப்பு) அவருடைய நுண்ணறிவின் நுட்பமும் இலக்கிய ஆய்வின் திட்பமும் இனிது புலனாகின்றன. நாட்டுப் பழமொழியாயினும் இலக்கிய மரபுத் தொடராயினும் ஏற்றவகையில் அவருடைய உரை யில் இணைந்தும் இழைந்தும் காணப்படுவதை இவ்வுவமைகள் நன்கு புலப்படுத்துகின்றன. கற்பனைவளம், கருத்துவளம், படைப்போர் காலத்துப் பயின்ற பொருள்களின் தன்மை, பயன், பழக்கவழக்கங்கள், பண்பு, வழிவழி வந்த மரபு, மரபுத் தொடர்கள் முதலியன இவருடைய உவமை விளக்கத்தால் நன்கு புலனாகின்றன எனலாம். சுருங்கக் கூறின் பரிமேலழகரின் உவமை விளக்கத்தால் வள்ளுவர் உணர்த்த விழைந்த கருத்து மேலும் வலிவும், இனிமையும் தெளிவும் செறிவும் பெற்றுக் கற்பார்க்குப் பேரின்பம் நல்குகிறது என்பது வெள்ளிடை மலை.

***இணைப்பு—1***

## பரிமேலழகர் உவமை

(அகரநிரல்)

| உவமை | பொருள் | குறள் உரை |
|---|---|---|
| இந்திரன்போல | பிறனில் விழைந்தான் அடையும் சிறுமை | 144 |
| ஏரலெழுத்துப் போல | கல்லாதான் ஒட்பம் | 404 |
| ஒருவர் கூறை எழுவர் உடுத்து என்றாற்போல | 'ஒருநாள் எழுநாள் போற் செல்லும்' என்பதற்கான மேற் கோள் உவமைச்சான்று | 1269 |
| ஔவை உண்ட நெல்லிக் கனிபோல | இனிய காய்கள் | 100 |

| உவமை | பொருள் | குறள் உரை |
|---|---|---|
| கட்டியங்காரன் போல | வினைவகையால் வேறுகும் மாந்தர் | 514 |
| கடல் நடுவண் உடை கலத்தார் போன்று ஏமங்காணுது இறுவர் | அரணை இழந்தவர் அழிதல் | 741 |
| கடன் கொண்டான் தோன் றக் கடன் தோன்றுமாறு போல | அரிய பிழைகள் செய்தவனைக் காணுந்தோறும் அப் பிழைகள் நினைவுக்கு வருதல் | 693 |
| கயப்பூப்போல வேறு படாது கோட்டுப்பூப்போல ஒருநிலை | நிலையான நட்புணர்வு உடையார் | 425 |
| கரும்பு அயிறற்குக் கூலி போல | தானின்புறுதற்கு உலகு இன்புறு தல் | 399 |
| காஞ்சிரங்காய் போல நஞ் சாவனவற்றை | இன்னுத காய்கள் | 100 |
| காட்டுத்தீ முன்னர் பஞ்சுத்துய்போலும் | ஞான யோகத்தின் முன்னர் காமம், வெகுளி, மயக்கம் மூன்றும் கெடல் | 360 |
| குதிரையை நிலமறிந்து செலுத்தும்வாதுவன்போல | மனத்தைப் புலமறிந்து செலுத் தும் அறிவு | 422 |
| சேர சோழ பாண்டியர் போல | தொன்றுதொட்டு வருகின்ற பழங்குடி | 955 |
| திரிபுரம் போல | தவமுடையோரின் சினத்திற்கு அரணுடையோரும் அழிதல் | 900 |
| தூவெள்ளறுவைக்கண் மாசு போல | ஈபவர் ஈதலில் குறைகாட்டின் அவரிடத்துச் சேரும் பழி | 1051 |
| நெருப்பிற் கொடியது பிறி தின்மை பற்றி நெருப்பை நெருப்பாகவே கருதுக என்றூற்போல | மடியை மடியாகவே கருதுதல் | 602 |

| உவமை | பொருள் | குறள் உரை |
|---|---|---|
| பசுமட்கலத்துள் நீர்போல செய்தானையுங் கொண்டு இறத்தல் | தீயவழியில் தேடிய பொருள் ஈட்டியவனோடும் சேர்ந்தழிதல் | 755 |
| பாகனில்லாத யானைபோல நெறியல்லா நெறிச்சென்று கெடுதல் | பெரியாரைத் துணைக்கொள்ளாத மன்னனும் அவ்வாறே கெடுதல் | 448 |
| புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி என்புழிப் போல | நூற்பொருளறிவில்லாத கல்லாதவர், அறிஞர் அவையில் ஒரு பொருள் குறித்துப் பேசுதல் | 401 |
| புலியை அடைந்த புல்வாயினம் போல | கண்ணோட்டமில்லாதவரிடத்து வாழும் குடிமக்கள் | 571 |
| மது மறைந்துண்டோர் மகிழ்ச்சி போல | உள்ளத்துள்ளே மகிழ்தல் | 1099 |
| மழைத்துளி போல | கேள்வியறிவு சிறிது சிறிதாகச் சேர்ந்து வளர்தல் | 416 |
| விறகுபெற்ற தழல்போல் | மனம் பொருள்கள்மேல் செல்லுதல் | 343 |
| வினைகள் போல உயிரின்கட் கிடந்து | கல்வியும் உயிர் செல்லுமிடத்துச் செல்லுதல் | 398 |
| வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமாறு போல | அறிவிலாருடன் உள்ள தொடர்பு சேர்ந்தாரையும் அழித்தல் | 797 |

—

# 4. டாக்டர் மு. வ. அவர்களின் 'தங்கைக்கு'—ஓர் ஆய்வு

*டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,*

*தமிழ்த் துணைப்பேராசிரியர், சென்னைப் பல்கலைக்கழகம்.*

டாக்டர் மு. வ. அவர்கள் நல்ல தூய சிந்தனையாளர். அவர் எழுதிய நூல்களைப் படிப்போர் அவர் அந் நூல்களில் தந்துள்ள கருத்துகளை ஏற்றுக்கொள்ளும் வண்ணம் புதிய சிந்தனைகளை அவர்கள் முன்வைப்பார். ஆரவாரமற்ற அமைதி நடை. நுணுகி ஆராயும் மனம். எளிய தூய அற வாழ்வையே எழுத்தில் வற்புறுத்தும் திறம். தமிழ், தமிழர், தமிழ்நாடு எனும் துடிப்பு அவர் எழுத்துகளில் எங்கும் காணலாம். காந்திய நெறிகளைப் போற்றி நிற்கும் போக்கும், தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்கள் தம் வாழ்வில், எழுத்தில் காட்டிய எளிமையும் பொதுமையும் இவர் வாழ்விலும் படிந்திருந்தன.

மொழி, எண்ணங்களை வெளிப்படுத்தும் ஒரு கருவியாகும் (Language is the vehicle of thoughts). கடிதங்கள் வாயிலாக ஒருவர் தம் மனத்தில் முகிழ்க்கும் எண்ணங்களை மற்றவர்க்குப் புலப்படுத்தும் போக்கு தொன்றுதொட்டே இருந்து வருவது ஆகும். நேரு, மறைமலையடிகளார், சினிவாச சாஸ்திரி, அறிஞர் அண்ணா முதலானோர் மகளுக்கோ, தம்பிக்கோ என்று தாம் கூறவந்த கருத்துக்களை அவர்களுக்குக் கூறுவது போன்று சமுதாயத்திற்கெனக் கடித இலக்கிய வாயிலாகப் புலப்படுத்தினர்.

கடித இலக்கியங்களாக டாக்டர் மு. வ. அவர்கள் படைத்த நூல்கள் மொத்தம் ஐந்தாகும். இத் துறையில் முதலாவதாக அவர் எழுதி வெளிவந்த நூல் 'அன்னைக்கு' என்பதாகும். இந்நூல் 1948 ஆம் ஆண்டு வெளிவந்தது. இந்நூலில் எட்டு மடல்கள் மலர்ந்துள்ளன. அடுத்து, 1949ஆம் ஆண்டில் வெளிவந்த 'நண்பர்க்கு' எனும் நூலில் ஒன்பது மடல்களும், 1949ஆம் ஆண்டில் வெளிவந்த 'தம்பிக்கு' எனும் நூலில் எட்டு மடல்களும், 1950ஆம் ஆண்டில் வெளிவந்த 'தங்கைக்கு' எனும் நூலில் எட்டு மடல்களும், அதே ஆண்டில் வெளிவந்த 'யான் கண்ட இலங்கை' எனும் நூலில் ஐந்து மடல்களும் அமைந்துள்ளன.

டாக்டர் மு. வ. அவர்கள் தம் டாக்டர் பட்ட ஆய்வேட்டினை 1948ஆம் ஆண்டு ஜனவரி 30ஆம் நாள் சென்னைப் பல்கலைக்கழகத்தில் சேர்ப்பித்தார்கள். அன்று சோர்வோடு வந்து வீட்டில் மாலையில் எந்த மின் விளக்குகளையும் போடாமல் ஓய்வு எடுத்துக்கொண்டிருக்கும்பொழுது, அவர்தம் வாழ்வில் விரும்பிப் பின்பற்றிய அண்ணல் காந்தியார் அவர்கள் டெல்லியில் ஒரு வழிபாட்டுக் கூட்டத்தில் சுடப்பட்டு மறைவெய்தினர் என்பதனைக் கேட்டுத் திடுக்கிட்டார். இந்த நிகழ்ச்சி அவர் மனத்தில் ஆழப் பாய்ந்தது. அவர்தம் படிப்பறையில் (Study-Room), காந்தியார் குண்டுபட்டு இறந்து பொது மக்கள் பார்வைக்கு அவர் திருவுடலம் வைக்கப்பட்டிருந்த நிலையில் செய்தித்தாளில் வெளி வந்த அப் படத்திற்குக்கண்ணாடிச் சட்டமிட்டு வைத்திருந்ததனைப் பார்த்த நான், "திடுக்கிடு விளைவிக்கும் இப்படம் ஏன்?" என்று ஒரு முறை கேட்டேன். "அறம் வளர்த்த, பொதுநலம் பேணிய நாட்டின் தந்தைக்கே இந்நிலை. எனவே, வாழ்வில் ஒவ்வொருவரும் அயராது தம் வாழ்நாளின் ஒவ்வொரு நாளிலும் கடமையுணர்வுடன் தாம் ஏற்ற பணிகளை இனிதேயாற்றி வர வேண்டும் என்பதனை அப் படம் தமக்கு நினைவூட்டிக் கொண்டிருக்கிறது" என்று மறுமொழி இறுத்தார்.

அதே ஆண்டில் கடித இலக்கியத் தொடர் எழுதத் தொடங்கினர். அவர் எழுதிய நூல்களில் இதுகாறும் எட்டு லட்சம் படிகளுக்குமேல் விற்பனையாகியுள்ள 'திருக்குறள் தெளிவுரை' யினையடுத்து, அதிகப் படிகள் விற்றுள்ளவை அவர் கடித இலக்கிய நூல்களே. இதனை அவரே குறிப்பிட்டு நான் கேட்டிருக்கிறேன். 'சின்னஞ்சிறு நூல்கள்; விலை மலிவு; திருமணத்திற்கு அன்பளிப்பாக வழங்க ஏற்ற நூல்கள்' என்னுந் தகுதிகளும், அந் நூல்களில் இடம் பெற்றிருக்கும் நல்ல வாழ்வியற் கருத்துகளும் இந் நிலைக்குக் காரணங்களாக அமையலாம். மேலும் அவரின்கீழ் டாக்டர் பட்ட ஆய்வு செய்த மாணவர் கவிஞர் திரு. மா. செல்வராசன் அவர்கள் சென்னைப் பல்கலைக் கழக அண்மைக் கால வெளியீடான 'இந்திய விடுதலையும் தமிழ் இலக்கியமும்' எனும் கருத்தரங்கக் கட்டுரை நூலின்கண் அமைந்துள்ள 'டாக்டர் மு. வ. வின் கடிதங்கள்' எனும் தம் கட்டுரையொன்றில் "உலகளாவிய தலைசிறந்த சிந்தனையாளர் என மு. வ. வை உறுதிப்படுத்துகிற அதே நேரத்தில் தமிழினம், தமிழ்மொழி, தமிழ்நாடு என்ற மூன்று பெருமிதங்களையும் துறக்க விரும்பாதவர் அவர் என்பதையும் உரைத்தாக வேண்டும். அந்த உணர்ச்சிகள் இந்த ஐந்து நூல்களிலும் தலைசிறந்து விளங்குகின்றன" என்று குறிப்பிட்டுள்ளார்.[1] ஆம்! இது உண்மையே! இந் நூல்களைப் படிக்கும்பொழுது எவரும் 'நாம் தமிழர்; நம் மொழி தமிழ்; நம் தாயகம் தமிழ்நாடு' என்ற பெருமித உணர்ச்சியினைப் பெறுவர் என்பது திண்ணம்.

இனி, அவர் எழுதி 1950ஆம் ஆண்டில் வெளிவந்துள்ள 'தங்கைக்கு' எனும் நூலே, அவர்தம் கடித இலக்கிய வரிசை நூல்களில் முடிமணி

1. பக்கம்—263.

யான நூலாக யான் கருதுவதனுல், முதலாவதாக என் ஆய்வினுக்கு அந் நூலினை எடுத்துக்கொள்ள முன்வந்தேன். அவர் எழுதிய நூல்களில் எந் நூலினை எவரொருவர் படிக்காமற் போனுலும், இந் நூலினைப் படித்துப் பார்க்க வேண்டும் என்றும் கூறுவேன். திருமணம் ஆன ஒரு பெண், தன் வாழ்க்கையில் வழுக்கி விழாமல், தன் வாழ்வை வளப்படுத்தி வாழ வகைசெய்யும் முறையில் இந் நூல் அழகுற அமைந்து பொலிகின்றது.

இனி, நூலின்கண் நுழைந்து, நூலுள் பொதுளும் நுண்மாண் நுழைபுலக் கருத்துகளைக் காண்போமாக.

### நூலின் நோக்கம் — முன்னுரை — நூலின் அமைப்பு

'அன்புள்ள தங்கை' என்று தொடங்கி, 'உன் அன்புள்ள அண்ணன் வளவன்' என்று நூலில் அமைந்துள்ள எட்டு மடல்களும் முடிகின்றன. 80 பக்கங்கள் கொண்ட இந் நூல் முழுதும் 'வையத்துள் வாழ்வாங்கு வாழ' மகளிர் போற்றிப் பின்பற்ற வேண்டிய நடைமுறைகள் யாவை என்பது நன்கு உணர்த்தப்படுகின்றது. நேருக்கு நேர் நின்று உணர்ச்சியுடன் பேசிக் கொள்வது போன்று இக் கடிதங்கள் அமைந்துள்ளன.

### இந் நூலில் இடம்பெறும் அல்லது குறிப்பிடப்பெறும் மாந்தர்

காந்தியடிகளும் கஸ்தூரிபா அம்மையாரும் பலவிடங்களிலும் குறிப்பிடப் பெறுகிருர்கள்.[2] மற்றும் குறிப்பிடப்பெறுவோர் குயூரி அம்மையார்,[3] பக்கத்துத்தெரு வழக்கறிஞர் மகள் கனகா,[4] எச். ஜி. வெல்ஸ்ஸின் மனைவி[5], நண்பர் அருளப்பர்[6], நண்பர் முருகையா[7], தேவசுந்தரி[8], தேவசுந்தரியின் தமக்கை[9], நண்பர் அருளப்பரின் தம்பி[10], நண்பன் ஒருவன்[11], அண்ணிக்குத் தெரிந்த மனைவி[12] முதலியவர்களோடு 'ஆ' என்று முதல் எழுத்தால் குறிக்கப்பெற்ற ஒரு பெண்ணும் இடம் பெறுகின்றனர்.[13] இவர்களன்றி அண்ணியும்[14] பெரியம்மாவும்[15] அடிக்கடி குறிப்பிடப்பெறுகின்றனர்.

---

2. பக்கங்கள்—7, 34, 75, 76 & 78.
3. பக்கம்—7.
4. பக்கம்—13.
5. பக்கம்—17.
6. பக்கம்—17.
7. பக்கம்—31.
8. பக்கம்—31, 32.
9. பக். 48.
10. பக். 62.
11. பக். 68.
12. பக். 79, 80.
13. பக். 41.
14. பக். 55, 56, 79.
15. பக். 54.

*பெண் எவ்வாறு இருக்க வேண்டும்?*

"இளமையிலிருந்தே நீ அறிவும் திறமையும் அன்பும் பணிவும் உள்ள பெண்ணாக விளங்கியதைக் கண்டிருக்கிறேன் அல்லவா?"[16]

"பிறரிடம் கொள்ளும் விருப்பு வெறுப்புக்களில் பிடிவாதம் காட்டாதே. இதில் பிடிவாதம் பெருந்தீங்கு உண்டாக்கும். 'பெண்கள் பிடிவாதமானவர்கள்; நினைத்ததை முடிக்காமல் விடமாட்டார்கள்' என்று பழிச்சொல் இருக்கிறது. அதை மாற்றிவிடு. அன்புக்காக விட்டுக்கொடுப்பவர்கள் பெண்கள் என்பதை உன் வாழ்வில் புலப்படுத்து."[17]

காலத்திற்கேற்பப் புதிய நோக்கில் பெண்களைப் பார்த்து, பழமையிற் கொள்ள வேண்டியனவற்றைக் கொண்டு, புதுமையில் போற்றி நிற்க வேண்டுவனவற்றையும் டாக்டர் மு. வ. அவர்கள் விடாது குறிப்பிடுகின்றார் என்பதனை நூலின் பலவிடங்களிலும் காணலாம்.

*இல்வாழ்க்கை*

கணவன் மனைவியர் இணைந்துவாழும் இல்வாழ்க்கை குறித்து டாக்டர் மு. வ. அவர்கள் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்:

"இல்வாழ்க்கை என்பது முன்காலத்தில் ஒரே பொருளை விற்கும் வெல்ல மண்டிபோல் இருந்தது. நாகரிகம் பலவகையில் கடமைகளைப் பெருக்கியுள்ள இந்தக் காலத்து இல்வாழ்க்கை பலசரக்குக் கடைபோல் ஆகிவிட்டது. பல பொருள்களையும் கவனித்து விற்கும் திறமை இல்லாவிட்டால் பலசரக்குக் கடையில் வாழ முடியுமா? நாம் பலருடைய வாழ்க்கையில் கலந்திருக்கிறோம்; பலர் நம்முடைய வாழ்க்கையில் கலந்திருக்கிறார்கள். ஆகையால் கடமைகள் பலவாகிவிட்டன. இந்தக் காலத்தில் ஒரு இன்பத்தையோ ஒரு குறையையோ எண்ணித் தலைமேல் கை வைத்து உட்கார்ந்து விட்டால், யாரும் முன்னேற முடியாது. அவர்களை நம்பியவர்களும் கடைத்தேற முடியாது. நன்மை தீமை, இன்பம் துன்பம், குணம் குற்றம், நிறை குறை எல்லாவற்றையும் பார்த்துக்கொண்டு, எதற்கும் தயங்கி நிற்காமல் ஓடுகின்ற கடிகாரம் போல் கடமைகளை அஞ்சாமல் செய்கின்றவர்கள்தான் இந்தக் காலத்தில் தலைமைப் பதவிக்குத் தக்கவர்கள். குடும்பத் தலைவியும் இப்படி இருந்தால்தான் வாழ்வு நன்றாக நடக்கும். யாராவது தன்னைக் குறை கூறினார்கள் என்றால், அதையே எந்நேரமும் எண்ணிக்கொண்டிருப்பது, யாராவது நோயால் வருந்துகிறார்கள் என்றால், எந்நேரமும் அவர்களையே நினைந்து உருகுவது; இவ்வாறு வாழ்வது கூடாது."[18]

---

16. பக். 5.
17. பக். 26.
18. பக். 54, 55.

“பிறர் உள்ளம் அறிந்து நடப்பது ஓர் அரிய கலை. பெண்ணுக்கு அது கட்டாயம் வேண்டும் என்று நான் எண்ணும்போது, அந்தக் கலையால் வாழ்க்கையில் வெற்றிபெற்ற சிலர் நினைவுக்கு வருகிறார்கள்[19].”......என்று கூறி,

“இந்த அறிவுரைக்கும் ஓர் எல்லை உண்டு, அதை மறந்துவிடாதே” என எச்சரித்துப் பின்வருமாறு கூறுகின்றார் :

“அதாவது, உள்ளம் அறிந்தொழுகும்போது, ஒரு துறையில் கணவன் விருப்பத்திற்கு முற்றிலும் இணங்கி நடப்பது குடும்பத்திற்குத் தீமையாக இருந்தால், அப்போது இந்த அறிவுரையைக் கடந்து வாழவேண்டும். கணவனுக்குக் கத்தரிக்காய் விருப்பம் என்றால், அதையே கறியாக்கலாம் ; கத்தரிக்காய் வறுவல் விருப்பம் என்றால் அதை அவ்வாறே செய்யலாம். ஆனால் அதுவே அவருடைய உடல் நலத்திற்கு ஆகாததாக இருந்தால், அப்போதும் அதைச் செய்யலாமா? கூடாது. உணவைப்போலவே, மற்றத் துறைகளிலும் கணவனுக்கு இயைந்து நடப்பது நல்லது. ஆனால் குதிரைப் பந்தயம் அவருக்கு விருப்பமானதாக இருந்தால் என்ன செய்வது? கிண்டி விளையாட்டால் உள்ளதெல்லாம் இழந்து ஒட்டாண்டியாகிக் குடும்பம் அழிவதைவிட, அவருடைய மனத்தை மகிழ்விக்காமல் நின்று வெறுப்பை தேடிக் கொள்வதே நல்லது அல்லவா? அப்போதும் அவரைக் கிண்டிக்கு அனுப்பாதபடி அன்பால் அவர் மனத்தை மாற்றுதல் நல்லது; முடியாதபோது அவருடைய வெறுப்பை வரவேற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றுவது கடமை அல்லவா? இல்வாழ்க்கைக்காகப் பொறுமை; ஆனால் அந்தப் பொறுமையால் இல்வாழ்க்கை கெடுவதானால்—? உடம்புக்காக உணவு; அந்த உணவால் உடம்பு அழிவதானால், பட்டினியைப் போற்ற வேண்டாமா?”.[20]

பெண்ணின் வளர்ச்சிப் பெருமை

“ஒரு பெண் பெற்றோரின் மகளாக உள்ள வரையில் உரிமை மிகுந்தவளாக அரசிளங்குமரியாகவே வாழ்கிறாள். கணவனின் மனைவியாக வாழத் தொடங்கியதும் அரசியாகவும் அடிமையாகவும் மாறி மாறி வாழ்வதுபோல் விளங்குகிறாள். தான் பெற்ற மக்களின் தாயாக வாழும்போது எல்லா உரிமைகளையும் உதறிவிட்டு அன்புருவாக உயர்கிறாள். பிடிவாதம் செய்யும் ஒரு பெண்ணை இயற்கை இப்படி மாற்றி மாற்றித் தியாகத்தின் திருவுருவாகச் செய்கிறது.”[21]

பெண்ணின் படிப்படியான வாழ்வியல் வளர்ச்சியினை இவ்வாறு திறம்படக் குறிப்பிடுகின்றார்.

---

19. பக். 65.
20. பக்கங்கள் : 65, 66.
21. பக்கம் : 50.

### கற்புபற்றிய கருத்து

"வாழ்நாள் வரை மாருத அன்புடன் ஒருநெறியாக வாழும் வாழ்க்கையைத்தான் முன்னேர்கள் கற்பு என்று சொன்னர்கள்".[22]

'திட்ப நுட்பம் செறிந்தன சூத்திரம்' என்பர்.[23] கற்பின் இலக்கணம் காட்டும் இத் தொடரினை 'நூற்பா'வாகக் கொள்ளலா மன்றோ?

### முன்னேர் கண்ட நன்னெறி

இல்வாழ்க்கை இனிதே நடைபெறுதற்கு முன்னேர் வகுத்துச் சென்றுள்ள வாழ்வியல் அமைப்பினைப் பின்வருமாறு வகையுறப் போற்றியுள்ளார் டாக்டர் மு. வ. அவர்கள்.

"அந்தக் கால நிலையை ஒட்டி இல்வாழ்க்கை சீராய் நடை பெறுவதற்காக முன்னேர் சில திட்டங்கள் அமைத்திருந்தனர். ஆண் உடல்வலி மிகுந்தவன்; ஆகையால் அவன் வெளியுலகில் அலைந்து பொருள் தேடுக என்று அமைத்தனர். பெண் உடல்வலி குறைந்தவள்; ஆக்க வேலையில் ஆர்வம் நிறைந்தவள்; ஆதலால் வீட்டிலிருந்து அமைதியைக் காத்து வருக என்று அமைத்தனர். அலைவுக்கு ஏற்றது ஆண் உடல், அமைதிக்கு உரியது பெண் உடல் என்று அவர்கள் வகுத்த முறை இயற்கையோடு இயைந்த முறையாக இருந்தது. அதற்கு ஏற்றவாறே ஆண் வயதில் மூத்தவனாக இருக்குமாறும் பெண் இளையவளாக இருக்குமாறும் ஏற்படுத்தினர். இந்த ஏற்பாட்டில் தவறு காண முடியாது. இன்றைக்கும் உலகில் பெரும்பான்மையோர் இதையே போற்றி வருகின்றனர்."[24]

மேலும் அவர் குறிப்பிடுவதாவது :

"முன்னேர்களின் அறிவுரை என்ன ? உரிமைப் பேச்சுப் பேசுவதில் பயன் என்ன?".[25]

### பிரிவு வேண்டும்

"நம் நாட்டில் திருமணமான தொடக்கத்தில் மனைவி கணவனேடு இருக்கக் கூடாது என்று பிரிக்கும் வழக்கம் ஒன்று இருந்து வருகிறது. அதுவும் இவ்வகையான நன்மைக்கே என்று எண்ணுகிறேன். அறிஞர் எச். ஜி. வெல்ஸ் வாழ்க்கையில் ஒரு குறிப்பு—அவரே எழுதிய குறிப்பு—ஒன்று என் நினைவுக்கு வருகிறது. அவருடைய இரண்டாம் மனைவி ஒருமுறை வாழ்க்கையில் மிகச் சலித்தபோது, கணவருக்குச் சொல்லி அனுமதி பெற்றுத் தனியே பிரிந்து சில வாரங்கள் வாழ்ந்தாராம்.

---

22. பக்கம் : 23.
23. நன்னூல் : 18.
24. பக். 22.
25. பக்கங்கள்—23, 24.

அப்போது சென்று தங்கியிருந்த இடத்தையும் கணவருக்குத் தெரிவிக்க வில்லையாம்'',[26] என்று ஓர் அருமையான வாழ்வியல் நடப்பு உண்மை யினைக் குறிப்பிட்டு, ''அன்போடு கடமையைச் செய்தல் முதலில் இருக்க வேண்டும். அப்படி இருந்தால் மனத்தின் பேயாட்டத்திற்கு இடம் இருக்காது. தவற வாய்ப்பு நேராது; நேர்ந்தாலும் விழிப்போடு தற்காப்புத் தேடிக் கொள்ளலாம்'',[27] என்று கூறி, அன்பும் கடமை யுணர்வும் வாழ்விற்குத் தேவை என வற்புறுத்துகின்றார்.

*அறிவுரைகள்*

வாழ்க்கை வெற்றி பெறுவதற்குக் கீழ்க்காணும் அறிவுரைகளை நூற்கண் ஆங்காங்கே பொதிந்து தந்துள்ளதனைக் காணலாம் :

" திருவள்ளுவரின் அறத்துப்பால் நெறி—அதாவது, காந்தியடி களின் எளிய தூய நெறி : இதை நம்பினால் எவ்வளவோ தொல்லைகளை எளிதில் தீர்த்துக் கொள்ளலாம். தனி வாழ்க்கையைப் பொறுத்த மட்டில்தான் இதைச் சொல்கிறேன். நெறியை முழுவதுமாக நம்பா விட்டாலும், ஆடம்பரமற்ற ஆணவமற்ற அமைதியான வாழ்க்கை நல்லது என்பதையாவது நம்புவார்களானால் போதும். ஆடம்பரம், ஆணவம், ஆரவாரம் இவைதான் இந்தக் காலத்து நாகரிகத்தின் உயிர் நாடிகள். தனி வாழ்க்கையில் மனம் பண்படுவதற்கு இவைகள் தடைகள் என்பது என் கருத்து.''[28]

" தனக்கென்று மிகுதியாகப் புகழ் தேடிக் கொள்வது பொல்லாத தன்னலம்; தன்மானத்தைப் பெரிதாக எண்ணுதல் அதைவிடக் கொடிய தன்னலம். கணவன் மனைவி என்று இருவர் சேர்ந்து வாழத் தொடங் கிய பிறகு, தனியே புகழ் தேடுவதும் தனியே மானம் போற்றுவதும் தவறானவை.''[29]

"கணவன் புகழைக் கண்டு மகிழும் மனம் இல்லாத மனைவி, மனைவியின் மானத்தைத் தன் மானமாகக் கருதாத கணவன்—இவர்கள் சேர்ந்து வாழத் தகுதி உடையவர்களா ? உடம்பு, பணம் இவற்றில் சுற்றத்தாரும் அயலாரும் தலையிடுவது குறைவு. ஆனால் புகழ் மானம் ஆகிய துறைகளில் எல்லாரும் (தாய்வீட்டார், மாமி வீட்டார், நண்பர்கள் உட்பட எல்லாரும்) தலையிட்டு அவரவர்கள் பங்குக்குத் தூபம் போட்டு இல்வாழ்க்கைக்குத் தீமை செய்வதை நீ எங்கும் பார்க் கலாம். இந்தத் தொல்லைகள் இல்லாமல் அமைதியாக வாழ வழி சொல்லட்டுமா? புகழ் மானம் ஆகியவற்றையும் ஆடம்பரப் பொருள் களாகக் கருதி ஒதுக்கி எளிய வாழ்க்கையை நாடு. ஒழியட்டும் அந்த மயக்க உணர்ச்சிகள்!''[30]

---

26. பக்கங்கள் : 16, 17.
27. பக். 17.
28. பக்கங்கள் : 32, 33.
29. பக். 33.
30. பக்கங்கள்—33, 34.

*எளிய வாழ்வின் ஏற்றம்*

"எளிய வாழ்க்கை வாழ்வது சிறந்த அறம்"[31] என்றும், "பாவங் களில்பெரிய பாவம், குற்றங்களில் முதல் குற்றம் ஆடம்பர வாழ்க்கை தான்"[32] என்றும் குறிப்பிடுகின்றார். விபசாரம் கொள்ளைகொலையினும் ஆடம்பர வாழ்க்கை தீதென்பதனைக் காட்ட, "விபசாரம் கொள்ளை கொலை முதலியன ஒரு சிலரைத்தான் அழிக்கின்றன. ஆனால் ஒரு சிலருடைய ஆடம்பர வாழ்க்கை எத்தனையோ ஏழை மக்களின் அமைதி யான வாழ்க்கையைப் பாழ்படுத்தி அல்லல் விளைக்கின்றது"[33] என்கிறார்.

*ஆசிரியர் கூற்று*

சிலவிடங்களில் ஆசிரியர் தாமே நேர்நின்று அறவுரை பகர்கிறார்.

(அ) "ஏழை மக்களின் வாழ்க்கை நிலையை உயர்த்துதல், உணவு உடை தொழில் கல்வி ஆகிய அடிப்படைத் தேவைகளை எல்லோர்க்கும் அமைத்துத் தருதல் இவைகளைச் செய்யக் காலம் ஆனாலும் ஆகட்டும். போட்டிக்கும் பூசலுக்கும் குறைகளுக்கும் குற்றங்களுக்கும் வழி அமைத்துத் தருகின்ற இந்த ஆடம்பரங்களையாவது தடுக்கலாமே! இதற்கு ஒரு சட்டம் பிறப்பிக்க ஒருவர் துணிவாரானால், அவரைத்தான் நாட்டின் முதல் தொண்டர் என்று நான் போற்றுவேன்."[34]

(ஆ) "எந்த அளவிற்கு ஆடம்பர ஏணியில் ஏறி நிற்க முடியும் என்றுதான் பெண்கள் முயல்கின்றார்கள். ஆடம்பரப் போக்கு இல்லை யானால், தங்களுக்கு உலகத்தில் மதிப்பு இல்லை என்று எண்ணும் தாழ்வு மனப்பான்மை பெண்கள் பலரிடம் இயல்பாக உள்ளது. இது தான் உண்மையான பிற்போக்கு என்பது என் கருத்து."[35]

(இ) *அழகைக் காக்கும் வழிகள் :* முரட்டு உழைப்பும் முரட்டு உணவும் அழகுக்குப் பகை என்பதோடு, இயைபு இல்லாமல் உடல் பருத்து வளர்வதும் அழகுக்குப் பகை என்று கூறி, அதனைக் களைய "உழைப்பு இல்லாமல் இருக்கக்கூடாது, களைப்பு உண்டாகுமாறு உழைக்கக்கூடாது, தசைநார் திரட்சி பெறுமாறு வன்மையான பயிற்சிகள் செய்யக்கூடாது. குடலில் ஊறிப் புளிக்கும் நிலையை வளர்த்துக்கொள்ளலாகாது. மென்மையான சுவையுள்ள உணவுகளை அளவுபடுத்தி உண்ண வேண்டும். மந்தப் பொருள்களை மிகுதியாக உண்ணலாகாது"[36] என்றும் குறிப்பிட்டுள்ளார்.

---

31. பக். 34.
32. பக், 35, 36.
33. பக். 36.
34. பக். 37.
35. பக். 38.
36. பக். 40.

### ஆசிரியரின் உளநூல் நுட்பம்

ஆசிரியர் பிறர் உள்ளத்தினை ஊடுருவிக் காணும் நுட்பம் வாய்ந்தவர். நாவலாசிரியர் தாம் படைக்கும் கதை மாந்தர்தம் உள்ளத்து உணர்வுகளைத் தாமும் உற்றும் பெற்றும் நிற்க வேண்டும். தலைசிறந்த சிந்தனையாளரும், கல்வியாளரும், நாவலாசிரியருமான டாக்டர் மு. வ. அவர்கள் தம் வாழ்வில் குழந்தைகளோடு பேசி மகிழ்வதில், விளையாடுவதில் ஆர்வம் மிகக் காட்டியவர். தம் வாழ்நாளின் இறுதி நாட்களில் கூட இப்பண்பினைத் துறக்கவில்லை என்பதற்குச் சான்றுகள் பலவுண்டு. குழந்தை பற்றி எழுதும்பொழுது அவரும் குழந்தையாகி விடுவார். 'குழந்தை' என்றே ஒரு நூலும் அவர் எழுதியிருப்பதும் இவ்வுண்மையினை உணர்த்தும். 'குழந்தைமொழி' என 'மொழி வரலாறு' எனும் நூலில் அவர் அமைத்துள்ள ஒரு கட்டுரையினைக் காண்க.

பெண்கள் குழந்தைகளிடம் பழகும் முறையினைப் பின்வருமாறு குறிப்பிட்டுள்ளார் :

''குழந்தைகளுக்கு அறநூல்களைத் திணிப்பதைவிட, அறிவுரைகளைக் கூறுவதைவிட, அவர்கள் பின்பற்றத் தக்க வழியில் நாம் வாழ்வதுதான் நல்லது என்று உளநூல் தெளிந்த அறிஞர்கள் கூறுவார்கள். அறவுரைகளும் அறிவுரைகளும் வற்புறுத்தி ஊட்டும் உணவு போன்றவை; அவை நன்றாகச் செரிப்பதில்லை. பெரியோரின் நடக்கை அப்படி அல்ல; குழந்தைகள் தாமே விரும்பி உண்ணும் பழம் போன்றது அது. அது எளிதில் உள்ளத்தில் பதிந்துவிடும் என்பார்கள். ஆகவே, பெண்கள் குளிர்ந்த உள்ளத்தோடு மலர்ந்த முகத்தோடு இனிய சொற்களோடு குழந்தைகளிடம் பழகுவார்களானால், அதுவே குழந்தைகளுக்குக் கற்பிக்கும் சிறந்த கல்வியாகும். அதுவே பெரிய தொண்டு; எத்தனையோ பேரைத் திருத்தும் ஒப்பற்ற தொண்டு; பத்திரிகைகளும் கட்சிகளும் புகழ வேண்டாத அரிய தொண்டு.''[37]

### காந்தியும் கஸ்தூரிபாவும் போற்றப்பெறல்

அண்ணல் காந்தியடிகளாரிடத்தும், அன்னை கஸ்தூரிபா அவர்களிடத்தும் தாம் கொண்ட ஈடுபாட்டினை ஆசிரியர் பின்வரும் பகுதியால் புலப்படுத்துகின்றார்.

''காந்தியடிகள் இந்த நாட்டில் எவ்வளவு பெரிய போராட்டம் எத்தனை முறை நடத்தியிருக்கிறார்! வரலாற்றில் அதற்கு இணை இல்லை. ஆயினும் எவ்வளவு தெளிவும் துணிவும் அவருக்கு இருந்தன. சத்தியத்திற்காக அஹிம்ஸைக்காக நாட்டின் விடுதலையையும் பொருட்படுத்தாதிருக்கத் துணிந்த நெருக்கடிகள் பல; நாட்டின் விடுதலைக்காகத் தம் அமைதியையும் குடும்ப நன்மையையும் கைவிடத் துணிந்த நெருக்

37. பக். 59.

கடிகள் கண்டு, உடனுக்குடன் துணிந்து செயலாற்றிய வீரருள் வீரர் அவர்”[38]

“நாம் குடும்பத்தோடு பூனுவுக்குப் போயிருந்தபோது ஆகாகான் அரண்மனையை அடுத்த பூங்காவில் கஸ்தூரிபாவின் சமாதியின் அருகே இருந்து உருகியது உன் நினைவில் இருக்கும். அப்போது அப்பா அம்மாவை நோக்கிச் சொன்ன சொற்கள் நினைவில் இருக்கின்றனவா? “இந்த அம்மாவின் கணவர் காந்தியடிகள் உலகத் தலைவர். கணவரின் வழியைக் கண்மூடிப் பின்பற்றிய உத்தமி இவர். இந்த அம்மாவைப் போல் எளிய வாழ்க்கை வாழ எந்தப் பெண்ணாலும் முடியாது. கணவர் உலகத் தலைவர். உலகத் தலைவரின் மனைவி, பருத்திப் புடைவையும் சங்கு வளையலும் தாலியும் தவிர, எந்த ஆடம்பரமும் அறியாமல் வாழ்ந்துவிட்டு மறைந்தார்” என்று அப்போது அப்பா சொன்ன சொற்கள் இன்னும் என் செவியில் ஒலிக்கின்றன.”[39]

### திருவள்ளுவர் பெருமை

திருவள்ளுவரிடத்து டாக்டர் மு.வ. அவர்கள் காட்டிய பெருமதிப்பு அவர் எழுதிய “திருவள்ளுவர் அல்லது வாழ்க்கை விளக்கம்” எனும் நூலால் விளங்கும்.

“உலகமெல்லாம் போற்றும் மருத்துவர் ஒருவர் சொல்லும் அறிவுரை என்று தயங்காமல் ஏற்றுக்கொள்ள வேண்டும். அப்படி உலகம் போற்றும் மருத்துவர்—மனநோய் மருத்துவர்—திருவள்ளுவர். அவர் சொல்கிறார்: ஒப்பு அல்லாதவர்களிடத்தும் தோற்றுப் போவதே சான்றோரின் தன்மை என்கிறார். அவருடைய அறிவுரையைக் கண்மூடித் தன்மையோடு ஏற்றுக்கொள்வதில் தீமை ஒன்றும் இல்லை. பல தலைமுறைகளாக உலகம் பின்பற்றி நன்மை கண்டு நற்சான்று அளித்துப் போற்றிய முறை அது. ஆகையால் முன்னும் பின்னும் எண்ணாமல் அந்த முறையைப் போற்றுவது நல்லது.”[40]

மேலும், எண்பது பக்கங்கள் கொண்ட இந்நூலில் பின்வரும் ஏழு குறட்பாக்களின் முதல் வரி தக்க இடங்களில் எடுத்தாளப் பெற்றிருக்கக் காணலாம்.

‘அன்பின் வழிவந்த கேண்மை’[41]

‘ஊடலில் தோற்றவர் வென்றார்’[42]

‘இனிதாக முள்மரம் கொல்க’[43]

---

38. பக். 75.
39. பக். 34.
40. பக். 27.
41. பக். 8, 9.
42. பக். 19.
43. பக். 26.

'வேண்டாமை அன்ன விழுச்செல்வம்'[44]

'வேண்டின் உண்டாகத் துறக்க'[45]

'செவிகைப்பச் சொற்பொறுக்கும்'[46]

'யாகாவா ராயினும் நாகாக்க'[47]

### பழமொழிகளைக் கையாளல்

முன்னைப் பழமையையும் போற்றிப் பின்னைப் புதுமையையும் ஏற்றுக்கொண்டு வாழ்வு நடாத்தியவர் மு. வ. அவர்கள். தம் நூலில் பழமொழிகளைக் கையாண்டு தாம் கூறவந்த கருத்துகளை அரண் செய்துள்ளார். அவர் இந்நூலில் ஏழு திருக்குறள்களை எடுத்தாண்டுள்ளது போன்றே ஏழு பழமொழிகளை எடுத்தாண்டுள்ளார். அவை வருவாறு:

'புதிய துடைப்பம் நன்றாகப் பெருக்கும்'[48]

'பழகப் பழகப் பாலும் புளிக்கும்
ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்'[49]

'பூசனிக்காய் போகுமிடம் புலம் தெரியாது
கடுகு போகுமிடத்திற்குத் தடிகொண்டு திரிந்தானும்'[50]

'சுண்டைக்காய் கால் பணம் சுமைக்கூலி முக்கால் பணம்'[51]

'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்'[52]

'பொறுத்தவர் பூமி ஆள்வர்'[53]

'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை'[54]

### கண்ணகியின் நிறையும் குறையும்

இலக்கியமே வாழ்வெனக் கொண்ட மு. வ. அவர்கள் இளங்கோவடிகள் இயற்றிய சீர்சால் சிலப்பதிகாரக் காப்பியத்தில் நெஞ்சம் தோய்ந்து ஈடுபட்டவராவர். கண்ணகியின் நிறையினைப் பின்வருமாறு பாராட்டுகின்றார்:

"நீ யார் மரபில் வந்தவள் என்று எண்ணிப் பார். கணவனுடைய தவறான வாழ்க்கையைக் கூடிந்து கூறாமல், வெறுத்துப் பகைக்காமல்,

44. பக். 34.
45. பக். 38.
46. பக். 65.
47. பக். 67.
48. பக். 8.
49. பக். 15.
50. பக். 52.
51. பக். 52.
52. பக். 55.
53. பக். 65.
54. பக். 74.

பல ஆண்டுகள் பொறுத்திருந்த கண்ணகியின் மரபில் வந்தவள் நீ. கண்ணகி சில நாட்கள் பொறுக்கவில்லை; சில ஆண்டுகள் பொறுக்க வில்லை; பல ஆண்டுகள் பொறுத்த பெருமனம் படைத்தவள். கணவன் தவற்றை அவள் மறக்கவில்லை; அஞ்சி அடங்கிவிடவில்லை. பெருமனத் தோடு பொறுத்திருந்தாள். அதைக் கடிந்து கூறுவதற்கு ஒரு வாய்ப்புக் கிடைக்கும் என்று காத்திருந்தாள். கணவனே மனம் மாறி இரங்கும் நிலை வரும்வரையில் காத்திருந்தாள். அந்த நிலை வந்ததும், "போற்றா ஒழுக்கம் புரிந்தீர்" எனக் கடிந்துரைத்தாள். இத்தகைய பெருமனம் இருந்த காரணத்தால்தான், ஒரு துறவியின் உள்ளத்தில் கோயில் கொள்ள முடிந்தது; அங்கிருந்து ஒரு காவியக் கோயிலில் வாழவும் முடிந்தது."[55]

"மனித மனம் இப்படித் தியாகம் செய்பவர்களையே என்றும் விரும்பும். அது இயற்கை. எவ்வளவு உரிமை நாட்டம் உடையவனாக இருந்தாலும், ஒரு வியாபாரி தனக்கு இயைந்து நடப்பவனையே கணக்குப்பிள்ளையாக வைத்துக் கொள்ள விரும்புகிறான். எவ்வளவு முற்போக்கு உடையவனாக இருந்தாலும், ஒரு பத்திரிகை ஆசிரியன் தனக்காகத் தியாகம் செய்யக்கூடியவனையே துணையாசிரியனாக வைத் துக் கொள்ள விரும்புகிறான். எவ்வளவு சீர்திருத்தக்காரனாக இருந் தாலும், ஓர் அரசியல் தலைவன் தனக்காகச் சொந்தக் கொள்கைகளை விட்டுக் கொடுக்கக் கூடியவனையே தன் செயலாளனாக வைத்துக் கொள்ள விரும்புகிறான். இவ்வாறே ஒவ்வொரு துறையிலும் மனிதன் தனக்குத் துணையாக ஒருவனை நாடும்போது, கண்ணகி போன்ற மனம் உடையவனையே நாடுகின்றான். இந்த மனப்பான்மை என்றும் இருக் கும்; உலகம் எவ்வளவு மாறினாலும் அதன் பிறகும் இருக்கும். அதனால் அன்றும் கண்ணகியின் சிறப்பு எல்லோராலும் போற்றப் படும்."[56]

கண்ணகியின் குறையோ என ஆயும் போக்கினைப் பின்வரும் வரிகளில் காணலாம் :

"ஆகையால் வாழ வழி நாடுகின்றவர்கள் எப்போதும் விதி விலக்குகளை எடுத்துக்காட்டாகக் கொள்ளக்கூடாது. இதை எழுதும் போதே எனக்குச் சிலப்பதிகாரம் நினைவுக்கு வருகின்றது. அன்பும் இரக்கமும் அருளும் கொடையும் மிகுந்தவனாகிய கோவலனுடைய உள்ளம் இசையிலும் கூத்திலும் எவ்வளவு ஆர்வம் உடையதாக இருந்தது; இதைக் கண்ணகி உணர்ந்து அந்தக் கலைகளைத் தானும் கற்றிருந்தால், கணவனுடைய உள்ளம் கலையரசியாகிய இன்னொருத் தியை நாடாதவாறு தடுத்திருக்கக் கூடுமே என எண்ணுகிறேன்."[57]

---

55. பக். 28.
56. பக். 29.
57. பக். 63.

கருத்தை விளக்கும் திறன்

கூறவந்த கருத்தினைப் படிப்பவர் மனத்தில் பசுமரத்தாணியெனப் பதியும் வண்ணம் விளக்கமுற எடுத்து-மொழியும் உணர்த்தும் திறனில் இவர் சங்க இலக்கியங்களில் இடம்பெறும் 'தோழி' போன்று காட்சி தருகின்றார். சான்றுக்குச் சில எடுத்துக்காட்டுகள் :

''புதிதாகப் பழகும்போது பெரும்பாலோர் நன்றாகப் பழக முடியும். அதில் ஒன்றும் சிறப்பு இல்லை; திறமை இல்லை. புதிய மாணவர் ஒழுங்காக நடந்து கொள்வார். புதிய ஆசிரியர் பாடுபட்டுக் கற்றுக்கொடுப்பார். புதிய வியாபாரி நல்ல சரக்கு விற்பார். புதிய வேலைக்காரி நன்றாக உழைப்பாள். புதிய பால்காரன் நல்ல பால் தருவான். புதிய நட்பும் இனிமையாக விளங்கும். அதில் ஒரு சிறப்பும் இல்லை. இந்தப் புதுமையை எள்ளி நகையாடுவதுபோல் ஆங்கிலத்தில் ஒரு பழமொழி இருப்பது உனக்கு நன்கு தெரியும். புதிய துடைப்பம் நன்றாகப் பெருக்கும் என்னும் அந்தப் பழமொழி வேடிக்கையாக இருந்தாலும், கருத்து உடையதுதான். அதற்கு மாறாக, எவ்வளவு பழமை ஆனபோதிலும் சிறப்புக் குன்றாமல் ஒளிவிடும் வாழ்க்கைதான் நல்ல வாழ்க்கை என்று சொல்வேன். இக்காலத்துப் பலருடைய வாழ்க்கை பொன்முலாம் பூசிய பொருள்போல் தொடக்கத்தில் மட்டுமே நல்ல ஒளி வீசுகின்றது. பழமைப்பட்டுத் தேயத் தேய, ஒளி இழந்து மங்குகின்றது. உண்மையான பொன்னால் செய்யப்பட்ட பொருள் ஒரு நாளும் அப்படி ஆகாது அல்லவா? பழகப் பழக, தேயத்தேய, அது குன்றா ஒளி வீசும் அல்லவா? அதுபோல் வாழும் வாழ்க்கையே நல்லவர்களின் குறிக்கோளாக இருக்க வேண்டும்.''[58]

''உன்னைப் போன்ற ஒருத்தி வயலிலும் கரம்பிலும் காட்டிலும் மேட்டிலும் பகலெல்லாம் உழைக்கிறாள்; பொழுதுபோனதும் வீட்டுக்குத் திரும்பிச் சமைத்துத் தொல்லைப்படுகிறாள். கணவனுக்கும் மக்களுக்கும் உணவு இட்ட பிறகு எஞ்சியதை அரைவயிறு உண்கிறாள். கட்டுவதற்குப் போதுமான கந்தை இல்லை. எண்ணெய் தேடித் தலை வார நேரமும் இல்லை; காசும் இல்லை. கண்ணாடி எடுத்து முகத்தைப் பார்க்க வாய்ப்பு இல்லை. (திருமணம் ஆவதற்கு முந்திய நாழிகையில் உடைந்த கண்ணாடி ஒன்றை எடுத்துப் பார்த்து மகிழ்ந்திருப்பாள்.) அவளுக்கு எதிர்காலத்தைப் பற்றி எண்ணுவதற்கு வழி இல்லை; நிகழ்காலத்தில் எதையும் தாங்கிக்கொள்ளும் நிலை இருக்கின்றது. சுத்தம் சுகாதாரம் இவை எல்லாம் அவள் அறியாத புதுச் சொற்கள். கலை, கருத்து இவை எல்லாம் அவளுக்குக் கனவைவிட அப்பாற்பட்டவை. அவள் உன்னைப் போன்ற தமிழ்ப் பெண்தான்; பெண்தான்.''[59]

---

58. பக். 7, 8. 59. பக். 43.

"நினைத்துப்பார். நம் வீட்டில் பாத்திரங்களைத் துலக்கி வேலை செய்கிறாளே, அவளும் உன்னைப் போன்ற பெண்தான். உனக்குமேல் ஐந்து ஆறு வயது பெரியவளாக இருப்பாள். மாதம் ஏழு ரூபாய்ச் சம்பளத்திற்குத் தன் வீட்டைவிட்டு அயலார் வீட்டிற்கு வந்து உழைக்கிறாள். வைகறையில் துயிலெழுகிறாள். (வேறு எந்த நாகரிகப் பெண்களால் முடியும்?) சொந்த வீட்டு வேலைகள் சிலவற்றைச் செய்கிறாள். தன் குழந்தைகள் எழுவதற்கு முன்பே, அவைகளுக்குத் தெரியாதபடி இங்கே வருகிறாள். இங்குள்ள வேலைகளைச் செய்கிறாள். ஏதாவது உணவு கிடைக்கும் என்று அவளுடைய குழந்தைகள் அவளைத் தேடிக் கொண்டு இங்கே வருகின்றன. நம் அம்மா கொடுக்கும் பழைய சோற்றையும் காந்திப்போனதையும் கெட்டுப்போனதையும் குழந்தைகளிடம் கொடுத்து, அவைகள் உண்பதை மகிழ்ச்சியோடு பார்த்துக் கொண்டு தன் காய்ந்த வயிற்றுடன் குடிசைக்குத் திரும்புகிறாள்."[60]

"நீ பள்ளிக்கூடத்தில் மூன்றும் வகுப்பில் படித்தபோது தெருக்கோடியில் முறுக்கு வாங்கித் தின்றாயே, நினைவிருக்கிறதா? அந்தக் கிழவி நாளெல்லாம் அந்தச் சின்ன அழுக்குக் கூடையை வைத்துக் கொண்டு கிழிச்சல் கோணியின்மேல் உட்கார்ந்து 'பெரிய வியாபாரம்' தொடர்ந்து செய்கிறாள். அந்தக் காலம் முதல் இன்றுவரையில் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து செய்துவருகிறாள். கண் பார்வை மங்கி விட்டதாம். ஆனால் தொழிலை விட முடியவில்லை. ஏன், தெரியுமா? நாள்தோறும் எவ்வளவு விற்கிறாள். என்ன ஊதியம் கிடைக்கிறது, தெரியுமா? எண்ணிப் பார்த்திருக்கிறாயா? நரைத்துத் திரைத்துப் பழுத்த அந்த உடல் எங்காவது கட்டிலின் மேல் மெத்தென்ற படுக்கையில் படுத்துப் புரண்டு காலம் கழிக்காமல், வெயிலிலும் மழையிலும் காற்றிலும் பனியிலும் துன்பப்பட்டு, அரைமணி கால்மணிக்கு ஒரு முறை ஒரு சிறுவனுக்கோ சிறுமிக்கோ காலணா முறுக்கு விற்று, அதில் ஒரு பை ஊதியம் பெறப் பாடுபடுகின்றது! இவ்வாறு கிடைக்கும் சிறு ஊதியமான மூன்றணா நாலணா இல்லையானால் அந்த வற்றிய குடல் கஞ்சி இல்லாமல் பட்டினிகிடக்க வேண்டிய நிலை ஏற்படுகின்றதாம். தங்கியிருக்க நிழல் இல்லாமல், அடுப்பு மூட்ட இடம் இல்லாமல், மரத்தடியிலும் சாக்கடைக் கரைகளிலும் மானத்தோடு வாழும் தமிழ்ப் பெண்கள் எத்தனை பேர் தெரியுமா?"[61]

"ஆஸ்திரேலியாவைப் பற்றியும் அமெரிக்காவைப் பற்றியும் இமய மலையைப் பற்றியும் மிசிசிபியைப் பற்றியும் எக்ஸ்ரேயைப் பற்றியும் அணுக்குண்டைப் பற்றியும் அறியும் அறிவால் இவ்வாழ்க்கையைச் செம்மையாக நடத்த முடியாது என்றும், மனத்தைப் பற்றி அறிந்து ஒழுகினால்தான் சீராக நடத்த முடியும் என்றும் விளக்கினேன். மற்றப் பொருத்தங்களைவிட மனப்பொருத்தமே முதன்மையானது என்றேன்."[62]

---

60. பக். 44, 45.
61. பக். 45.
62. பக். 69.

"வீடு திப்பற்றி எரியும்போது? எதை முதலில் எடுத்துக் காக்க வேண்டும் என்ற அறிவு எல்லோர்க்கும் இயற்கையாக உள்ளது. கந்தலையும் குப்பையையும் துடைப்பத்தையும் முறத்தையும் அப்போது யாரும் எடுத்துச் செல்வதில்லை. பெட்டியையும் பேழையையும் முதலில் எடுத்துக் காக்கிறார்கள். அதற்கு அடுத்தபடியும் வாய்ப்பு இருந்தால் துணிமணிகளையும் உணவுப் பொருள்களையும் எடுக்கிறார்கள். சிறந்தது இது. ஆகையால் இதை முன்னே எடுக்க வேண்டும் என்று தெளிவு இயற்கையாக இருக்கிறது. சிறப்பு இல்லாதது இது. ஆகையால் எரிந்துபோனால் போகட்டும் என்ற துணிவு மனப்பான்மையும் இருக் கிறது.

இது புறத்தே நேரும் நெருக்கடி. அகத்தே — உள்ளத்தில் — நெருக்கடி நேரும்போது இவ்வாறு நடந்துகொள்ள வல்லவர்கள் எப்போதும் எந்தத் துறையிலும் வெற்றிபெற முடியும். எதை எதை விடாமல் போற்றுவது என்றும், எதை எதைக் கைவிடத் துணிவது என்றும் தெளிவாக உணர்ந்து நடக்க வேண்டும்.

தேர்வுக்குப் படிக்கும் மாணவன், தேர்வு நெருக்கத்தில் பாட நூல்கள் முதன்மையானவை என்று உணர்ந்து மற்றவற்றைக் கைவிடத் துணியாவிட்டால் பயன் என்ன? கலையில் ஈடுபட்ட கலைஞன் தன் கலைத்துறைக்கு உரியவற்றைப் போற்றுவதோடு, நெருக்கடியில் மற்ற வற்றை மறக்காவிட்டால் பயன் என்ன? நாட்டுத் தொண்டில் ஈடுபட்ட ஒருவன் நெருக்கடி நேரும்போது தன் மனைவி மக்களையும் எதிர்காலத் தையும் பொருட்படுத்தாமல் தள்ளிவைக்கத் துணியாவிட்டால் பயன் என்ன?". [63]

*படிக்க வேண்டிய நூல்கள்*

பெண்கள் படிக்க வேண்டிய நூல்கள் என்று ஆசிரியர் குறிப்பிடும் நூல்கள் பின்வரும் அவர் கூற்றால் விளங்கும்:

"இளங்கோ எழுதிய கண்ணகியின் காவியத்தைப் படி; பலமுறை படி; என்றும் படி. குயூரி அம்மையாரின் வரலாற்றையும் கஸ்தூரிபா காந்தியின் வரலாற்றையும் திரும்பத் திரும்பப் படி. இவை போன்ற வற்றை மேன்மேலும் படித்துக் கொண்டிரு." [64]

*நட்புப் பற்றி நவில்வன*

நட்பை எவ்வாறு நாடிப் பெற வேண்டும் என்பதனைப் பின்வரும் பகுதியில் டாக்டர் மு. வ. அவர்கள் விளக்குகின்றார்கள்.

---

62. பக். 69.
63. பக். 73.
64. பக். 7.

"ஷேக்ஸ்பியர் என்னும் ஆங்கிலப் புலவர் கண்டவரோடு எல்லாம் பழகிப் புதிய புதிய நட்புகளைப் பெருக்க வேண்டாம் என்று அறிவுரை வழங்கியிருக்கிறார்."[65]

*நாசூக்கான திட்டல்*

தாம் கூறவந்த கருத்தினை நாசூக்காக வெளிப்படுத்துதலில் டாக்டர் மு. வ. திறன் வாய்ந்தவர் என்பதனைப் பின்வரும் பகுதிகளில் காணலாம் :

" மானம் இழந்து வாழ்கின்ற பெண்களைப் பற்றி நான் குறிப்பிட வேண்டியதே இல்லை. பாத்திரம் துலக்கினாலும், முறுக்கு வேர்க்கடலை விற்றாலும், பிச்சை எடுத்தாலும் வேறு என்ன செய்தாலும் சரி; மானத்தையும் விட்டு ஒழுக்கமும் கெட்டு வாழத் தொடங்குகின்ற பெண்கள், முன் குறித்தவர்களைவிட ஒரு சிறிது நன்றாகவே வாழ் கிறார்கள் ! எல்லாம் நம் சமுதாயப் பெருமை !"[66]

"திருவள்ளுவரின் அறத்தைப் பற்றியும் கண்ணகியின் தியாகத் தைப் பற்றியும் காந்தியடிகளின் வாய்மையைப் பற்றியும் கஸ்தூரி பாவின் உறுதியைப் பற்றியும் எளிய வாழ்வின் செம்மையைப் பற்றி யும் இல்லறத்தின் அமைதியைப் பற்றியும் ஏழைகளின் முன்னேற்றத் தைப் பற்றியும் உலக ஒருமைப்பாட்டைப் பற்றியும் பேசும்போக்கு எங்கே உள்ளது? இவைகளை எல்லாம் சில ஆண்டுவிழா மேடை களுக்கு என்றே ஒதுக்கிவிட்டார்கள் போல் தெரிகிறது."[67]

*மனைவி போற்ற வேண்டிய நெறிகள்*

இல்வாழ்க்கையில் நிறைந்த பயனை வெற்றி காண்பதற்கு மனைவி ஒருத்தி கடைப்பிடிக்க வேண்டிய கோட்பாடுகளாக டாக்டர். மு. வ. அவர்கள் வற்புறுத்தும் கருத்துகள் பின்வருமாறு :

"கணவனோடு வாழும் ஒருத்திக்குக் கணவனுடைய அன்பே முதன்மையானது; மக்கள் இரண்டாம் நிலையினர்; கணவன் பெற் றோரும் தன் பெற்றோரும் மூன்றும் நிலையினர்; நண்பரும் உறவினரும் நான்காம் நிலையினர்; புகழும் மதிப்பும் ஐந்தாம் நிலையின; கலையும் பொழுதுபோக்கும் ஆறும் நிலையின; தெருவாரும் ஊராரும் ஏழாம் நிலையினர்; இப்படியே மற்றவற்றையும் மற்றவர்களையும் முறைப் படுத்தி வைத்துக் கொள்ளலாம்."[68]

"அன்புக்காக விட்டுக்கொடுத்து இணங்கிநட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே என்று நான் 'சொல்வேனானால், அது

65. பக். 71.
66. பக். 46.
67. பக். 76.
68. பக். 74.

உனக்கும் உன்னைப் போன்ற பெண்களுக்கும் மட்டும் சொல்லும் அறிவுரை என்று எண்ணாதே. என்னுடன் பழகும் நண்பர்களான ஆண்கள் பலர்க்கு இதையே நான் சொல்லியிருக்கிறேன். 'ஒருவர் பொறை இருவர் நட்பு என்னும் நாலடியாரின் பொன்மொழி இல் வாழ்க்கையின் மந்திரமாக விளங்க வேண்டும் ; ஒருவேளை கணவனும் இன்னொரு வேளை மனைவியுமாக விட்டுக் கொடுத்தால்தான் வாழ்க்கை எளிதாக நடக்கும்.''[69]

''ஆகையால், உலகப் படைப்பை மட்டும் அறிதலும், உலக வர லாற்றை மட்டும் படித்தலும், காவியங்களை மட்டும் கற்றலும், கடவுளை மட்டும் பூசித்தலும் இருந்துவிட்டால் பரந்த நோக்கம் வந்து விடாது. ஏழைகளின் முன்னேற்றத்தை எண்ண வேண்டும்; சுற்றுப் புறம் சீர்பெற வழிகோல வேண்டும்; ஆடம்பர மோகத்தை அகற்ற வேண்டும்; தம் குறையைத் தாமே உணர வேண்டும்; மேற் சொன்ன வற்றோடு இந்த நான்கும் பொருந்தினால்தான் குறுகிய நோக்கம் ஒழிந்து உயர்ந்த வாழ்வு அமையும். விவேகாநந்தரின் வாழ்வையும் ஆராய்ந்து பார்.''[70]

### அவல ஓவியங்கள்

கிராமத்தில் பெண்ணையும்,[71] வேலைக்காரியையும்,[72] முறுக்கு விற்கும் கிழவியையும்[73] படம் பிடித்துக்காட்டி, நம் நெஞ்சில் இரக்கம் தோன்ற வைக்கிறார்.

### நடைச்சிறப்பு

டாக்டர் மு. வ. அவர்கள் கையாளும் நடை எளிமையானது; இனிமையானது; சிக்கலற்றது; தூய்மையும் தெளிவுங் கொண்டது; திட்பமும் நுட்பமும் செறிந்திலங்குவது. இதனை இக் கட்டுரையில் மேற்கோளாகக் கையாண்டிருக்கும் பகுதிகள் கொண்டே அறியலாம்.

'நினைத்ததை எழுதாமல் நினைத்து எழுதியவர்' என்று நம் தமிழக முதல்வர் டாக்டர் கலைஞர் அவர்கள் தம் இரங்கல் உரையில் குறிப் பிட்டது இங்குக் கருதத் தக்கது.

''உங்கள் அன்பான இல்வாழ்க்கை வளர்பிறைபோல் வளர வேண்டும் என்று விரும்புகின்றேன். அது என் வாழ்த்துதலில் இல்லை; நீங்கள் வாழும் முறையில் இருக்கிறது''[74]

---

69. பக். 12; 13.
70. பக். 79.
71. பக். 43.
72. பக். 44; 45.
73. பக். 45.
74. பக். 7.

“பசி எடுக்கின்ற வயிறு உள்ளவர்கள்தான் வயிறுரச் சாப்பிட முடியும். அடங்கி நடக்கின்றவர்கள்தான் உரிமையின் நன்மையை அனுபவிக்க முடியும்.”[75]

“அன்புக்காக விட்டுக் கொடுத்து இணங்கி நட, உரிமைக்காகப் போராடிக் காலம் கழிக்காதே”.[76]

“ஆடம்பரம், ஆணவம், ஆரவாரம் இவைதான் இந்தக் காலத்து நாகரிகத்தின் உயிர்நாடிகள். தனி வாழ்க்கையில் மனம் பண்படுவதற்கு இவைகள் தடைகள் என்பது என் கருத்து.”[77]

“அம்மா! நீ கணவனுடைய மனம் அறிந்து நடந்து கொள்வதில் வல்லவளாக இருக்க வேண்டும். மனம்தான் வாழ்க்கை. மனம் அறிந்து மகிழ்விக்கத் தெரியாத பெண்கள், அழகு பண்பு திறமை எல்லாம் இருந்தும் வாழ்க்கையில் ஏமாந்து துன்புறுகிறுர்கள். அழகும் பண்பும் திறமையும் குறைவாக இருந்தாலும், மனம் அறிந்து நடக்கத் தெரிந்த பெண்கள் வெற்றி பெறுகிறுர்கள்.”[79]

டாக்டர் மு. வ. அவர்கள், ‘கருத்துகளே ஆற்றல்மிக்க படைக் கலன்கள்’[80] என்று எண்ணியதனை இந்தப் பகுதிகள் உணர்த்தும்.

சுருங்கச் சொன்னல் டாக்டர் மு. வ. அவர்களின் ‘தங்கைக்கு’, திருவள்ளுவர் காட்டும் இல்வாழ்க்கைச் சிறப்பினை உணர்த்த வந்த ஒப்பற்ற உயரிய நூல் எனலாம்.

---

75. பக். 11.
76. பக். 12.
77. பக். 32; 33.
78. பக். 38.
79. பக். 61; 62.
80. பக். 43.

# SYNONYMS

Dr. A. Chidambaranatha Chettiar
*(Chief Editor, English—Tamil Dictionary)*
*University of Madras.*

The discriminate use of words which appear to be almost equivalent or interchangeable is one of the subjects that engage the attention of persons studying the problems of meaning. Synonyms are words of like significance in the main; with a large extent of ground which they occupy in common but also with something of their own, private and peculiar, which they do not share with one another.[1]

Vocabulary is never static. It undergoes changes according to circumstances such as different technical equipment, social relations and callings which are causes for modification of meanings. There is a perpetual going and coming of words, as Vendryes[2] says. The old ones are not necessarily driven out, for the mind accommodates itself to the existence of synonyms and doublets. To the synonyms naturally, different uses are assigned. There arise, therefore a variety of words, kindred in meaning but distinct in usage. They are not identical at once in signification and use.

Synonyms have certain common ground within which they are interchangeable; but they have a special province within which any-other word comes as an intruder.[3] Macaulay says, "Change the structure of the sentence; substitute one synonym for another, and the whole effect is destroyed." Macaulay is himself noted for the exquisite precision in the choice of words. A careful and intelligent selection of one word in preference to another, though both may be used interchangeably is one of the distinguishing characteristics of a good writer.

